"ஜுபிலி"

# தமிழ்ப் பேரகராதி

மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் மாணவரும், சென்னை கோவிந்து நாயகர் பாடசாலையிலும் சென்தோம் உயர்தரக் கல்லூரியிலும் தமிழ்ப் பண்டிதராக இருந்தவருமாகிய

நெல்லை

**திரு., எஸ். சங்கரலிங்க முதலியாரவர்களால்**

யாழ்ப்பாண அகராதி முதலிய பல அகராதிகளைக்கொண்டு புதுக்கியும், திருத்தியும், விளக்கியும் செம்மைசெய்யப்பெற்றது

முதற் பதிப்பு

**B. அரங்கசாமி நாயகர் அவர்களால்**

வெளியிடப்பெற்றது.

 1935. [விலை ரூபா 15-0-0

# IN MEMORY

OF THE

# SILVER JUBILEE

OF THEIR

MOST GRACIOUS & IMPERIAL MAJESTIES

KIN[illegible]ROR GEORGE V & QUEEN MARY.

*6th May 1935.*





தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்ததும் முதலை
உண்ட பாலனை யழைத்ததும் எலும்புபெண் உருவாக்
கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்

என்ற ஆன்றோர் அருள் வாக்குப்படி அன்றும், இன்றும், என்றும் அற்புதம் நிகழ்த்தி ஒரு படித்தாய் நிற்கும் தேனினு மினிய தென் தமிழ் மொழியை விரும்பாதார் யாவர்? அம்மொழி மாட்டு அன்புடையார் எவரும் அதனை வளர்க்கப் பின்வாங்கமாட்டா ரன்றோ?

அம்மொழிமீது பற்றுடைய யானும் அதனை வளர்க்கப் பலவழிகளுளவேனும் சிறந்த உயரிய தமிழ் நூல்களை நன்கு பதிப்பித்துக் குன்றுந்த விலைக்கே கொடுத்துவரும் ஒரு வழியையாவது பின்பற்றி என்னு லியன்ற தமிழ்த்தொண்டை இதுகாறும் செய்துகொண்டே வருகின்றேன்.

தமிழ்மொழி நன்கு பரவுவதற்கு ஏற்றதோர் அகராதி இன்றியமையாததாகும். இதுவரை சதுரகராதி, யாழ்ப்பாண அகராதி, இருபதாவது நூற்றாண்டு அகராதி, கதிரைவேற்பிள்ளை அகராதி, இலக்கியச்சொல்லகராதி என்ற அகராதிகள் வெளிவந்துள்ளன வேனும் அவற்றுளும் இக்காலத்துப் பல அகப்படுதல் அரிதாயிற்று. அதனால் சென்னை பச்சையப்பன் உயர்தரக் கலாசாலையில் போதகாசிரியராக இருந்த மணி. திருநாவுக்கரசு முதலியா ரவர்களின் மாணவரும், சென்னை கோவிந்துநாயகர் பாடசாலையிலும், சென்தோம் உயர்தரக் கல்லூரியிலும் தமிழ்ப் பண்டிதராக இருந்தவரும் ஆகிய திரு வாளர். எஸ். சங்கரலிங்க முதலியா ரவர்களைக் கொண்டு பல நூற்றுக்கணக்கான சொற்களைக் கூட்டிக் கூடியவரை பிழைகளைத் திருத்தி விடுபட்டவைகளைச் சேர்த்துப் புதியமுறையில் அமைத்து "ஜூபிலி தமிழ்ப்பேயரகராதி" என இதனை அச்சிட்டுள்ளேன்.

மேலும் இவ்வகராதியில் சோதிடநூற்களிற் பயின்றுவரும் சொற்களும், மருத்துவநூற்களிற் பயின்றுவரும் சொற்களும் ஏராளமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றனவாதலால் அச்சோதிடநூல் வல்லுநர்களும், மருத்துவ நூல் வல்லுநர்களும் தங்கள் நூலாராய்ச்சிக்கு வேறு அகராதிகளைத் தேட வேண்டிய அவசியம் இராதென நம்புகின்றேன். குற்றம் குறையுளவேல் அன்பர்கள் பொறுத்தருள்க.

இப்பேரகராதியை நமது மேன்மை தங்கிய சக்கரவர்த்தி அவர்களின் வெள்ளிவிழாக் கொண்டாட்ட ஞாபகார்த்தமாக வெளியிடுகின்றேன்.

சென்னை
12-6-35.

B. அரங்கசாமி நாயகர்.

# நூன்முகம்

ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத கருவி நூல்களுள் முக்கியமாக வுள்ளது அகராதியேயாகும். இந்த அவசியத்தை நன்குணர்ந்து இற்றைக்குச் சுமார் 200-ஆண்டுகட்கு முன்னர் வீரமாமுனிவர் என்று வழங்கிய பெஸ்கி என்னும் இத்தாலிய பாதிரியார் சதுரகராதி யென்னும் அகராதி யொன்றை நிகண்டு முதலிய நூல்களின் உதவியைக் கொண்டு இயற்றினர். இவ் வகராதி அச்சிடுவிக்கப் பெற்றபொழுது, அது பலவகையான திருத்தங்களுடன் வெளியிடப் பெற்றது. பின்னர் இற்றைக்குச் சுமார் 100-ஆண்டுகட்கு முன்னர் யாழ்ப்பாணத்துப் புலவர்கள் பலர் கூடி "யாழ்ப்பாண அகராதி" என்று வழங்கும் அகராதியை அச்சிடுவித்தனர். இதன்கண் நூற்றுக்கணக்கான பதங்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டன. இந்த அகராதியையும் பிற நூல்களையுந் துணையாகக்கொண்டே வின்ஸ்லோ முதலானோர் தமிழ்-ஆங்கில அகராதிகள் இயற்றினர்.

தமிழ் நாட்டிலே பெரிதும் வழங்கி வந்தது யாழ்ப்பாண அகராதியேயாகும். இவ் வகராதியை அவ்வப்போது நூதன பதங்களைச் சேர்த்துப் புதுக்கிப் புலவர்கள் பலர் அச்சியற்றி வெளியிட்டு வந்தனர். அவர்களுள் காலஞ்சென்ற வித்துவசிரோமணி நா. கதிர்வேற்பிள்ளை யவர்களை இங்குக் கூறத்தக்கவர்கள்.

இவ் வகராதிக ளெல்லாம் சொல்லின் பொருளை ஒருவாறு விளக்கினவே யன்றி சொல்லின் வியுற்பத்தி சொல்லாட்சி விளக்க முதலிய பேரகராதி யியல்புகள் [illegible]தும் அமைந்தன வல்ல. இப் பெருங்குறையை ஒருவாறு நிரப்புதற்கு எண்ணி மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் தமிழ்ச்சொல் லகராதி யொன்று மூன்று தொகுதிகளாக வெளியிட்டனர்.

இப்போது வெளியிடப்பெறும் இத் தமிழ்ப்பேரகராதி நா. கதிர்வேற்பிள்ளை யவர்களது அகராதி காரனேஷன் அகராதி முதலிய பிற அகராதிகளைப் பார்வையிட்டும், வைத்தியம் சோதிட முதலிய சாஸ்திரப் பதங்களை மிகுதியாகச் சேர்த்தும், வேண்டுந் திருத்தங்களுடன் பதிப்பிக்கப் பெற்றதாகும். தமிழ்மொழிப் புலமையிற் சிறந்த வித்துவான்-சோ. சங்கரலிங்க முதலியா ரவர்கள் இதனைப் புதுக்கியும் திருத்தியும் விளக்கியும் பார்வையிட் டிருக்கின்றனர். சிரமம், செலவு முதலியவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாது இப்பெரு நூலைச் செவ்விதிற் பதிப்பித்துதவிய பிரசுரகர்த்தர் B. அரங்கசாமி நாயக ரவர்களது நன்முயற்சி பெரிதும் பாராட்டத் தக்கது.

சென்னை
12-6-35.

S. வையாபுரிப் பிள்ளை, B.A., B.L.,
தமிழ்-லெக்ஸிகன் பதிப்பாசிரியர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

# FOREWORD.

In the development and progress of a language, dictionary forms an essential factor and the compilation of a dictionary is an arduous task for any literary man to undertake. In our sacred mother-tongue so far, only a few efforts are being made to compile dictionaries on modern lines and the Tamil literary world is indebted to the pioneers in this field of activity, who had contributed to the growth of Tamil literature, by their compilations like Chadhura Agaradhi, Yalpana Agarádhi (Dictionary by the Jaffenese Pandits), Twentieth Century Dictionary, Coronation Dictionary, etc.

In this period of the development of our language, when progress in all branches of science and books on a variety of subjects like astrology, medicine, etc. are coming out, compilation of a dictionary to serve to the needs and requirements of the Modern Age, is but most imperative. Mr. Sankaralinga Mudaliar, a student of the late Mani. Thirunavukarasu Mudaliar of the Pachaiyappa's College, whose contributions to the Tamil language and service to the Tamil world are wellknown to the Tamil public, has undertaken the difficult task of getting up a dictionary. In this laudable effort of his, he has taken remarkable pains to make it sufficiently instructive and exhaustive. With the help and guidance of the existing dictionaries, he has contributed to the Tamil world the Jubilee Dictionary, satisfying all requirements. His experience in school as a Pandit and in Journalism as a Sub editor, eminently fitted him for this great task.

Mr. Rangasami Nayagar in publishing this Jubilee Dictionary has rendered a most useful service to the Tamil language and to the Tamil public. He belongs to a family which has become sufficiently famous by serving a large section of the Tamil public by their innumerable Tamil publications.

Coming as it does in memory of the Silver Jubilee of Their Majesties it is bound to appeal to all. May this work receive the patronage and support of the Tamil world is the humble prayer of

M. S. KOTISWARAN, B.A., L.T.,




"நவசக்தி" ஆசிரியர்

**திரு. வி. கலியாணசுந்தர முதலியார்**

அவர்க ளியற்றியது

வளரும் உலகே வளரின் மொழியே
சொற்பொரு ளாக்கும் பற்பல வழியில்
கூர்ந்து நூல்கள் ஆர்ந்து வளம்பெற
நல்லக ராதிகள் வல்லவர் ஈந்தனர்
வெல்க தமிழே வெல்க தமிழே
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியத்தின்
உரியியல் நிகண்டெனும் உரிய கருவியால்
மேலை முனிவன் காலைக் கண்டனன்
நூலறி கதிரை வேலன் முதலோர்
எழுப்பினர் நிலையம் விழுப்ப முறவே
ஒப்பனை செய்தனன் திப்பிய உரையால்
மணிமங் கலமீன் மணியிடம் பயின்றோன்
பள்ளியில் தமிழ்ப்பணி உள்ளிய புலவன்
சங்கர லிங்கன் பொங்கு மகிழ்ச்சியால்
நேயகத் தாலிப் பேரக ராதி
நேயன் இரத்தின நாயகன் சேயன்
அரங்கன் வெளியிடத் தரங்கநீர் வைப்பு
நன்று பெற்றதால் என்றும
வெல்க தமிழே வெல்க தமிழே.

---

வாலாஜா முனிசிபல் உயர்தரப் பள்ளியில் தலைமைத் தமிழ்ப்
பண்டிதராக இருந்த வித்துவான்

**கமலநாத முதலியார் அவர்கள்**

இயற்றியன

திருமருவு சென்னைநக ரதனின் மிக்க
சேரர்குலஞ் செய்யுமொரு தவத்தால் வந்தோன்
பெருமைபெறு கல்விபொருள் பெற்றோ னென்றும்
பேணுமடி யார்பூசை விரும்பிச் செய்வோன்

அருமையுட னரங்கநா யகனென் றோதும்
அபிதான மதைவாய்ந்த சாந்த சீலன்
பொருளமைந்த அகராதி ஜூபிலி யாம்நற்
புகழ்பெயரும் பொருள்தொகையும் தொடையி னோடே.

சீராரு மரும்பதங்கள் பலவே யாகத்
தேர்ந்தெடுத்தே யச்சதனிற் பதித்தான் நன்றாய்
நேராரு மாயிரநா னூறு பக்கம்
நிரம்பிடவே புத்தகமாய்த் தொகுத்து வைத்தே
பாராரு மகராதி யெவற்றி னுள்ளும்
பரிந்தெவரும் பன்முறைபா ராட்டிப் போற்றி
ஏராருங் கடல்புடைசூ ழவனி யெங்கும்
இன்புடனே கையாண்டு வாழ்க வாழ்க.

பிங்கலமண் டலபுருடன் திவாக ரத்தில்
பிறங்குமுரிச் சொல்லென்னு நிகண்டி லார்ந்த
இங்கிதமாஞ் சொற்களெலா மெடுத்துக் காட்டி
யெவருமிக நனிவியந்தே யேமாப் பெய்தப்
புங்கமுடன் திருமகளா ரச்சுக் கூடம்
பொலிவெய்த வச்சுதனில் பதிப்பித் தானால்
திங்களணி சடைப்பெருமா னருளி னாலே
ஜெகதலத்தில் நாளுளும் வாழி வாழி.

அன்னையிலும் மினியதய வாகி யார்க்கும்
அன்புவைத்தே யவனிதனி லடைவாய்ச் செய்யும்
மன்னியமா வரங்கநா யகனார் தாமும்
மனைவிமக்க ளுடனோங்கி மன்ன னேபோல்
முன்னவனா ரருளதனால் மொழியுஞ் சொற்கள்
மூதுலகி லெந்நாளும் நிலைபெற் றோங்கி
பன்னாளும் பாருலகில் பரந்த கீர்த்தி
பரமனரு ளால்பெற்றே வாழி வாழி.

மந்திரமு மிலக்கணமுஞ் சோதி டாதி
வல்லகலை யறுபத்து நான்கி லார்ந்த
விந்தைதரு பொருள்களெலா முணர யார்க்கும்
விரிவுடனே பதங்களெலா மொருங்கே கூட்டித்
தந்திரமாய்த் தரணிதனி லுள்ளார் யார்க்கும்
தாயனைய கருணையினான் தந்திட் டானால்
அந்திவண்ணப் பெருமான்ற னருளி னாலே
அவனியிசை வாழிமிக வாழி வாழி.

சென்னை பச்சையப்பன் காலேஜ் ஹைஸ்கூல்

தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

## திருவாளர்-கா. ர. கோவிந்தராஜு முதலியார்

அவர்க ளியற்றியது

பார்திகழ் நலங்கெழு பண்புறு முறைநிச்
சீர்திகழ் முறையினைச் செவ்விதி னுணர்ந்து
போக்கறு புலத்தாற் பொலிவுற மாந்தரை
ஆக்குவ நல்லிய லமைபொருட் கலைகளே
அன்னமாண் கலைகளி னமைபொரு ளுணர்ச்சி
மணியு மொளியும் வாய்ந்துறு மியைபே
சொல்லும் பொருளுந் தோய்ந்துள வாதலின்
சொல்லா னன்றித் தோன்றுவ வலவே
அன்ன தன்மையை யகந்தழீஇ முன்னோர்
இளையரு மெளிதி னிருந்தமிழ் நூற்களின்
சொற்பொரு ளுணர்வைத் துகளறப் பெறுவான்
பகர்பல முறையின் பகுத்தினி தளித்தனர்
தகுந்திறங் கெழுமிய நிகண்டுகள் பலவே
அன்னவை கற்றலு மருமையா மென்று
எத்தேயத் தாரு மினிதுரை புகழ்சால்
இத்தாலி யாவினின் றிந்நாட் டெய்திச்
செந்தமிழ் நூற்களைச் செவ்விதி னுணர்ந்து
நுண்பொரு ணலமுறு நூல்பல வியற்றிய
பெஸ்கியென் றுரைக்கும் பெயருறு புலவன்
வியக்குறு மறிவினன் வீரமா முனிவன்
ஒருபெயர் பலபொரு ளுளங்கொளக் காட்டும்
பெயரக ராதியென் றியம்புறு பகுதியும்
ஒருபொருட் கேய்ந்த பலபெயர் விளக்குறூஉம்
பொருளக ராதியென் பொற்புறு பகுதியும்
இவ்வித் தொகையினி லிவ்விப் பொருளுள
எனுமுறை தெரித்திடற் கியைபுற வமைந்த
தொகையக ராதியென் றோய்திறப் பகுதியும்
இயம்புறுப் பியாப்பி னெதுகைத் தொடையமை
தொடையக ராதியென் சொல்லியற் பகுதியும்
எனுநாற் பகுதியி னியைதரு நலமார்
சதுரக ராதியைத் தந்தனன் வகுத்துப்
பன்னிய வதனை முன்னரும் புலத்தோர்
அதனிடைக் காணற் கரியன சொற்கள்
ஆயிர மாயிர மாக வதன்பாற்
பெய்தனர் பெருக்கிப் போகக ராதியா
அமைத்தனர் சில்லோ ரதன்பாற் சிலகொடு

சிறுமா ணவர்கொளச் சிற்றக ராதிகள்
அமைத்துத் தந்தன ரன்னவை யாவையும்
ஆய்ந்தன னினிதி னமைவுற நோக்குபு
பெருகின வளர்ந்த பேரக ராதிகள்
தமிலிலாப் பற்பல தகைகெழு சொற்களைச்
சேர்த்தனன் செப்பமார் சீர்திகழ் சூபிலி
அகராதி யெனவோ ரகராதி தந்தனன்
திருநாவுக் கரசெனும் பெருநா வலவன்
தன்பால் தமிழ்நூல் தகவுறக் கற்றோர்
தம்மி லொருவன் றழைதரு புலத்தோன்
வேளாண் குலத்தினன் றாளா ளனுத்தினன்
தங்கரும் குணங்கள் சார்ந்தவன் பொறையன்
சங்கர லிங்கமென் சாற்றுநற் பெயரோன்
இயம்பிய வதனை யெழுதா வெழுத்தெனும்
அச்சினிற் பதிப்பித் தரும்புகழ் கொண்டனன்
இன்னியல் பலவார் வன்னிய குலத்தினன்
உரங்கெழு செல்வத் துறுநலம் பேணும்
அரங்க சாமியென் றறைகுண மாலே.

---

சென்னைச் சித்தாந்தப் பிரகாச சபைத் தலைவர்,

வித்துவான்

பாரிப்பாக்கம். கண்ணப்ப முதலியார்

அவர்க ளியற்றியன

தெள்ளுதமிழ்ப் பெருங்கடலின் தினகரனென்
றுலகேத்தத் திசைக ளெல்லாம்
ஒள்ளியநல் லிசையென்னுங் கதிர்பரப்பி
எனையாண்ட உலவாச் சீர்த்தி
வள்ளியனும் மணியரசின் அருட்பாங்கால்
தமிழ்ப்புலமை வயங்கி யோங்கும்
தெள்ளியனும் சங்கரலிங் கப்பெயரோன்
தமிழாற்றல் செப்ப நன்றே.

மதிதவழ்செஞ் சடைமுடியான் மகிழ்ந்தருளுந்
தமிழ்மொழியின் மாட்சி சான்ற
கதிதவழும் சொற்களுறு கவின்பொருள்க
ளீதெனவே காட்டி நந்தம்
பதிதவழும் வெள்ளிவிழா வகராதி
யெனவொருநூல் பாவ லோர்தம்
துதிதவழத் தொகுத்ததனே டுலகதனில்
அவன்புகழும் தொகுத்திட் டானால்.

எப்பதத்தின் எப்பொருளும் இனிதுணர்த்து
மாபுணர்த்தி எழிலி னியாத்த
செப்பருநற் பொருளனைத்துஞ் செறிந்திலங்கு
மிந்நூலைச் செய்த வத்தான்
ஒப்பரிய தமிழ்ப்பணியின் உயர்ந்தோங்கு
நலம்படைத்த உளத்தின் மிக்கான்
திப்பியமார் அரங்கசா மிப்பெயரின்
செல்வனவன் சிறக்கு மாற்றுன்.

காண்பார்தம் மனமகிழக் கவின்பெறுமா
றச்சியற்றிக் கனிவி னீந்தான்
மாண்பாரு மிவர்செயலின் வெளிவருமிவ்
வகராதி மாட்சி யோடும்
சேண்போயித் தமிழகத்தின் திசையெல்லாம்
செந்தமிழ்க்கே செய்ய அன்பு
பூண்பார்தம் கையகத்தின் செம்பொருளாய்ப்
புனையெழிலின் பொலிக மாதோ.

---

பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்ப்பேராசிரியராக விருந்த
மணி-திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் சகோதரர்
வித்துவான்

## மணி-திருஞானசம்பந்த முதலியார்

அவர்க ளியற்றியன

திருவாருந் தமிழுலகிற் றனியரசு தானாற்றித்
திகழ்ந்த சீலன்
மருவாரு மெழிற்கொழிக்கு மணிமங்க லப்பதியின்
மாண்வி ளக்காம்
உருவாருந் தனிப்புலவன் திருநாவுக் கரசனவன்
ஒண்மா ணவனும்
கருவாருஞ் சடைவள்ளல் கழற்பணிசங் கரலிங்கம்
களித்து வாழ்க!

எண்ணரிய நூற்கற்று நுண்ணறிவு முடன்பெற்ற
வெழிலார் குணத்தான்
பண்ணரிய வகராதிப் பெருநூலை மிகப்புதுக்கிப்
பாரி லுயர்ந்தான்
நண்ணரிய பொருளெல்லா மதிலமைத்து நாநிலத்தார்
நாவில் நின்றுன்
துன்னரிய தமிழ்ச்சுவையின் தனியமுதைத் தினந்தினமுந்
துய்த்து வாழ்க!

மண்ணுலகி லொளிவீசு மகராதிப் பெருநூல்தான்
மன்னி வாழ்க!
தண்ணளியான் செம்மொழியான் அரங்கனவன் செய்யறங்கள்
தழைத்து வாழ்க!
பண்ணமருந் தமிழுலகி லிந்நூல்தா னெங்கணுமே
பரவி வாழ்க!
ஒண்ணுதலான் தண்ணருளால் நாடெங்கும் தமிழ்ப்புலவ
ரோங்கி வாழ்க!

---

சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்தரக் கலாசாலைத்
தமிழாசிரியர்
மயிலை-சிவ. முத்துக்குமாரசாமி முதலியார்
அவர்க ளியற்றியன

பொன்மிக வாங்கி வாங்கிப் புலவர்கள் பலருங் கூடிப்
பன்னெடுங் காலம் போக்கிப் பாங்குடன் ஆராய்ந் தாக்கும்
மன்னரு சாங்கத் தார்தம் மாண்பக ராதி அன்றோ!
இன்னமும் முற்றக் காணேன் என்னவே பலரும் ஏங்க.

உதவியும் இன்றித் தக்க ஊதி யந்தான் இன்றி
நிதமிராப் பகலு மாக நித்திரை நலனு மின்றி
விதம்வித மாக நந்தம் தமிழிலே விளங்கும் எல்லாப்
பதங்களும் பரந்து மல்கப் பேரக ராதி தந்தான்.

சாற்றுவர் பெயரும் சோம சங்கர லிங்கன் என்றே
நாற்றிசை புகழும் எங்கள் நாவினுக் கரசர் பால்அன்
றூற்றிய தவத்தி னாலே அறிவுநூல் பலவும் கேட்டோன்
போற்றுநற் பாட சாலைப் புலவனும் ஆயி னானால்.

அன்னவன் தொகுத்த நூலை அருமையின் வெளியிட் டோனை
இந்நிலம் அறியும் நன்றே எண்ணிலா நூல்க ளாலே
நன்னய அரங்க சாமி நாயகன் நேர்ந்த நன்மை
உன்னவும் பெரிய தாகும் உரைத்திடற் கரிய தாமே.

---

தருமபுரவாதீன வித்துவான்

**காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை, B. A.**

அவர்க ளியற்றியது

*திறங்கிளர் நெல்லைச் சங்கர லிங்க*
*நேர்மைசால் புலவனற் றுணையால்*
*திறங்கிளர் தமிழின் றிரண்டபற் சொற்குந்*
*தெளிபொருள் நயம்பட வுரைக்கும்*
*பிறங்கொளி ஜூபிலிப் பேரக ராதிப்*
*பெயர்கொளு நூலினைத் தொகுத்தான்*
*அறங்கிளர் சென்னைக் கணியெனத் திகழும்*
*அரங்கநற் சாமிநா யகனே.*

---

கம்பராமாயண ஆராய்ச்சியாளரும், பக்தவிஜய நூலாசிரியரும்,

சிறந்த தேசபக்தருமாகிய

**கடப்பேரி - ஜமதக்னி**

அவர்க ளியற்றியன

*திருமகளச் சுக்கூடச் செல்வனும் சீமான்*
*அரங்கசாமி செய்ததே அன்பு—பெருகத்*
*தமிழ்ச்சலதி தன்னின் எழிலக ராதி*
*யிமயமலைதேர்ந்தேன் இன்று.*

*தமிழர் பயின்று தமிழ்மொழிக்குச் சேவை*
*அமைவாய்ச் செயவிரும்பின் இன்றே—அமித*
*உயர்வாகும் ஜூபிலியொண் பேரக ராதி*
*பயில்க தெளியும் அறிவு.*



# பொருளடக்கம்




உ

கடவுள் துணை

# தமிழ்ப் பெயராகராதி



அ — அஃறிணைப் பன்மையீறு, ஆறுருவதன் பன்மையுருபு, இன்மை, எதிர்மறை, குறைவு, சம்மதி, சாரியை, சுட்டு, தடை, பிறிது, வியப்பு, இவற்றைக் காட்டுமோருபசருக்கம், எட்டென்னு மெண்ணின்குறி, ஒரெழுத்து, பெயரெச்ச வினையெச்ச விகுதிகள், பிரமன், விஷ்ணு, சிவன், சுக்கு, திப்பிலி

அஆ - அதிசயவிரக்கக்குறிப்பு, விட்டிசை

அஃக-குறைய, சுருங்க, நுண்மையாக

அஃகம் - ஊற்றுநீர், முறைமை, மா, வெள்ளெருக்கு, தானியம்

அஃகரம்-வெள்ளெருக்கு, கிரிகை

அஃகல்-குறைதல், சுருங்கல்

அஃகாமை-சுருங்காமை, குறையாமை

அஃகான்-அ, முதலெழுத்து

அஃகிய அறிவு-சூட்சும அறிவு

அஃகியஇ-குற்றியலிகரம்

அஃகியஉ-குற்றியலுகரம்

அஃகியஐ-ஐகாரக்குறுக்கம்

அஃகியஔ-ஔகாரக்குறுக்கம்

அஃகியதனிநிலை-ஆய்தக்குறுக்கம்

அஃகியமஃகான்-மகரக்குறுக்கம்

அஃகியவறிவு - கூர்மை, நுண்ணறிவு, விவேகம்

அஃகு-முன்னிலையேவல் வினைப்பகுதி, சுருங்கு

அஃகுதல்-சுருங்குதல், அளவிற்குறைதல், கழிந்துபோதல், குவிதல், நுண்மையாதல், நீர்வற்றல்

அஃகுல்லி-உக்காரி, சிற்றுண்டி, பிட்டு

அஃகுள்-அக்குள்

அஃகேனம்-ஆய்தவெழுத்து, முள்ளில்லாப் பன்றி

அஃது-அது

அஃதை - ஆதரவற்றவன், ஆதரவற்றவள்

அஃபோதம்-நிலாமுகிப்புள்

அஃறிணை-இழிதிணை, உயர்குலம் அல்லாதது

அகக்கடவுள் - ஆன்மா, உயிர்க்குள்ளிறைவன், மனம்

அகக்கணு-அந்தப்பர்வக்ம்

அகக்கண்-ஞானக்கண், மனக்கண்

அகக்காழ்-ஆண்மரம், உள்வயிரம், வச்சிரக்கல்

அகங்கரித்தல்-ஆங்காரங்கொள்ளுதல், கர்வங்கொள்ளுதல்

அகங்கரிப்பு-மனவெறுப்பு

அகங்களித்தல் - மனமகிழ்தல், மனமதர்த்தல்

அகங்களிப்பு-மனமகிழ்வு, உண்மகிழ்வு

அகங்காரக்கிரந்தி - ஆணவமறைப்பு, மாயாபாச மும்மலத்தொடக்கு

அகங்காரத்திரயம்-முக்கிய வகங்காரம் மூக்கியாமுக்கியவகங்காரம், அமுக்கியவகங்காரம் என மூன்று

அகங்காரம் - அகந்தை, உட்கரணம் நான்கினொன்று, கருவம், பிறவிக்கு மூலம்

அகங்காரவிர்த்தி-நான்என்னும்ஞானம்

அகங்காரி-அகங்காரமுடையது, அகங்காரமுடையவள், அகங்காரமுடையவன், காளி

அகங்காழ்-அகக்காழ்
அகங்கை-உள்ளங்கை
அகசன்-கேது
அகசியக்காரன்-விதூஷகன்
அகசியச்கூத்து-பகடிக்கூத்து
அகசியம்-அசியம், வேடிக்கை
அகசு-பகல், பொழுது
அகசை-பார்வதி
அகச்சமயம்-சைவசமயத்தினுட்சமயம்
அகச்சுட்டு-சொல்லகத்து முதனிலையா யமைந்து நிற்குஞ்சுட்டு
அகச்சுவை - நாடகரசத்தொன்று, ஞானம்
அகடசக்கரம்-உதரபந்தனம் என்னும் மணி
அகடம்-அநீதி, சித்தியாமை, பொல்லாங்கு
அகடவிகடம் - அபாயம், இரண்டகம், தட்டுமாற்று, வஞ்சகம், குறும்பு
அகடனம்-கேடு, செய்யப்படாதது
அகடன்-துஷ்டன்
அகடிதகடனா-மாயகாரியஞ்செய்தல்
அகடிதகடனாசமர்த்தன் - மாயா காரியஞ்செய்யவல்லவன்
அகடிதம்-நிறைவேற்றற்கரியது
அகடியம்-அநீதி
அகடு-உள், சீர், நடு, பொல்லாங்கு, மேடு, வயிறு
அகடூரம்-கொடுமையின்மை
அகடூரி-பாம்பு
அகட்டுத்தே-விநாயகன்
அகணம்-இலகு
அகணி-உள், கடுக்காய், சுக்கிரப்புரணி, நஞ்சு, தெங்கு, பனை முதலியவற்றின் நார், நஞ்சு, மருதநிலம், வயல்
அகணித பஞ்சாங்கம் - அலகிடாது சொல்லும் பஞ்சாங்கம்
அகணிதபஞ்சாங்கி-கணியாது பஞ்சாங்கஞ்சொல்வோன்
அகணிதம்-எண்ணிக்கையின்மை, மனக்கணிதம்
அகண்-அருகு
அகண்டகம்-முள்ளில்லாதது
அகண்டசுருதி - விரிவாய்ப் பொருளுணர்த்தும் நூல்
அகண்டஞானம்-பரிபூரண அறிவு
அகண்டத்துவம்-எதனாலும்சேதப்படாதிருக்குந்தன்மை
அகண்டபதம்-பிரம்மபதம்
அகண்டபரிபூரணம் / அகண்டபூரணம் } எங்கும் நிறைந்திருத்தல்
அகண்டம் - மூளை அபின்னம், எல்லாம், கண்டிக்கப்படாதது, மண்விளக்கு
அகண்டவடிவம்-பரந்த உருவு
அகண்டவாக்கியம் - விட்டும் விடாத விலக்கணை
அகண்டன்-அருகன், கடவுள், சிவன், பூரணன், விட்டுணு
அகண்டாகண்டன்-கடவுள்
அகண்டாகாரஞானம் - பரிபூரணஞானம்
அகண்டாகாரம்-விசாலம்
அகண்டாகாரவிருத்தி - அஞ்ஞானநீக்கிச் சீவசாட்சியைத்தோற்றுவிப்பது
அகண்டாகார விருத்திஞானம் - பேரறிவு
அகண்டி-ஓர் வாச்சியம்
அகண்டிதம் - ஏற்றுக்கொள்ளல், கண்டிப்பில்லாதது, கூறுபடாமை, முழுதும்
அகண்டிதன்-எங்குமநிறைந்தவன்
அகதங்காரன்-வைத்தியன்
அகதம்-ஓர் குளிகை, சுகம்
அகதன்-பிணியில்லாதவன்
அகதன்ம - நாற்சுரக்கூட்டு, அல்லது நாற்சுரவடுக்கு
அகதி - திக்கற்றவன், தகுதியற்றவன், தில்லைமரம், போக்கற்றவன், வறியவன், வேலமரம்
அகதீதம்-ஊடுசெல்லற்கரியது
அகதேசி - உள்ளூர் யாசகி, அரதேசியென மருவியது
அகதேசு-பிணியில்லான்
அகத்தடியாள்-மனையாள்
அகத்தன்-இடத்தன், கருத்தா அல்லாதவன்
அகத்தார்-உள்ளோர், குடும்ப சினேகிதரு முறவினரும்
அகத்தி-ஒருமரம், இது சாழையகத்தி, சிற்றகத்தி, „ செவ்வகத்தி யென மூவகை, உள்ளிருப்பவள்
அகத்திட-உள்ளிட
அகத்திணை-உள்ளொழுக்கம்
அகத்திணைப்புறம்-கைக்கிளையும் பெருந்திணையும்

அகத்திணையியல்-களவொழுக்கத்தின் இலக்கணம்
அகத்தியம்-அகத்தியராற்செய்யப்பட்ட இலக்கணநூல், அவசரம், தேவை
அகத்தியர்குழம்பு-ஓர்மருந்து
அகத்தியவாசம்-பொதியமலை
அகத்தியன்-ஓர்இருடி, குறுமுனி, இவர் மட்கலயத்தில்பிறந்து, முருகக்கடவுளிடத்தில் தமிழ்ப்பாஷை உபதேசம் பெற்று, லோகோபகாரமாய் ஸ்காந்தம், ஜோதிடம், வியாகரணம், வைத்தியம் முதலான புத்தகங்கள் செய்ததாகவும், தேவர்களைக் காக்கும் பொருட்டு சமுத்திரங்களைப் பானம்பண்ணி விட்டதாகவும், சிவபெருமா னுமாதேவியைத் திருமணஞ் செய்தகாலத்து, வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்தமை கண்டு அங்ஙனமாகாது பொதியமலையிற்சென்றிருந்து சமனுறச்செய்தவரென்றும், திருக்குற்றாலத்தில் விஷ்ணுமூர்த்தியைச் சிவலிங்கவடிவாக்கினவரென்றும், அங்குட்டப்பிரமாண முள்ளவரென்றும் தெரிகிறது
அகத்தியா-ஆழம், எட்டாமை, கடல்
அகத்தினள்-மனைவி, இல்லக்கிழத்தி
அகத்தீசராறுகு-அகஸ்தீயேசராறுகு, இது சிற்றறுகம்புல், பேராறுகம்புல் என இருவகை
அகத்தீடு-கைக்குள்விட்டணைத்தல்
அகத்துறுப்பு - உள்ளவயவம், உள்ளியல்
அகத்தை-தாய்
அகநகர்-உள்நகர், நகருள்
அகநகை-இகழ்ச்சிநகை
அகநாடகம்-அகக்கூத்து
அகநாடு-உண்ணாடு
அகநிர்ணயம் - ஆசௌச விதிகளைக் கூறும் ஒரு வடமொழிநூல்
அகநிலை-உள்நிலை, கடவுள்
அகநிலைக்குறிஞ்சி-ஒருபண்
அகநிலைச் செயப்படுபொருள் - வினைச்சொல்லினகத்தே செயப்படுவதாக நிற்குஞ்சொல்
அகநிலைச்செவ்வழி-ஒருபண்
அகநிலைப்பாலை-ஒருபண்
அகநிலைமருதம்-ஒருபண்

அகந்தை-ஆங்காரம், செருக்கு
அகப்பகை-உட்பகை
அகப்பக்கம்-உட்பக்கம்
அகப்படல்-அகப்படுதல்
அகப்படுதல்-உட்படுதல், கிடைத்தல், கிட்டுதல், சிக்குதல், வசப்படுதல்
அகப்படுத்தல்-பிடித்தல், உட்படுத்தல்
அகப்பட்டி-சுருங்கியபட்டி
அகப்பட்டியாவார்-மனம்போல் நடப்பவர்
அகப்பணி - மனத்தொழில், வீட்டுவேலை
அகப்பத்தியம்-மனோவிரதம்
அகப்பரம்-வேதிகை
அகப்பற்று-மனவிருப்பு
அகப்பா - அகழி, மதிலுண்மேடை, மதில்
அகப்பாடு-அகப்படுதல்,உண்ணிகழ்ச்சியானது
அகப்பாட்டு - அகப்பொருள் பற்றிப் பாடப்படும் பாட்டு, அகநானூறென்னும் நூல்
அகப்பாட்டுவண்ணம் - முடியாது போன்று முடிவது
அகப்பாட்டுறுப்பு-அகத்திணையின் பன்னிரண்டு உறுப்புகள். அவை-இயல்பகத்திணை, வகையகத்திணை,பொதுவகத்திணை, சிறப்பகத்திணை, உவமவகத்திணை, புறநிலையவகத்திணை, எதிர்நிலையகத்திணை, காரணம் அல்லது கருவியகத்திணை, காரியவகத்திணை, காரகவகத்திணை, முன்னவையகத்திணை, பின்னவையகத்திணை
அகப்பு-ஆழம், தாழ்வு
அகப்புறக்கைக்கிளை-காமஞ்சாலா விளைமைத் தன்மையுடைய தலைமகள் பக்கத்துத் தலைமகன் குறிப்பினையறியாது அவளோடு மேன்மேலுங்கூறுவது
அகப்புறச்சமயம் - வேதாகமோக்தச் சைவ சித்தாந்தத்தைப் பிரமாணமாகக்கொண்டு அவற்றுக்கு விலக்கான கொள்கையைச் சாதிக்குஞ் சமயம்; பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், அயிக்கியவாதசைவம் என அது அறுவகைப்படும்

அகப்புறத்திணை-கைக்கிளையும் பெருந்திணையும்

அகப்புறப்பாட்டு-மடலேறுதன் முதலாகத்தபுதாரநிலையீறாகச் சொல்லப்பட்டவியற்பெயர்க்கோடாமையாம்

அகப்புறப்பெருந்திணை - அகன்றுழிக்கலங்கன்முதலாகத் தலைவியுந் தானும்வனமடைந்து நோற்றலீறாகச்சொல்லப்பட்டனவும் பிறவும் கூறுதலாம்

அகப்புறப்பொருள்-கைக்கிளையும் பெருந்திணையும்

அகப்புறமுழவு - எழுவகை முழவுகளுளொன்று

அகப்புறம்-கைக்கிளையும் பெருந்திணையும்; அவை-அகாந்தள், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறைமுல்லை என்னும் பத்து அறுவங்கள்

அகப்பேய்ச்சித்தன்-ஓர் கவி, பதினெண் சித்தரில் ஒருவன்

அகப்பை-சட்டுவம், இது தட்டகப்பை, சாந்தகப்பை, சிற்றகப்பை எனமூன்றுவிதம்

அகப்பொருட்கைக்கிளை - ஒருதலைக்காமம், அதாவது: காமம் நுகர்தற்கமைந்த இளமையையுடைய தலைமகளிடத்துண்டாகிய குறிப்பினைத் தானறியுமளவும் தலைமகன் அவளைச் சாராதுநின்று நெஞ்சொடு கூறல்

அகப்பொருட்கோவை-ஓர் பிரபந்தம்

அகப்பொருட்டுறை-அகப்பாட்டுறுப்புக்கள் பன்னிரண்டனுள் ஒன்று. அது உரைப்போரும் கேட்போருமின்றிக் கவிக்கூற்றாகச் சொல்லப்படுவது

அகப்பொருட்பெருந்திணை - அகத்தின்கணுள்ள இன்பத்தைச் சிலநாள் நுகர்ந்த தலைவனும் தலைவியும் பின் இடைக்காலத்து நுகராமைக்கான இடையூற்றுக் கூற்றுக்களைக் கூறுவது

அகப்பொருள் - உட்பொருள், வீட்டினுள்ள பொருள், ஓரிலக்கணம், அஃது உண்ணிகழ்ச்சியான சிற்றின்பத்திற்குரிய வெழுதிணையைக் கூறும்

அகமகிழ்ச்சி-ஆனந்தம், மனமகிழ்ச்சி

அகமமரம்-வெள்வேலமரம்

அகமம்-மரப்பொது, மலை

அகமருஷணம் } நீர்க்குணின்றுசெய்யு
அகமருடணம் } மோர் செபம்

அகமருடண தீர்த்தம் - ருஷி செபம் சொல்லிச்செய்யும் ஸ்நானம்

அகமலர்ச்சி-அகமகிழ்ச்சி

அகமாட்சி-இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள்

அகமார்க்கம்-அருமையிற்பாடல், உள்வழி, மந்திரக்கிரமம்

அகமிதம்-நான் இது என்பது

அகமுகம்-உண்முகம், அந்தர்முகம்

அகமுடையாள்-வீட்டுக்காரி

அகமுடையான்-வீட்டுக்காரன்

அகமுழவு-எழுவகை முழவுகளி லொன்று. அது உத்தம கருவியான இடக்கை, கரடிகை, குடமுழா, அல்லிகை, படகம், பேரிகை, மத்தளம் எனப் பலவகைப்படும்

அகம்-ஆகாயம், ஆழம், ஆன்மா, இடம், உபத்திரவம், உள், உள்ளிடம், எழுனுருபு, ஓர்மரம், குணுகுணம், சூரியன், தானியம், துக்கம், பள்ளம், பாம்பு, பாவம், பூமி, மரப்பொது, மலை, மனம், வீடு

அகம்படித்தொண்டு - அந்தர்முகமாக நின்றுசெய்யுந்தொண்டு

அகம்படிமை-உள்தொண்டு

அகம்படியார்-உள்வேலைக்காரர், ஓர் சாதியார்

அகம்பாவம்-உட்செருக்கு, நான் என்னும் கர்வம்

அகம்பிரமம்-ஆங்காரம், நானே பிரமமெனல்

அகம்மதி-அறியாமை, தற்பிரியம்

அகம்மியம் - பத்திலட்சங் கோடி, கோடி, கோடாகோடி, ஒரெண்

அகம்மியை-பொதுமகள்

அகரம் - இரதம், எழுத்தின்சாரியை, ஓரெழுத்து, பார்ப்பனச்சேரி, மருதநிலத்தூர், வீடு

அகராதி-அகரமுத லெழுத்துக்களாற்றொடங்குஞ் சொற்கோவை

அகரிஷணம்-துக்கம், வெறுப்பு

அகரு-அகில்

அகருதம்-வீற்றிருத்தல்
அகர்த்தத்துவம்-அழிக்குந்தத்துவம்
அகர்த்தனன்-குள்ளன்
அகர்த்தா-செயற்கையற்றவன், பஞ்சகோசங்கட்கன்னியன்
அகர்த்தியம்-கிருத்துவம்
அகர்ப்பதி-சூரியன்
அகர்மகர்த்தரிப்பிரயோகம்
அகர்மகர்த்துருப்பிரயோகம் } செயப்படுபொருள்குன்றியவினை
அகர்முகம்-உதையகாலம், வைகறை
அகர்ம்மணி
அகர்ம்முகம் } உதையகாலம், வைகறை
அகலக்கட்டை-அகலமற்றது
அகலம்-தரவை, மார்பு, விசாலம், விரிவு
அகலர்-சண்டாளர்
அகலல்-நீங்கல், விரிதல், விருத்தித்தல்
அகலவுரை-விரித்துரை, அஃது இலக்கணமும் இலக்கியமு மெடுத்துக் காட்டிப் பொருள் விரித்துரைக்கும் விரித்துறை
அகலறை-பாசறை, மலைப்பக்கம்
அகலிகை-கௌதமர்பத்தினி, பஞ்சகன்னிகைகளி லொருத்தி, இவளைத் தேவேந்திரன் மோகித்துக் கௌதமரை வஞ்சகமாய் ஸ்நானத்துக்குப் போக்கிப்புணர, கௌதம ரறிந்து கல்லாய்ச்சபிக்க, இராமர் விஸ்வாமித்திரரோடு மிதிலைக்குப் போம்போதவர் காற்றூசுபடச் சாபவிமோசனமானாள்
அகலிடம்-பூமி
அகலியம்-ஓர்மரம், மரப்பொது
அகலுதல்-அகன்றுபோதல், நீங்குதல், விரிதல்
அகலுள்-அகலம், ஊர், நாடு, பெருமை
அகல்-அல்குல், சட்டி, தகழி, நீங்கல், நீங்கென்னேவல், பிரிதல், பெருமரம், விசாலித்தல், வெள்வேலமரம்
அகல்கை-அகலல்
அகல்வு-அகலம், அகலல்
அகல்வோர்-ஈனர்
அகல்வோர்-நீங்கிப்போவோர்
அகவ-ஒலியாநிற்க
அகவடி-உள்ளங்கால்
அகவர்-அழைத்துப்போவோர், சூதர்
அகவலிசை-அகவலோசை

அகவலுரிச்சீர்-ஈரசைச்சீர்
அகவலோசை - ஆசிரியப்பாவிற்குரிய வோசை
அகவல்-அழைத்தல், ஆசிரியப்பா, ஆடல், ஒருசந்தம், மயிற்குரல்
அகவற்சீர்-அகவலுரிச்சீர்
அகவற்சுரிதகம்-ஆசிரியச்சுரிதகம்
அகவற்பா-ஐந்துபாவினொன்று, அது நாற்சீரான் வருமளபடியாயும் இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியுந்தன்றளை தழுவியும் பிறதளை மயங்கியுங் கருவிளங்கனி கூவிளங்கனியென்னுமிருசீர்கலவாது மூன்றுமுதலிய பல வடிகொண்டு முடிவது
அகவற்றாழிசை-ஆசிரியப்பா வினத்தொன்று
அகவற்றுறை - ஆசிரியப்பா வினத்தொன்று
அகவற்றுள்ளல்-வெண்டளையுங் கலித்தளையும் விரவிவருவது
அகவற்றூங்கல்-ஒன்றாத வஞ்சித்தளையான்வருவது
அகவாட்டி-மனையாள்
அகவாளன்-மனையான்
அகவிதழ்-உள்ளிதழ்
அகவிலை-தானியவிலை
அகவு-அமுக்கரா
அகவுதல்-அழைத்தல், ஆடல்
அகவேற்றம்-தானியவிலையேற்றம்
அகவை-உட்பொருள், வயது
அகழல்-தோண்டல், அகழ்தல்
அகழானெடுத்தல்-தோண்டுதல், எலிகளைப்போல வளையுண்டாக்கி மணலைப் புறம்பே தள்ளுகிறது
அகழான்-ஓரெலி, வயலெலி
அகழி-அகழ், மதில்சூழ்கிடங்கு
அகழுதல்-தோண்டல்
அகழெலி-அகழான்
அகழ்-அகழி, தோண்டென்னேவல்
அகழ்தல்-உழுதல், தோண்டல்
அகளங்கமூர்த்தி-கடவுள், புத்தன்
அகளங்கம்-சீதாங்கபாஷாணம், சுத்தம்
அகளங்கன்-ஓர் சீமான், கடவுள், புத்தன், மாசிலான்
அகளம்
அகளி } தாழி, நீர்ச்சால், மிடா
அகளர்-நிஷ்களர்

அகவல்-அகவல், அகலுதல், கடத்தல்
அகற்சி-பிரிவு, அகலம், நீக்கம்
அகற்றுதல்-அகலப்பண்ணுதல், துரத்துதல், விரித்தல்
அகனம்-கனமில்லாதது, பெருமையின்மை
அகன்-அகன்ற அகாசுரன், உள்விளே முதற்பொருள்விகுதி (உ-ம்)நாயகன்
அகன்பணே-அகன்ற மருதநிலம்
அகன்மகதாது - செயப்படுபொருளில் வந்த வினைப்பகுதி (உ-ம்) நட
அகன்மக்கத்திருப்பிரயோகம் - செயப்படுபொருளிலாவினை (உ-ம்) நடந்தான்
அகன்மணி-தெய்வமணி
அகன்றில்-ஆணன்றில்
அகன்னம்-செவிடு
அகஸ்மாத்து-தற்செயல், காரணமில்லாமை
அகாசரம்-அறியாமை
அகாடி-புரவி, முன்னங்காற் கயிறு, முன்
அகாண்டபாதசாதம்-சாதமரணம்
அகாண்டம்-அகாலம்
அகாதத்துவம்-ஆழம்
அகாதப்படுஞ்சமயம் - பிரமாதமாகுஞ் சமயம்
அகாதம்-ஆழம், தொளே, நீந்துபுனல், நீர், பள்ளம், முந்து, வஞ்சகம்
அகாதன்-வஞ்சகன்
அகாதீதம்-பட்சித்தல்
அகாத்தியம்-பொல்லாங்கு, வஞ்சனை
அகாத்திரம்-இன்றியமையாதது, கவனமின்மை
அகாயம்-தேகமற்றது
அகாலமரணம்-யுக்த வயதில்லா காலத்து மரணம்
அகாத்துமசை-பார்வதி
அகாந்தம்-தான்றி
அகாயு-கத்தி, காகம், பாம்பு, பாபி
அகாரஉப்பு-கல்லுப்பு
அகாரணம்-காரணமின்மை, தற்செயல்
அகாரணன்-ஏதுவில்லான், கடவுள்
அகாரத்திரவியத்தை-பஞ்சாக்கர வித்தைகளிஞென்று
அகாரம்-ஒரெழுத்து, வீடு
அகாரி-இடி, இந்திரன், கடவுள்
அகாரியம்-காரியமற்றது, துர்செய்கை
அகாலமிருத்து-அநியாயமரணம்
அகாலம் - அவகாலம், நியமமல்லாத காலம், பஞ்சகாலம்
அகி-இராகு, இரும்பு, ஈயம், ஓர்வகை மரம், ஓர்வான்மீன், சூரியன், பகைவன், பாம்பு, பிரயாணி, வச்சிராயுதம், விருத்திராசுரன்
அகிகாந்தம்-காற்று
அகிகை-இலவு, பட்டுப்பருத்தி
அகிஞன்-தரித்திரன்
அகிஞ்சனன்-தரித்திரன், பரமலோபி
அகிஞ்சை-கொல்லாமை, துன்பம்செய்யாமை
அகிதமிட்டிரன்-ஒரு இராக்கதன்
அகிதம்-இதமின்மை, உரிமையின்மை, தியானம், தீமை, பகை, போசனம்
அகிதர்-பகைவர்
அகிதலம்-பாதாளம்
அகிதன்-விரோதி, இதம்செய்யாதவன்
அகிதுண்டிகன்-பிடாரன், பாம்புபிடித்தாட்டுபவன்
அகிபதி-ஆதிசேடன், சேடன்
அகிபத்திரம்-கரும்பு
அகிபுஜம்-கலுழன், மயில்
அகிபுக்கு-கருடன், கீரி, மயில்
அகிபேனம்-அவின், பாம்பினஞ்சு
அகிமரால்-வெள்வேல்
அகிப்பிரத்தினன்-சிவபெருமான், ஒருருத்திரன்
அகிம்சை, அஹிம்சை } கொல்லாமை, மனோ வாக்குக்காயங்களால் தீங்கு செய்யாமை
அகிரன்-சூரியன், தீ
அகிரிபு-தேவேந்திரன், கருடன், கிருட்டினன், கீரி, மயில்
அகிருத-இருநூற்றிருபத்து நான்குபுவனங்களிலொன்று
அகிருதகம்-செய்யப்படாதது
அகிருதம்-முற்ருவேலை
அகிருதர்-கிரியை செய்யாதவர்
அகிருதித்துவம்-அந்தக்கேடு
அகிருத்தியம் - அக்கிரமம், தப்பான செய்கை
அகிர்-அசர், தலைச்சுண்டு
அகிர்ப்புத்திநி-உத்திரட்டாதி நக்ஷத்திரம்

அகிலகாரணன்-உலோககாரணன், பரசிவன்
அகிலகாரணி-உலகமாதா, பரசிவை
அகிலநாயகன்-கடவுள்
அகிலபோகம் - சகலவனுபவம், உலகவாழ்வு
அகிலம்-சர்வலோகம், எல்லாம், பூமி
அகிலரூபன்-எல்லாமானோன், கடவுள்
அகிலலோகம்-எல்லாவுலகம்
அகிலாங்கம்-சதுரவடிவம்
அகிலாண்டகோடி-கணக்கற்றலோகம்
அகிலாண்டம்-சர்வாண்டம்,பூவண்டம்
அகிலாண்டவல்லி-பார்வதி
அகிலேசர்-விசுவேசர்
அகில்-அகரு, ஓர் மரம், பஞ்சவிரையிஞென்று
அகிவைரி-கருடன், மயில்
அகிற்குடம்-அகிற்குகைக்கும்பம்
அகிற்குறடு-அகிற்கட்டை
அகிற்கூட்டு-ஏலம், கருப்பூரம், காசுக்கட்டி, சந்தனம்,தேன்சேர்ந்தகூட்டு
அகிற்புகை-அகிற்கட்டையிலுண்டானபுகை
அகினசன்-தரித்திரன்
அகீசன்-அகிபதி
அகீர்த்தி-துற்கீர்த்தி
அகீனகு-சூரியவம்ச அரசன்
அகீனம்-குறைவின்மை, பலநாளாகச்செய்யப்படும் ஓர் யாகம்
அகீனன்-பெரியோன்
அகுசலம்-சாமர்த்தியமின்மை, துக்கம், அதிட்டஈனம்
அகுசலவேதனை-துக்கவறிவு
அகுடம்-கடுகுரோகிணி
அகுட்டம்-மிளகு
அகுணத்துவம்-குணமின்மை
அகுணம்-இலட்சணமின்மை, குணமின்மை, குறைவு, துற்குணம்
அகுணன்-குணமில்லாதவன்
அகுணி-குணமில்லாதவன், முடவன்
அகுதம்-அழைக்கப்படாமை, ஐவகையாகத்துள் ஒன்றாகிய தியானம், யாகஞ்செய்யப்படாமை, வேதமோதல்
அகுதி-அகதி
அகுப்பியம்-பொன், வெள்ளி
அகும்பை-கவிழ்தும்பை
அகுரு-வெற்றிவேர், அகிலமரம்,இலகுவானது, ஈனமில்லாதது
அகுருத்துவம்-கனமின்மை
அகுவி-நறுவிலி
அகுலீனம்-குலவீனம்
அகுலீனன்-இழிகுலத்தவன்
அகுவைக்கட்டி-அரையாப்புக்கட்டி
அகுளுதி-வேம்பு
அகூடகந்தம்-பெருங்காயம்
அகூபாரம்-ஆமை, கடல், கன்மலை
அகூபாரன்-சூரியன், ஆதிகூர்மம்
அகேசன்-மொட்டையன்
அகேது-முகாந்தரமின்மை
அகை-அகையென்னேவல், தெரிநிலைவினைப்பகுதி, எரிதல், கூறுபாடு
அகைதல்-எரிதல்
அகைத்தல்-அடித்தல்,அறுத்தல், உயர்த்தல்,எழுச்சி,ஒடித்தல், செலுத்தல், முறித்தல், வருத்துதல்
அகைப்பு-அடி, அறுத்தல், எழுச்சி
அகைப்புவண்ணம்-அறுத்தறுத்தொழுகும்வண்ணம்
அகையகாதுரம்-த்ருதசேகரம்
அகைமம்-புல்லுருவி, குருவிச்சை
அகையம்-விராமம், அனுத்ருதம்
அகோ - இகழ்ச்சி, துக்கம், இரக்கம், ஐயம், அழைப்பு, ஆச்சரியம், புகழ்ச்சி, சம்மதம், பொறுமை முதலிய பொருள்களுள் ஒன்றை யுள்ளிட்ட ஒரு குறிப்புமொழி, அதிசயச்சொல்
அகோசரம்-அறியொணாமை, காணப்படாமை
அகோடம்-கழுகு
அகோதாரை-மிகப்பொழிதல்
அகோத்திரம்-குலமின்மை, கோத்திரமின்மை
அகோபிலம்-கடப்பைஜில்லாவில்விஷ்ணுவாலயங்களில் பேர்போன ஓர் ஸ்தலம்
அகோரசிவாசாரியார் - பதினெண்பத்திக்காரருள் ஒருவர்
அகோரமுகம் - சிவபெருமான் ஐந்து முகங்களிலொன்று
அகோரம்-உக்கிரகம், உட்டணம், கொடுமை, சிவனேம்முகத்தொன்று, நரி
அகோரலிங்கம் - பஞ்ச லிங்கங்களில் ஒன்று

அகோராத்திரம்-பகலிரா,பகலுமிரவும்
அகோரை-உட்டணநாள்
அக்ககனனம்-அட்சகிரகை
அக்கசாலை - அணிகலன் செய்யுமிடம், கம்பட்டசாலை, கம்மாலை
அக்கசாலையர்-கம்மாளர், தட்டார்
அக்கட-அவ்விடம்
அக்கடி-அலைவு, இடைஞ்சல், வருத்தம்
அக்கணம்-அந்தட்சணம், பொரிகாரம், வெண்காயம்
அக்கணு-தான்றிமரம்
அக்கண்டே-அக்காளே
அக்கதம்-அட்சதை, பங்கப்படாதது, பழுதின்மை
அக்கதயோனி-கன்னி
அக்கதாரி-பரமசிவன், சிவனடியான்
அக்கதூர்த்தன் - அத்தநாசஞ் செய்வோன்
அக்கதேவி-சோணைப்புல்லு
அக்கதை-மங்களகரமான அரிசி, அட்சதை
அக்கந்தம்-தான்றிமரம்
அக்கந்து - நெற்குவைப்புறத்து விலக்கியபதர், புறக்கந்து
அக்கபாடகன்-நியாயாதிபதி
அக்கபாடம்-திரைப்புடவை, மற்களரி
அக்கப்பாடு-நிலையழிவு, மரக்கலச் சேதம், மோசம்
அக்கபாதன்-நையாயிகன்
அக்கப்பிரம்-மாமரம்
அக்கமணி-உருத்திராட்சம்
அக்கமம்-பொறுமை
அக்கமாலை-உருத்திராட்சமாலை
அக்கமுன்றி-கண்
அக்கமை-வலிவின்மை, பொறுமையின்மை, பொறுமை, இயலாமை
அக்கம்-அருகு, ஆன்மா, உப்பு, உருத்திராட்சம், ஓர்நிறை, கண், கயிறு, சில்லு,சொக்கட்டான்காய்,ஞானம், தானியம், தானியவிலை, தான்றி, துரிசு, தேருருப்பு, தேர், பக்கம், பாம்பு, பூகோளாட்சம், பொன், வழக்கு
அக்கயம்-அழிவின்மை
அக்கரச்சுதகம்-ஓர்மிறைக்கவி
அக்கரத்தான்-தான்றி
அக்கரம்-ஆகாயம், எழுத்து, ஓர்நோய், பிறவியறுத்தல்,மா, வெள்ளெருக்கு, அசரம், அசை, அழியாதது, பிரணவமந்திரம், சலம், நித்தியானந்தம், பிரமம்
அக்கரம்மா-வெள்ளெருக்கு
அக்கரவிலக்கணம்-எழுத்தியல்பு, கலைஞானமறுபத்துநான்கினொன்று
அக்கரன்-சிவன், திருமால், பிரமம்
அக்கராகாரம்-ஓர்பூண்டு
அக்கராந்தம்-எழுத்தொலி
அக்கராரம்பம் - எழுத்துப்பயில வைத்தல்
அக்கரை-அவசியம், காரியம், குற்றம்
அக்கவடம்-உருத்திராக்கமாலை
அக்கவாடம்-சூதாடுமிடம், மற்களரி
அக்களித்தல்-மனமகிழ்தல்
அக்களிப்பு-மனமகிழ்ச்சி
அக்கறை-கவனம், காரியம், தொடர்பு
அக்கன்-கருடன், குருடன், நாய்
அக்கா-தாய், முன்பிறந்தாள்
அக்காகிரம் - பண்டியச்சு, பண்டியின் முற்பக்கம்
அக்காடிதம்-கௌரிபாஷாணம்
அக்காதேவி-மூதேவி
அக்காத்தான்-தான்றி
அக்காரக்கனிநச்சுமனார்-கடைச்சங்கப் புலவர் நார்பத் தொன்பதின்மருள் ஒருவர்
அக்காரம்-வெள்ளெருக்கு,கருப்புக்கட்டி, கரும்பு,சருக்கரை, சீலை, மாமரம்
அக்காளன்-வனப்புல்
அக்காள்-தமக்கை
அக்கி - அக்கினிகரப்பான், அக்கிபுறப்பட்டவன், உட்டணம், ஓர் நோய், ஓர் பூச்சி, கண்
அக்கிக்கல்-ஓரிரத்தினம்
அக்கிச்சூர்-கண்ணோவு
அக்கிதாரை-கண்மணி
அக்கிநாயி-திரேதாயுகம், அக்கினிதேவன் மனைவியாகிய சுவாகாதேவி
அக்கிபடலம்-கண்ணோயுளொன்று
அக்கியம் - பகலிற் பதினைன்காவதாக நிகழும் உத்தரமென்னுமுகூர்த்தம்
அக்கியாதம்-மறைவு
அக்கியாதவாசம்-மறைந்திருத்தல்
அக்கியாதி-துற்கீர்த்தி, நுனிக்கை
அக்கியானம் - அறிவின்மை, ஞானமின்மை

அக்கியானி-அறிவீனன், ஞானமில்லாதவன்
அக்கிரகண்ணியன்-சபையில் முதல்வனாக மதிக்கப்படத்தக்கவன்
அக்கிரசத்தம் - முதன்மை, கைந்நுநி, வலக்கை, யானைக்கைந்நுநி
அக்கிரகம்-முன்போதல்
அக்கிரகரம்-நுனிக்கை, வலக்கை
அக்கிரகன் - முதன்மை யுடையவன், முன்னேபோகிறவன்
அக்கிரகாரம்-தலைச்சேரி, பிராமணவீதி
அக்கிரசங்கை-முன்னுடை, அதாவது ஒரு கூட்டத்தாரில் தலைவனுக்குச் செய்யும் மரியாதை.
அக்கிரசந்தானி-நமன்கணக்கு
அக்கிரசம்பாவனை-முதன்மரியாதை
அக்கிரசரம், அக்கிரசரை } முன்னேபோதல்
அக்கிரசர்மம்-நுனித்தோல்
அக்கிரசன்-தமையன், பிராமணன், மூத்தோன்
அக்கிரசன்மன் - அண்ணன், பிரமன், பிராமணன்
அக்கிரசாதகன், அக்கிரசாதி } பார்ப்பான்
அக்கிரசை-தமக்கை, மூத்தாள்
அக்கிரச்சா, அக்கிரச்சியை } கிரகங் கிழக்கு மேற்கு வீதியகறலில் வருஞ்சா
அக்கிரணி-தலைவன், முதன்மையானவன்
அக்கிரதாம்பூலம்-முதற்றும்பூலம்
அக்கிரநிரூபணம்-முன்னிரூபித்தது
அக்கிரபாகம்-நுனி, முதற்பங்கு, முன்பக்கம்
அக்கிரபாணி-கைநுனி, வலக்கை
அக்கிரபூசனை-பிரயோசன காலத்தில் கடவுளுக்குச் செய்யும்பூசை
அக்கிரபூசை-முதன்மைப்பூசை, முதன்மை யுபசாரம்
அக்கிரபூமி - இலக்குக் குறிக்கப்பட்ட இடம்
அக்கிரமம் - அநீதம், ஒழுங்கின்மை, கெடுமை
அக்கிரமாமிசம்-இரத்தாசயம்
அக்கிரமி-கொடியவன்
அக்கிரம்-அதிகம், இலாபம், எதிர், சமீபம், நுனி, இலகு, உச்சி, திரள், தொடக்கம், முதலாவது, முதற்பாகம், மேற்பாகம், நட்சத்திர சாஸ்திரத்தில் கிரகங்கீழ்மேல் வீதியகறல்
அக்கிரருணம்-உயர்ந்தசாதி
அக்கிரன்-தமையன்
அக்கிராகரம்-அக்கிரகாரம்
அக்கிராகாரம்-தோஷஹரத் திரவியம், இது வடஆபிரிகா தேசத்தி லுற்பத்தியாம்
அக்கிராசியம்-தள்ளத்தக்கது, தீர்க்கப்பட்டது, கிரகிக்கப்பட்டது, சம்பந்தம் பெருதது
அக்கிராதம்-கோபமின்மை
அக்கிராத்தம்-கைநுனி, வலக்கை
அக்கிராந்தம்-வெல்லப்படாதது, கடக்கப்படாதது, சேம்பு
அக்கிராரம்-அக்கிரகாரம், விளைநிலம்
அக்கிரியம்-ஆதியிலுண்டானது, தொழிலற்றது
அக்கிரியன்-தமையன்
அக்கிரு-விரல்
அக்கிருதன்-யோகாட்டகரில் ஒருவன்
அக்கிரேவணம்-காட்டோரம்
அக்கிலீபதை-வீரத்தன்மை
அக்கிலு-நெருஞ்சில்
அக்கிள்-கைக்குழி
அக்கினி - அக்கினிக்கடவுள், கொடுவேலி, செங்கொடுவேலி, நவக்ஷாரம், நெருப்பு, பித்தன், பொன், மூத்திரம், மூலாக்கினி, வெடியுப்பு, ஆயுருவேதாக்கினி, வேதாக்கினி, காலாக்கினி என மூன்றுவிதம்
அக்கினிகணம்-தீப்பொறி, நிரைநேர், நிரைக்கணம்
அக்கினிகண்டம் - மூலம், சுவாதிட்டான மென்னும் இரண்டாதாரங்களின் இடையாகிய கண்டம்
அக்கினிகர்ப்பம்-நெருப்பைத்தன்னுள் அடக்கிய பொருள், தீக்கடைக்கோல், சூரிய காந்தக்கல்
அக்கினிகர்ப்பை-சாமைப்பயிர், பூமி
அக்கினிக்கயம்-கடல்நுரை
அக்கினிகருப்பம்-கடனுரை, சூரியகாந்தம், பொறி
அக்கினிகருப்பன்-குமரன்
அக்கினிகலை-சுவாசம்
அக்கினிகாதலன்-திட்டத்துய்மன்
அக்கினிகிரியை-பிரேததகனம்

அக்கினிகிடம்-புழுவர்க்கத்தில் ஒன்று
அக்கினிகுமாரன்-குமரவேள்
அக்கினிகுமாரி- துரோபதை
அக்கினிகேது-தூமம்
அக்கினிகோணம்-தென்கிழ்
அக்கினிகோத்திரம்-தீ, நெய், யாகமிருபத்தொன்றிலொன்று
அக்கினிகோத்திரி-வேள்வித்தீ நித்தியம் வளர்த்திருப்போன்
அக்கினிக்கட்டு-அக்கினித்தம்பனம்
அக்கினிக்கபம்-கடல்நுரை
அக்கினிக்கர்ப்பம்-அக்கினிக்கருப்பம்
அக்கினிக்கண்ணன்-ஈசுவரன், பயங்கரரூபன்
அக்கினிக்குமரம் - குளிர்மை, மந்தம் முதலாகியநோய்கட்குக் கொடுக்கப்படு மருந்து
அக்கினிக்குமரன்-ஓர்வகை மாத்திரை, சுப்பிரமணியன்
அக்கினிசகன்-காற்று
அக்கினிசகாயன்-வாயுபகவன்
அக்கினிசயனம்-ஓமத்தீவளர்த்தல்
அக்கினிசன்-குமரன்
அக்கினிசன்மன்-குமரன்
அக்கினிசாந்தி-ஓமம்
அக்கினிசாலம்-ஓர்பூடு, நெருப்புச்சாலம்
அக்கினிசாவர்ணி-பதினான்கு மனுக்களில் ஒருவன்
அக்கினிசிகம்-அம்பு, வாணம், விளக்கு
அக்கினிசேகரம்-மஞ்சள்
அக்கினிச்சிரம்-குப்பைமேனி
அக்கினிச்சிலம்-கார்த்திகைக்கிழங்கு
அக்கினிச்சிவம்-குப்பைமேனி
அக்கினிச்சுவத்தார்-தேவப்பிதிரர்
அக்கினிச்சுவாலை-தீக்கொழுந்து
அக்கினிச்சேர்வை-புண்ணுக்கும் பிளாஸ்திரி
அக்கினிட்டுது - ஒருநாளில் முடிக்கப்படும் ஒரு யாகம்
அக்கினிட்டோமம் } சோம யாகம்
அக்கினிஷ்டோமம் }
அக்கினிதம் - தீயூட்டல், சீரணிக்கச்செய்யும் மருந்துகளில் ஒன்று, வீடெரித்தல்
அக்கினிதன்-தீயெரித்தவன், வீடெரித்தவன்
அக்கினிதாரணம்-ஓமாக்கினி வளர்த்தல்

அக்கினிதேவன்-தீக்கடவுள்
அக்கினித்தம்பம் } ஓர்வித்தை, கலைஞான மறுபத்து
அக்கினிஸ்தம்பம் } நான்கிலொன்று, நெருப்புத்தூண்
அக்கினித்தம்பன்-சிவன்
அக்கினித்தம்பனம்-நெருப்புசசுடாமற்செய்யும் வித்தை
அக்கினித்திரயம்-காருகபத்தியம், தக்கிணம், ஆகவனீயம் என்னும் மூவகை நெருப்பு
அக்கினித்திராவகம்-ஓர் திராவகநீர்
அக்கினித்திரேதை-திரியாக்கினி
அக்கினித்தூண்-தீப்பிழம்பு
அக்கினிநட்சத்திரம்-கொடிய நட்சத்திரம்
அக்கினிநாள்-கொடியநாள்
அக்கினிபஞ்சகம்-அக்கினியபாயம்
அக்கினிபதச்சிலந்தி-சிலந்தி வகையுள் ஒன்று
அக்கினிபம்-பொன்
அக்கினிபரிசதம்-ஓமோபகரணம்
அக்கினிபரீட்சை - மழுவேந்தல் முதலிய வித்தை
அக்கினிபீசம்-பொன்
அக்கினிபு-குமாரக்கடவுள்
அக்கினிபுக்கு-ஒரு முனிவன்
அக்கினிபுராணம்-பதினெண்புராணங்களிலொன்று; ஆக்கிநேயம்
அக்கினிபூ-அக்கினிசன்மன்
அக்கினிபோஷணம் - வைசுவ தேவபூசை
அக்கினிப்பிரத்தரம்-தீக்கல்
அக்கினிப்பிரவேசம் } தீயிலிறங்குதல்
அக்கினிப்பிரவேசனம் }
அக்கினிப்பிழம்பு-நெருப்புச்சுவாலை
அக்கினிப்பிளப்பு-எரிமலை
அக்கினிமணி-சூரியகாந்தம்
அக்கினிமண்டலம் - மும்மண்டலத்தொன்று, அதுமூலாதார முதலாகிக் கமலமளவும், அடிவயிறு
அக்கினிமந்தசுரம்-சுரநோய்களி லொன்று
அக்கினிமந்தம் - கோங்கமரம், சீரணமாகாமை
அக்கினிமந்தனம்- தேய்த்தலால்கோல்களினின்று நெருப்பை யுண்டாக்கல்
அக்கினிமாந்தம்-ஓர்நோய்

அக்கினிமாந்தியம் - அசீரணம், செரியாமை
அக்கினிமாருதி- அகத்தியன்
அக்கினிமுகச்சிலந்தி-ஒருவகைச் சிலந்திப்பூச்சி
அக்கினிமுகம்-சேங்கொட்டை
அக்கினிமுகன்-சூரபன்மன் புதல்வன்
அக்கினிமுகன்-பிராமணன், தீ, தேவன்
அக்கினிமூலம்-சேங்கொட்டை
அக்கினிமூலை-தென்கிழக்கு மூலை
அக்கினியஸ்திரம் - அக்கினி மயமான வம்பு, வாள்கொள்ளி விழுகின்ற நக்ஷத்திரம்
அக்கினியாகாரம்-ஓமசாலை
அக்கினியாதானம்-ஓமாக்கினி வளர்த்தல்
அக்கினியாதேயம் - நித்திய தீ வளர்த்தல், யாகமிருபத்தொன்றினென்று
அக்கினியாலயம்-அக்கினியாகாரம்
அக்கினியின்குணம்-ஆலசியம், தாகம், நித்திரை, பசி, மைதுனம்
அக்கினியின்கோபம்-பித்தம்
அக்கினியுற்பாதம்-விண்வீழ்கொள்ளி
அக்கினியெழுநா - அக்கினிதேவனுக்குள்ள ஏழு நாக்குக்கள், கராளி, காளி, சுதூம்பரவருணை, சுலோகிதை, புலிங்கினி, மனோசவை, விஸ்வரூபி என்னும் ஏழுமாம்
அக்கினியோகம்-அக்கினிக்குரிய யோகம், தக்கயோகம்
அக்கினிலிங்கம்-புகை
அக்கினில்-நெருஞ்சில்
அக்கினிவகை - கமலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி, சாடராக்கினி, சடராக்கினி, தாபாக்கினி, உஷ்ணம், காங்கை
அக்கினிவமிசக்ஷத்திரியர்-வன்னியர்
அக்கினிவுருத்தனம்- தீவளர்த்தல்
அக்கினிவல்லபம்-கீல்
அக்கினிவாகம், அக்கினிவாகு } புகை
அக்கினிவிசர்ப்பம்-விரணக்கொதி
அக்கினிவீசம், அக்கினிவீரியன் } பொன்
அக்கு-அகில், கண், எட்டி, எருத்துத்திமில், எலும்பு, சங்கு, சங்குமணி, பலகறை, உகாக்காய்

அக்குத்து-சந்தேகம், பொருத்தம், மையம்
அக்குமணி பலகாரை, காய், சங்கு
அக்குரன்-இடையெழுவள்ளலி லொருவன்
அக்குருக்கி-சயரோகம்
அக்குரூரன்-கஞ்சன் முதன்மந்திரி
அக்குல்லி-உக்காரி, சிற்றுண்டி, பிட்டு
அக்குள்-கைம்மூலம், கக்கம்
அக்குரோணி-படையிலோர் தொகை, அஃது அணிகமூன்றுகொண்டது
அக்கை-அன்னை, முன்பிறந்தாள்
அக்கோ - அதிசயச்சொல், இரக்கச்சொல்
அக்கோடகம், அக்கோடம் } கடுக்காய்
அக்கோணி - பத்துநூறாயிரத் தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது காலாளும், அறுபத்தையாயிரத்து அறுநூற்றறுபது குதிரையும், இருபத்தையாயிரத்து எண்ணூற்றெழுபது இரதமும், இருபத்தோராயிரத்து எண்ணூற்றெழுபது யானையுங்கொண்டது
அக்கோபம்-உறுதி, யானைகட்டுந்தூண்
அக்கோலம்-தேற்றாங்கொட்டை, தேற்றாமரம்
அக்கௌகிணி-அக்கோணி
அக்ரகாரம்-அக்கிரகாரம்
அக்ரபூசனை - முதற்பூசனை, முன்மரியாதை
அங்ககம்-அங்கம்
அங்ககாரம்-அங்கசேட்டை, அபிநயம்
அங்கஹீனம்-உறுப்புக்குறைவு
அங்கஹீனன்-உறுப்புக்குறைந்தவன்
அங்கக்கிரகம் - ஒருவகைச் சீரவலி, கெண்டைவாங்கல்
அங்கசங்கம்-புணர்ச்சி
அங்கசம் - உதிரம், உரோமம், காமம், நோய்
அங்கசவேள்-மன்மதன்
அங்கசன்-மகன், மன்மதன்
அங்கசா-சோதிடவுறுப்புகளி லொன்று
அங்கசாதனம்-ஓர் குறி
அங்கசாரி-சிவன்
அங்கசாலைக்காரன்-கிராமப்பணி செய்வோன்

அங்கசிவயோகம்-அஷ்டாங்க சிவயோகம்
அங்கசுபாதி-சிறுபுள்ளடி என்னும் ஒரு பூண்டு
அங்கசேட்டை - உடம்பினது சலனம், கை மெய்க்காட்டு
அங்கசை-மகள்
அங்கச்சனி - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் சனி
அங்கச்செவ்வாய் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகஉறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும்செவ்வாய்
அங்கசோமன்-ஒருவன்பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் சந்திரன்
அங்கணம்-ஆகாசம், சலதாரை, சேறு, பொரிகாரம், மதகு, முற்றம், வெண்காரம், பத்துமுழத்தளவு, கடுக்காய் மரம், இரண்டு தூணுக்கும் நடுவிலுள்ள விடம்
அங்கணர்-சிவன்
அங்கணன்-அருகன், சிவன், மிருகபாஷாணம், விட்டுணு
அங்கணார்-சிவன்
அங்கணி-கற்றாழை, காளி, பார்ப்பதி
அங்கண்-அவ்விடம்
அங்கதச்செய்யுள்-வசைகவி
அங்கதப்பாட்டு-அங்கதச் செய்யுள்
அங்கதம்-தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், மார்பு, யானையுணவு
அங்கதர்-வசைச்செய்யுள்பாடுவோர்
அங்கதம்-ஷட்ஸ்ருதிரிஷபம்
அங்கதன்-பரதன்மகன், வாலிமகன்
அங்காரி-சிவன், சீவன், தேகம்
அங்கதாளம்-பரதநாட்டியநூலில்கூறப்பட்ட தாளப்பிரமாணங்கள்பத்துள் ஒன்று: அது அனுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம் என அறுவகைப்படும்
அங்கத்தி - பண்டாரங்களைமரியாதையாகக்கூப்பிடும் தாங்களென்னுமர்த்தத்தையுடைய ஓர் சொல்
அங்கத்தீ-உதராக்கினி
அங்கத்தை-அவ்விடத்திருக்கும் பெரியவர்
அங்கநட்சத்திரம் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகஉறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் நட்சத்திரம்
அங்கநம் - அசைதல், போதல், முற்றம், அரசர்மனையின் முற்றம்
அங்கநாகனம்-மாதர்கூட்டம்
அங்கநியாசம் அநுட்டான முறையிலொன்று, அது,உடம்பின் ஒவ்வொருபாகத்தையுந் தொட்டு மந்திரம் சொல்லுதல்
அங்கநூல்-வேதாங்கநூல்
அங்கபங்கம் - தேக உறுப்புக்களின் சோர்வு, சோர்வாதம்
அங்கபடி-அங்கவடி, கவணை, குதிரையங்கபடி
அங்கபாலி / அங்கபாலிகை } கட்டித்தழுவுதல்
அங்கபுதன் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் புதன்
அங்கப்பிரதக்கணம் / அங்கப்பிரதட்சணம் } சரீரத்தாலுருண்டு வலம்வருகை
அங்கப்பிரத்தியங்கம்-அங்கமும், பிரத்தியங்கமுமான உறுப்புக்கள், தலை, முக மார்பு இவை மூன்றும் அங்கமெனப்படும். மார்பு, கழுத்து, தனம், தோள், கொப்பூழ், வயிறு, குய்யம், கண், மூக்கு, காது, நெற்றி, கால், விரல், தொடை, முழங்கால், கணைக்கால் இவை பிரத்தியங்க மெனப்படும்
அங்கமாலை-ஓர்பிரபந்தம், இது ஸ்திரீகளின்முகம், கண், ஸ்தனமுதலியவற்றையும், புருஷரின்தோள்மார்புமுதலியவற்றையும் வர்ணிக்கும் நூல்
அங்கமைந்து-வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரண மென்ற பஞ்ச உறுப்புக்கள்.
அங்கம்-அடையாளம், அவயவம், உடல், உபாயம், உறுப்பு, எலும்பு, ஓர் தேயம், அதற்கு இப்போது பாகல்பூர் என்றும் பேர், கங்காநதிதீரத்தில் வங்காளக் கீழ்மாகாணங்களி லோர் பாகம், கட்டில், சாயல், பதினெண்பாடையி லொன்று, பாவனை, வேதாங்கம், அத்தியாயம், அலங்கரிப்பு, ஆறங்கம், ஓர் விளையாட்டு, குற்றம், சமீபம், தங்குமிடம், தாளப்பிரமாணம், பத்தினொன்று, பத்து, பரத வுறுப்பினொன்று, மனம், வரி, கொன்றை, கோளகபாஷாணம்

அங்கம்பயந்தோன்-அருகக் கடவுள்
அங்கயற்கணம்மை-மீனாட்சி
அங்கயோகம்-யோகமெட்டிலொன்று
அங்கரக்கா-மெய்ச்சட்டை
அங்கரங்கம்-உலகவின்பம்
அங்கரட்சணி-யுத்தகவசம்
அங்கரட்சா-அங்கரக்கா
அங்கரத்தான்-தான்றி
அங்கரமாதி-கௌரிபாஷாணம்
அங்கரவல்லி-குறிஞ்சா
அங்கராகம்-பூசும்பரிமளம்
அங்கராயன் } கன்னன் அங்கதேசத்து
அங்கராசன் } அரசன்
அங்கருகம்-உரோமம்
அங்கர்-அங்கதேசத்தார்
அங்கர்கோமான் - அங்கதேசத்தரசன், கன்னன்
அங்கலக்கணம்-சாமுத்திரிகாலக்கணம்
அங்கலாய்த்தல் - இச்சித்தல், துக்கித்தல்
அங்கலாய்ப்பு-துக்கம், பேராசை
அங்கலி-ஐவிரலிகொவ்வை
அங்கவடி-அங்கபடி
அங்கவம்-பழவற்றல்
அங்கவன்-மிருதபாஷாணம்
அங்கவிட்சேபம்-அபிநயம்
அங்கவித்திசை கணிதம்
அங்கவியல்-இராசரீகமுறைமை
அங்கவியாழன் - ஒருவன் பிறக்கும் போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் வியாழன் என்னும் கிரகம்
அங்கவீனன்-குரூபி
அங்கவெள்ளி-ஒருவன்பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் வெள்ளி என்னும் கிரகம்
அங்களி-சற்றுமழை
அங்கனம்-கடுக்காய்மரம், வெங்காரம்
அங்கனுகணம்-மாதர்கூட்டம்
அங்கனை-ஓரிராசி, பெண், வடதிசை யானைக்குப் பெண்யானை
அங்கனையர்-அழகுள்ள பெண்கள்
அங்கன்-சுவாயம்பு மனுவின் சந்ததியிலே தோன்றிய உரு என்பவனுடைய பத்துப் புத்திரருள் ஒருவன், யயாதியினது நான்காம் புத்திரனுகிய அனுவமிசத்துப் பலிபுத்திரன்

அங்கா-வாய்திறத்தல்
அங்காகமம்-ஆருகத ஆகமங்கள் மூன்றனுள் ஒன்று, உபாகமத்துள் ஒன்று
அங்காங்கம்-உபாங்கம்
அங்காங்கபாவம்-அவயவங்களின் சம்பந்தம்
அங்காடி-கடைவீதி
அங்காடிக்கூடை-கடைவீதியில் பண்டங்கள் வைக்கப்பட்டிருக்கும்கூடை
அங்காதித்தன்-ஒருவன்பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் ஆதித்தன் என்னும் கிரகம்
அங்காதிபன்-கன்னன்
அங்காதிபாதம்-ஓர்வைத்தியநூல்,முழுவுடம்பு
அங்காத்தல்-கொட்டாவிவிடல், வாய்திறத்தல்
அங்காப்பு-அண்ணாத்தல்,வாய்திறத்தல்
அங்காமி-அநித்தியம், மிச்சம்
அங்காரகமணி-பவளரத்தினம்
அங்காரகம்-அங்காரம்
அங்காரகன்-செவ்வாய், நெருப்பு
அங்காரதாரை-ஓரரக்கி
அங்காரதானிகை-கூட்டடுப்பு,தீச்சட்டி
அங்காரபரிபாசிதம்-பொரிக்கறி
அங்காரமாதி-சோதைபாஷாணம்
அங்காரம்-கரி, தீ பூசும் பரிமளம்
அங்காரம் - மஞ்சள் முதலியவற்றினிருந்து வடிக்குந் தைலம்
அங்காரவல்லி-குறிஞ்சா, சிறுதேக்கு
அங்காரன்-அங்காரகன்
அங்காரி-சிறு நெருப்புச்சட்டி, வெங்காரம்
அங்காரிகை-கரும்பு, நன்னாரி
அங்காவணம்-பஞ்சதருவின் பந்தர்
அங்காளகை-கரும்பு
அங்காளி-அங்காளம்மை
அங்கி-அக்கினிதேவன், அங்கத்தையுடையது,அத்தநாள், கார்த்திகைநட்சத்திரம், சடாராக்கினி, சட்டை, தீ, ஜாதிலிங்கம்
அங்கிகரித்தல் - ஏற்றுக் கொள்ளுதல், தழுவிக்கொள்ளுதல்
அங்கிகரு-சாதிலிங்கம்
அங்கிகாரம்-அங்கிகரித்தல்
அங்கிகை-இரவிக்கை, கஞ்சுகம்

அங்கிசகன்-சுற்றத்தவன்
அங்கிசம் - உபநிடத முப்பத்திரண்டி ஞென்று, கூறு, பங்கு, வமிசம், ஒரு வகைத் துறவு, தாயபாகம், தோட் பட்டை, தோள், பின்னம்
அங்கிஷபாதி-சிறுபுள்ளடி
அங்கிஷம்-வமிசம், வாழை
அங்கிஙச-அம்சை
அங்கிசன்-அதிதிபிள்ளைகளில் ஒருவன்
அங்கிசு-அனு, அலங்காரம், கிரணம், சூரிய கிரணம், சூரியன், தும்பு, வேகம்
அங்கிஞானம்-அவயவியறிவு
அங்கிடுதத்தி - நாடோடி, நிலைகெட்ட வன்
அங்கிடுதுடுப்பன்-நாடோடி
அங்கிட்டோமம்-கோமேதகம்
அங்கிதம்-உடற்றழும்பு, பாட்டுடைத தலைவன்
அக்கிதாரணை-அக்கினிதாரணம்
அங்கிதீரன் - சம்புத்தீபம், புரந்தவன் பெயர்
அங்கிநாள்-அத்தநாள், கார்த்திகைநாள்
அங்கிரகம்-சரீரநோ
அங்கிரசு-அக்கினி, பிரம்மாவிடம் பிற ந்த ஏழு முனிவருள் ஒருவர்
அங்கிரன்-ஆங்கிரசன், சப்தரிஷிகளி லொருவன்
அங்கிரர்-சப்தரிஷிகளி லொருவர்
அங்கிரி-கால், மரமூலம், மூன்றுகா லிருடி
அங்கிரிநாமகம்-மரமூலம்
அங்கிரிபம்-மரம்
அங்கிலேசன்-ஒரு முனிவன்
அங்கிளி-கற்றாழை
அங்கினி-ஓர்விதக் கற்றாழை
அங்கீகரணம் } உடன்பாடு, சம்ம
அங்கீகரித்தல் } தித்தல்
அங்கீகாரம்-சம்மதி, வாக்குத்தத்தம்
அங்கீகாரியம்-அங்கீகரிக்கத்தக்கது
அங்கீகிருதம்-அங்கீகரிக்கப்பட்டது
அங்கீயம்-அங்கத்திற்குரியது
அங்கு-அவ்விடம், ஓரசைநிலை
அங்குசகிரகன்-யானைப்பாகன்
அங்குசதாரி - அரதாரம், தாளகம், யானைப்பாகன், விநாயகன்
அங்குசபாசதரன் } விநாயகன்
அங்குசபாசமேந்தி }
அங்குசபாணி-காளி, விநாயகன், வீர பத்திரன்
அங்குசபாதி-சிறுபுள்ளடி
அங்குசபிசாரி-கொள்ளு
அங்குசம்-தோட்டி, யானைத்தோட்டி, வாழை
அங்குசரோசனம்-கூகைநீறு
அங்குசவி-கொள்
அங்குசன்-காந்தம், சரகாண்டபாஷா ணம்
அங்குசோலி-அறுகு
அங்குடம்-திறவுகோல், துறப்பு
அங்குட்டமாத்திரன்-வித்தியா தத்து வத்திலிருக்கும் ஒரு சூத்திரன்
அங்குஷ்டம் - அங்குட்டம், பாண்டு வியாதி
அங்குட்டம்-குறளுரு, பெருவிரல்
அங்குஷ்டான் } விரலுறை
அங்குட்டான் }
அங்குஸ்தான்-தையற்காரர் விரலிலே அணியும் கூடு, பெருந்தாரா
அங்குணகம்-கூடு
அங்குணம் - பூண்டின்முளை, குப்பை மேனி, வெங்காரம்
அங்குரம் - உரோமம், குப்பைமேனி, தளிர், நங்கூரம், நீர், பூண்டின்முளை, முளை
அங்குரார்ப்பணம்-முளையிடுதல்
அங்குரி-விரல்
அங்குரிதம்-தளிர்த்தது, முளைத்தது
அங்குரித்தல்-முளைத்தல்
அங்குரீயம்-அங்குலியம்
அங்குலம்-பெருவிரல், விரல், விரற் கடை
அங்குலி - ஐவிரலிச்செடி, துதிக்கை நுனி, யானைக்குக்கட்டும்மணி, விரல்
அங்குலிகம்-அங்குலியம்
அங்குலிசந்தேசம்-விரனொடித்தல்
அங்குலிதோரணம்-திரிபுண்டரம்
அங்குலித்திரம் } விரற்புட்டில்
அங்குலித்திராணம் }
அங்குலிபஞ்சகம்-ஐந்துவிரல்
அங்குலிமுகம்-விரனுனி
அங்குலிமுத்திரை-முத்திரைமோதிரம்
அங்குலிமோடனம்-விரலாற்றெறித்தல், விரனொடித்தல்
அங்குலியம்-மோதிரம்

அங்குலீ-அங்குலி
அங்குலீகம் } மோதிரம்
அங்குலீயகம் }
அங்குலீபஞ்சகம் - விரல்கள் ஐந்தின் கூட்டம்
அங்கூசம்-அங்குசம்
அங்கூடம்-அம்பு, கிரி
அங்கூரம்-தளிர், முளை
அங்கை-உள்ளங்கை
அங்கோடம்-அழிஞ்சில்
அங்கோலம்-அழிஞ்சில்
அங்கோலவைரவன்-அழிஞ்சில்
அங்கோலை-அழிஞ்சிற்பட்டை
அங்ஙனம் } அவ்விடம், அவ்விதம்
அங்ஙன் }
அச-நிவிர்த்திகலையிலிருக்கும் உருத்திர புவனங்கள் நூற்றெட்டில் ஒன்று
அசகசாந்தர நியாயம் - ஆட்டுக்கும் குமுள்ள பேதம் போலும் என்னும் நியாயம்
அசகசாந்தரம் - ஆட்டுக்கும் யானைக்குமுள்ள பேதம்
அசகண்டர்-வேளை, தைவேளை
அசகத்து-விடாதது
அசகர்தை-தைவேளைப்பூண்டு
அசகம்-வரையாடு, மலையாடு
அசகரம் பெரும்பாம்பு
அசகலக்கணை - விடாதலக்கணை, தன் பொருளை விடாது அதனோடு சம்பந்தமுள்ள வேறு பொருளைத் தருவதுவாம்
அசகவம்-சிவன்வில், அஃது இருதலை திருமாலும் நடுப் பிரமனுமா யிருப்பது
அசகளன் - சைனசமயத்திற் சொல்லப்பட்ட இருபத்துநான்கு தீர்த்தக்காரருள் ஒருவன்
அசகன்-சுமந்து புத்திரன்
அசகாயசூரன் - வேறொருவரது உதவியில்லாமற் பகைவரை வெல்லும் பலமுள்ளவன்
அசகாயம்-சிறுகாயம்
அசகி-விரோதி
அசகோத்திரம்-வேற்றுக்கோத்திரம்
அசகியம்-அருவருப்பு
அசக்கல்-கட்டல்
அசக்கியம் - செய்யக்கூடாது, இயலாமை, துத்தநாக மணல், நாகமணல்

அசக்கியன்-தகுதியற்றவன்
அசக்கிரம்-ஆட்டுப்பால்
அசங்கச்சித்தன்-அஞ்ஞானமனத்தன்
அசங்கதம் - ஒழுங்கின்மை, பொய், வெறுப்பு
அசங்கதி-இணக்கமின்மை, ஒவ்வாமை
அசங்கதியலங்காரம் - தொடர்பின்மையணி
அசங்கமம்-அசட்டை, இகழ்ச்சி, பவித்திரமின்மை, புலவி
அசங்கம்-தனிமை,நிச்சயம்,பயமின்மை, விரோதம்
அசங்கற்பம்-உண்மை, முன்னிதானிப்பின்மை
அசங்கன் - அக்குரூரனது தம்பியருள் ஒருவன், அஞ்ஞானன், ஒட்டாதவன்
அசங்கியம்-அசங்கமம், அருவருப்பு
அசங்குதல்-அசைதல்
அசங்கை-சங்கையீனம், மதிப்பின்மை
அசங்கோசம்-அடக்கமின்மை
அசசீவிகன்-ஆட்டுக்காரன்
அசசூரம்-நெருஞ்சில், முருங்கைமரம்
அசமஞ்சன்-சகரன் மகன்
அசஞ்சலம்-ஐயம், திடாரிக்கம்
அசஞ்சிதன்-முத்தன்
அசடர்-கீழ்மக்கள்
அசடு-இசடு, இரும்பு முதலியவற்றிற் பெயருமசடு, கீழ்மை, குற்றம்
அசட்டி-அசமதாகம்
அசட்டை-பராமுகம், மதியாமை
அசதாசாரம்-துன்னடை
அசதி-அயர்ச்சி, சடுதி, சிரித்துப்பேசல், மறதி, வசவி, ஔவையார் கோவை பாடப்பெற்றவன்
அசதிக்கோவை - ஔவையார் அசதியென்னு மிடையன்பேரில் பாடின நானூறு பாட்டுள்ள பிரபந்தம்
அசதிசன்னி-ஓர்நோய்
அசதிசுதன்-சோரபுத்திரன்
அசதியாடல்-நகல்
அசத்தம்-சுத்தமின்மை
அசத்தி-பலவீனம்
அசத்தியம்-பொய்
அசத்திலட்சணம்-அசம்பவம்
அசத்து-உண்மையல்லாதது, தீமை
அசத்துரு-சந்திரன், மித்துரு
அசத்துவம்-வலியின்மை

அசத்தை-சூனியம், பிரபஞ்சம், பொய
அசந்தம் - உயிரெழுத்தில் முடியுஞ் சொல்; சந்தமின்மை
அசந்தர்ப்பம் - சமயமின்மை, சரிப் படாமை
அசந்தானம் - சந்தானமின்மை, பிரிவினை
அசந்தி-சந்தியின்மை
அசந்துஷ்டி-திருத்தியின்மை
அசந்தோஷம் } வெறுப்பு
அசந்தோடம் }
அசபம்-அசவை
அசபன்-இடையன், பிரதிவாதி
அசபை-அசபம்
அசப்பியம் - அதப்பியம், சபைக்கடாத சொல்
அசமஞ்சசம்-வித்தியாசம்
அசமதாகம்-ஓமம்
அசமந்தம்-மந்தகுணம், மலையத்தி, மலையாமை
அசமந்தன்-சோம்பேறி
அசமந்திபம்-மலையத்தி
அசமபாதை-சேனை நடக்கும் வழி
அசமருதம்-அத்தி
அசமயம்-ஒவ்வாச்சமயம்
அசமன்-சமனின்மை
அசமானம்-உவமையின்மை
அசமுசாரி-சுத்தசைதன்னியன், பிரமசாரி
அசமோதகம் } மூவருட நெல், ஓமம்
அசமோதம் }
அசம்-ஆடு, ஆட்டுக்கடா, ஆன்மா, ஈரவுள்ளி, உள்ளி, சந்தனம், நெல், மூவருட நெல்
அசம்பவம்-அதிசயம், சூனியம், மாறுகொளக்கூறல், அது நூற்குற்றம் பத்திஞென்று
அசம்பாவனை-அறியக்கூடாமை
அசம்பாவிதம்-சம்பவிக்கக்கூடாதது
அசம்பி-தோட்பை
அசம்பிரேட்சிய காரித்துவம் - ஆராயாதுசெய்தல், அது பஞ்சதந்திரத்தொன்று
அசம்பிரேட்சியம்-ஆராய்வின்மை
அசம்போகம்-அனுபவமின்மை
அசம்பை-அசம்பி
அசம்மதம்ச-ம்மதமின்மை
அசம்மானம்-அசங்கை
அசயம்-அகத்தி, கோரைப்புல், ஈசுரப்புல்
அசரம்-அசைவில்லாதது, இருவகைத்தோற்றத்திஞென்று, அது நடையில்லது
அசராது-கொன்றை
அசரியம்-அழிவின்மை, சினேகம்
அசரீரன்-காமன்
அசரீரி-அரூபி, ஆகாயவாணி, சரீரமற்றது
அசருதல்-அயருதல்
அசரை-ஓர் சிறியமீன்
அசர்-அகிர், தலைச்சுண்டு, பொடுகு
அசலகீர்த்தி-கனகமாலையின் சகோதரருளொருவன்
அசலைக்கால்-தென்றல்
அசலம்-அசையாநிலை, அம்பு, இரும்பு, கற்பாஷாணம், படைக்கலம், பூமி, மலை
அசலனம்-அசைவின்மை
அசலன்-புத்திசேனன் பிதா, பசுவயிற்றிற் பிறந்த ஒரு பௌத்த முனிவன், அசைவற்றிருப்பவன், கடவுள்
அசலாதிபன்-பூவரசன், மலையரசன்
அசலை-பூமி, மலை
அசல் - வெவ்வேல், அருகாண்மை, உயர்ந்தது, கொசுகு, சீலை, பூமி, முதற்பிரதி
அசல்பேரீஜ்-ஆதிவரி
அசவல்-அசறு, கொசுகு, சேறு
அசவாகனம்-அன்னப்பறவை
அசவாகனன்-அக்கினி, பிரமன், முருகன்
அசவை-ஓர்மந்திரம், பெருவிரலடி
அசளபன்னி-சிற்றகத்தி
அசறம்-வெள்ளுள்ளி
அசறு-சிறுபூச்சி, சேறு, சொறி, தலைச்சுண்டு, புண்ணிலசடு, புழு
அசறுக்கம்-தாம்பிரவருணம்
அசறை-அசரை
அசற்பதம்-ஆகாதவழி, துன்னடை
அசற்பிரதி-சுத்தமானபிரதி
அசனபன்னி-சிற்றகத்தி
அசனம்-கற்பாஷாணம், சோறு, போசனம், வெள்ளுள்ளி, வேங்கைமரம்
அசனுத்-அதிகாரப்பத்திரிகை, ஆதாரம், உத்தரவு

அசனி-அனிச்சமரம், இடி, உயிர்வேத னையினென்று, வச்சிராயுதம்
அசனை - பலியின் மனைவி, வாணாசுரன் தாய்
அசன்-சிவன், தசரதன்றந்தை, பிரமன், பிறப்பில்லாதவன், மன்மதன், விட்டுணு
அசன்மானம்-அசங்கை
அசன்றிகா-வேளை, தைவேளை
அசன்னிதி-தூரம், நம்பிக்கை
அசன்னியம்-சகுனம்
அசா-தளர்ச்சி
அசாகசம்-அமைதி, பொய்
அசாகை-களி, சாகையின்மை, புற்கை
அசாக்கிரதை-சோம்பல், மறவி, பின்மை
அசாசருமம்-ஆட்டுத்தோல்
அசாசனம்-அரசாட்சியின்மை, ஆளுகை யின்மை
அசாசீவி-ஆட்டுவாணிகன்
அசாணிமூலி-உத்தமதாளி, வேலிப் பருத்தி
அசாதனம்-நிலைநிறுத்தாமை
அசாதாரணம்-பொதுவின்மை
அசாதுரியம்-சொற்றிறமின்மை
அசாத்தியம் - சந்தேகம், பெருவழக் கற்றது, முடிக்கக் கூடாதது
அசாபல்லியம்-உறுதி, திடம்
அசாபாலகன்-ஆட்டுவாணிகன்
அசாரது-கொன்றை
அசாரம்-ஆமணக்கு, பிரயோசனமின்மை
அசாவாமை-தளராமை
அசாவேரி-ஒரிராகம்
அசி-ஒரு நதி, அவமதிச்சிரிப்பு, ஆயுதப் பொது, யுத்தம், வாள்
அசிக்கல்-அரும்பொருள் சிக்கலின்மை
அசிக்கினி - தக்கனின் இரண்டாவது மனைவி
அசிதம் - அமரபக்கம், அறிவின்மை, கருமை, சனி, சிவாகமமிருபத்தெட்டி னென்று
அசிதன்-சிவன், திருமால், புத்தன்
அசிதாம்புருகம் } நீலோற்பலம்
அசிதாம்பூருகம் }
அசிதை-அவுரி
அசிதோற்பலம்-நீலோற்பலம்
அசித்தல்-அழித்தல், நகைத்தல்
அசித்தி - அத்தாட்சி யற்றது, சித்தி யின்மை, தவறு
அசித்திரன்-கள்வன்
அசித்து-சடம்
அசிந்தம் - பத்திலட்சங்கோடி, கோடா கோடி, மரணம்
அசிந்தியம்-ஓரெண்,சிந்தைக்கெட்டாமை
அசிந்தை-நிர்ச்சிந்தை, புலனின்மை
அசிபத்திரகம்-கரும்பு
அசிபத்திரம்-கரும்பு, படையுறை, வாளலகு
அசிபத்திரவனம்-ஓர் நரகம்
அசிரப்பிரபை-மின்னல்
அசிரம்-உடல், காற்று, தவளை, முன்றில், விடயம், வெள்ளை, வெட்டிவேர்
அசிரவணம்-செவிடு
அசிரன்-சூரியன், தீ
அசிராபை-மின்னல்
அசிருபாடம்-உதிரப்பெருக்கு
அசினபத்திரிகை-வெளவால்
அசினம்-தோல், தோலாசனம்
அசினயோனி-மான்
அசீதகரன்-சூரியன்
அசீதளம்-கருப்பூரம்
அசீரணபேதி-ஓர்பேதி
அசீரணம் - செரியாமை, பசியின்மை, யெளவனம்
அசீரணவாயு-ஓர்வாயு
அசீர்-ஆயத்தம், தளபாடம்
அசீவம்-சூனியம், மரணம்
அசீவனி-சூனியம்
அசு-பிராணவாயு
அசுகம்-காற்று, துக்கம்
அசுகுசுப்பு-அருவருப்பு, சந்தேகம்
அசுகுணி-ஓர்பூச்சி, ஓர்வகைக் கரப்பன், காதிற்படரும் ஓர்நோய்
அசுகை-எழில், ஐயம்
அசுசமன்-அன்பன், கணவன்
அசுசி - அபகீர்த்தி, அருவருப்பு, சுசி யின்மை
அசுணமா-கேகயப்புள்
அசுணம் - வெள்வெங்காயம், கேகயப் புள்
அசுதந்தரம்-சுதந்தரமில்லாமை
அசுதாரணன்-சிவன்
அசுதை-விடம்
அசுத்தம்-சுத்தமின்மை, வேசிமார்க்கம்

அசுத்தாவி-சுத்தமில்லாவரூபி, பசாசு
அசுநாதி-இரசம்
அசுந்தரம்-அடாமை, அவலட்சணம்
அசுபதம்பவாதம்-ஓர்நோய்
அசுபதி-தங்கம், ஓர் நாள்
அசுபம்-அமங்கலம், அமுக்குரு, பாவம்
அசுப்பு-சடுதி
அசுமகன்-இக்ஷ்வாகுவம்சத்துதித்த கன்மாட பரதன் மகன்
அசுமாற்றம்-அசுகை, ஐயம், சயிக்கினே, சிலமன்
அசுமானகிரி-மேற்கட்டி
அசும்பு-கிணறு, பொல்லாநிலம், வழுக்கு நிலம்
அசுயம்-குதிரை பற்பாஷாணம்
அசுரகுரு-சுக்கிரன்
அசுரகெந்தி-அமுக்கிரு
அசுரசந்தி-இரணியவேளை
அசுரநாள்-மூலநாள்
அசுரமணம் - எண்வகைமணத்தொன்று, அது பெண்ணுக்குப் பொன்பூட்டிப் பெண்ணின் சுற்றத்திற்குப் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வது
அசுரமந்திரி-சுக்கிரன்
அசுரரிபு-விட்டுணு
அசுரர் - பதினெண்கணத்தவரு ளொருவர், அவுணர்
அசுரேசன்-காசிபர் பெற்ற அறுபத்தாறு கோடி அவுணர்க் கரசன்
அசுரேந்திரன்-தாரகாசுரன் புத்திரன்
அசுரை-இராசி, இருள், வேசி
அசுவகந்தி-அமுக்கிரு
அசுவகினி-அச்சுவினி
அசுவகெந்தி-அமுக்குரவு
அசுவசட்டிரம்-நெருஞ்சில்
அசுவசாத்திரம்-அசுவபரீட்சை நூல்
அசுவசாந்தி-ஓரியாகம்
அசுவசாபம்-குதிரைக்குட்டி
அசுவசாரத்தியம் - குதிரைச்சாரதித்துவம்
அசுவசாலை-குதிரைப்பந்தி
அசுவசேனன்-தக்ஷகன்மகன்
அசுவதாட்டி-குதிரையின்வேகம்
அசுவதி-அச்சுவினி, முதனாள்
அசுவத்தம்-அத்திமரம், அரசமரம்
அசுவத்தாமன் - சிரஞ்சீவிய ரேழ்வரிலொருவன், அவன் துரோணன்மகன்
அசுவந்தம் - அடுப்பு, மரணம், முடிவு, வயல்

அசுவபதி-மத்திரதேயத்தரசன்
அசுவபரி-அலரி
அசுவபரிட்சை / அசுவபரீட்சை } கலைஞான மறுபத்து நான்கினொன்று, அது குதிரையைப்பற்றியது
அசுவமியம்-குதிரைப்பாஷாணம்
அசுவமேதபருவம் - பாகவதத்தி லோர் பிரிவு
அசுவமேதம்-ஓர்யாகம்
அசுவமேதிகம் / அசுவமேதியம் } அசுவமேத யாகத்திற் குப்பக்குவமானகுதிரை
அசுவம் - அமுக்கிருக்கிழங்கு, குதிரை, குதிரைப்பற்பாஷாணம்
அசுவலாபன்-குதிரைப்பாகன்
அசுவாபரி-அலரி
அசுவாமணக்கு-சிறுபூளை
அசுவினி-அச்சுவினிநாள்
அசுவை-அச்சுவினிநாள், அத்தாட்சியற்றது
அசுழம்-நாய்
அசூசம் / அசூசி } ஆசூசம், சூதகம்
அசூதி-பிறப்பின்மை, மலடி
அசூயனம்-அசூயை, அவதூறு
அசூயை-அவதூறு, பொறாமை
அசூரி-பாமரன்,வீரமில்லாதவன்,வைசூரி
அசூர்-ஜில்லா உத்தியோகஸ்தர், சமுகம்
அசூர்க்கச்சேரி-கலெக்டர்கச்சேரி
அசேஷம்-முழுதும்
அசேதனம்-அறிவின்மை
அசேவனம் - அசட்டைபண்ணல், கீழ்ப்படியாமை, விலகுதல்
அசேவை-அசங்கை, விலகல்
அசை - அசைநிலை, அசையென்னேவல், அலகொன்றேனு மிரண்டேனுங்கொண்டு சீர்க்குறுப்பாய் வருவது, ஆட்டுமறி, இசைப்பிரிவு, இரைமீட்பு, சீரகம், செய்யுளுறுப்பிலொன்று, சொல்லுருபு, பிரகிருதி, பெண்ணுடு, மாயை
அசைஇ-இருந்து, இளைத்து, இளைப்பாறி, வருந்தி
அசைஇய-ஓய்ந்த
அசைஇயது-கிடந்தது
அசைகபாதன் - பதினோருருத்திரரிலொருவன்
அசைகை-அசைவு, ஐயம்
அசைச்சீர்-தனிகொளற்கிடனாகி ஓரசையே சீராயுநிற்பது

அசைச்சொல்-அசை நிறைக்குஞ்சொல்
அசைதல்-ஆடுதல், இருத்தல், உலாவல், கலங்குதல், சோம்பல், தங்கல், துவளல், பயப்படுதல்
அசைதன்னியம் - அறியாமை, சடத்துவம், ஞானக்குருடு
அசைத்த-கட்டிய
அசைத்தல் - ஆட்டல், ஓசையெடுத்தல், கட்டல்
அசைநிலை-அசைச்சொல்
அசைநிலையோகாரம் - ஈற்றசை யோகாரம் (உ-ம்) கேண்மினோ
அசைபோடல்-இரைமீட்டல்
அசைப்பருங்கல்-மலை
அசைப்பு-அசைதல், இறுமாப்பு, சொல், சொல்லுதல்
அசையடி-அம்போதரங்கம்
அசையந்தாதி-அடி ஈற்றசை வருமடி முதலசையாகத் தொடுத்திருப்பது
அசையாமணி-ஆராய்ச்சிமணி
அசையிடல்-அசைபோடல்
அசையு-அமுக்கிரு
அசைவாடுதல்-அசைதல், உலாவுதல்
அசைவு-ஆட்டம், ஓர்வகைத்தூக்கு, சலனம், சோர்வு, பெயர்ச்சி
அசைவெட்டுதல்-இரைமீட்டல்
அசோகதளிர்மணி - சௌந்திகப் பதுமராகமணி
அசோகம்-ஒருமரம், சோகமின்மை, மன்மதன்கணை, மருது, வரிலோத்திரம், வாழை
அசோகவர்த்தனன்-சந்திரகுப்தன் பௌத்திரன்
அசோகவனம்-வாழைவனம்
அசோகன் - அருகன், சோகமற்றவன், மன்மதன்
அசோகு - அசோகமரம், மருது, வரிலோத்திரம், வாழை
அசோசம்-கவலையின்மை
அசோணம் } குறட்டை, சவரி, சவரிலோத்திரம்
அசோண்டி }
அசௌக்கியஸ்தானம் - பனிரெண்டாமிடம்
அசௌசம்-ஆசூசம், சுத்தமின்மை, சூதகம்
அசௌரியம்-வீரமின்மை
அச்சதம்-நீர்முள்ளி
அச்சகாரம்-முன்பணம்
அச்சக்குறிப்பு-பயப்பாட்டுக்குறி
அச்சடியன்-ஓர்வகைச்சாயப்புடவை
அச்சடை-கீழ்காய்நெல்லி
அச்சணம்-அக்கணம்
அச்சத்தி-கத்தரி
அச்சபரம்-நாணற்புல்
அச்சபல்லம்-கரடி
அச்சமம்-அளத்துப்புல், முசுறுப்புல்
அச்சமுள்ளோன்-பயமுடையோன்
அச்சம்-அகத்தி, இலேசு, ஈசுரப்புல், ஓரலங்காரம், கடைப்படு தானமேழினுென்று, அஃது அச்சத்தானீதல், கரடி, காய்ச்சல்பாஷாணம், கோரைப்புல், சரியொப்பு, தகடு, பயம், பளிங்கு, மகடூஉக்குணம் நான்கினுென்று, முன்புறம்
அச்சயன்-கடவுள்
அச்சரம்-உதட்டிலுண்டாகு மோர்நோய்
அச்சல்-ஆச்சல், தரம்
அச்சவாரம்-உறுதிப்பணம்
அச்சருக்கை-எச்சரிக்கை, பத்திரம்
அச்சன்-தந்தை
அச்சாணி-அச்சுருவாணி
அச்சாணிமூலி-வேலிப்பருத்தி
அச்சாரம்-அச்சவாரம், ஆய்த்தப்பணம்
அச்சி-ஓர்தேயம், தாசி
அச்சித்தினை-ஓர்புல், தினை
அச்சிநறுவிலி - நறுவிலி, இம்மரத்துப் பட்டையிலிருந்துரித்தநாரால் மைசூர் தேசத்தில் கயிறுதிரிக்கப்படுகிறது
அச்சு-அடையாளம், உடல், உயிரெழுத்து, எழுத்து, கட்டளைக்கருவி, தேகம், நெய்வோர்கருவியினுென்று, பண்டியச்சு, யுகம்
அச்சுக்கட்டு-நெற்பயிரிடும்படியான நிலம்
அச்சுக்கம்பி-அச்சுக்கம்பு
அச்சுக்கம்பு-துப்பாக்கியில் மருந்து கெட்டிக்கும் கோல்
அச்சுதம்-அறுகும் வெள்ளரிசியுங்கூட்டி யணிவது, கெடுதலின்மை
அச்சுதன்-அழியாமையுள்ளோன், கடவுள், மூத்தோன், விட்டுணு
அச்சுதன்முன்வந்தோன்-பலபத்திரன்
அச்சுப்பலகை - நெய்வோர்கருவியினுென்று
அச்சுரம் - நெருஞ்சில், முருங்கை, நீர்முள்ளி

அச்சுருவாணி-தோகத்திற்செறிகதிர்
அச்சுலக்கை-துலாவினடுவச்சுமரம்
அச்சுவத்தம்-அரசமரம்
அச்சுவமுகாதனம்-கால்மடித்து இரண்டு முழந்தாளினும் முழங்கைகளையூன்றி இரண்டுள்ளங்கைகளையுங் கன்னத்திலேவைத்திருப்பது
அச்சுவம்-குதிரை
அச்சுவினி-அசுபதி
அச்சுவினிநாள்-அசுபதி
அச்சுறல்-பயப்படுதல்
அச்சுறுத்தல்-பயமுறுத்தல்
அச்சுறை-உடம்பு
அச்சோ-அதிசயச்சொல், இரக்கச்சொல்
அஸ்தமனம்-அத்தமனம்
அஸ்தம்-அஸ்தமிக்கை, ஒருநட்சத்திரம்
அஸ்தாந்தரம்-பொக்கிஷம்
அஸ்திசாரபேதி-அதிசாரபேதி
அஸ்திசுரம்-எலும்புருக்கிச்சுரம்
அஸ்திபாரம்-அத்திவாரம்
அஸ்திரி-உள்வஸ்திரம்
அஞர்-அறிவிலர், துன்பம், வருத்தம்
அஞலம் } கொசுகு
அஞல }
அஞ்சணங்கம்-பஞ்சவிலக்கணம்
அஞ்சணங்கியம்-பஞ்சவிலக்கியம்
அஞ்சதி-காற்று
அஞ்சபாதம்-ஓர்புள்ளடி
அஞ்சம்-அன்னப்புள்
அஞ்சலம்-சீலைத்தொங்கல், வாளுறை
அஞ்சலி - ஆடுதின்னுப்பாளை, கும்பிடல், சங்கங்குப்பி, நான்குபலம், பேதை, மாவிலிங்கு, வண்டுகொல்லி, வந்தனை, வறட்சுண்டில், வௌவால்
அஞ்சலிகாரிகை-ஓர்பூடு, சித்திரப்பாவை
அஞ்சலிகை-வௌவால்
அஞ்சலிவந்தனம்-கும்பிட்டுவணங்கல்
அஞ்சல்-தரங்கல், தரிப்பினெல்லை, தோல்வி, பயப்படுதல், வியங்கோண்முற்று
அஞ்சற்குழைச்சி-குங்குமபாஷாணம்
அஞ்சற்குளச்சி-குங்குமபாஷாணம்
அஞ்சனகிரி-சேடமலை
அஞ்சனக்கல்-கருநிமிளை
அஞ்சனக்காரன்-மந்திரக்காரன்
அஞ்சனக்கோல்-அஞ்சனந்தீட்டுங்கோல்
அஞ்சனத்திரயம் - மூவிதாஞ்சனம், அது சோராஞ்சனம், பாதாளாஞ்சனம், பூதாஞ்சனம்

அஞ்சனபாஷாணம் - கல்லீயம், விளைவு பாஷாண முப்பத்திரண்டிலொன்று
அஞ்சனம்-இருள், கறுப்பு, மேற்றிசையானை, மை
அஞ்சனவண்ணம்-கருநிறம்
அஞ்சனவண்ணன் - திருமால், கருநிறத்தையுடையவன்
அஞ்சனன்-இந்திரன், சனி, விட்டுணு
அஞ்சனாதேவி-அனுமன்றாய் [ம்
அஞ்சனாலா-கருங்காக்கணம், நீலோற்பல
அஞ்சனாவதி - வடகீழ்த்திசையானைக்குப் பெண்யானை, வாயுதேவன்மனைவி
அஞ்சனி-காயா, நாணற்புல்
அஞ்சனை-அனுமன்றாய், வடதிசையானைக்குப் பெண்யானை
அஞ்சாணிமூலி-அச்சாணிமூலி
அஞ்சாப்பட்டயம் - இரட்சண்ணிய பத்திரிகை
அஞ்சாரஇடையர்-ஓர்வகையிடையர், இவர்கள் ஸ்திரீகள் கலியாணத்தில் ஐந்தாலியென்னும் கழுத்தணியணிவது வழக்கம்
அஞ்சாரப்பெட்டி-அஞ்சறைப்பெட்டி
அஞ்சாலிஇடையர்-அஞ்சாரஇடையர்
அஞ்சாவிரா-பெருங்குமிழ் [முகம்
அஞ்சானனம்-சிங்கம், சிங்கவிராசி, ஐந்து
அஞ்சானனன்-சிவன், ஐந்துமுக முள்ள
அஞ்சி-எசமானன் [வன்
அஞ்சிகம்-கண்
அஞ்சிக்கை-அச்சம்
அஞ்சிட்டன்-சூரியன்
அஞ்சிதமுகம்-வருத்தமாற்று திருதோண் மேற் றலை சாய்த்தல்
அஞ்சிதம்-உண்டாதல், தலையசைத்தல், நல்லறிவு, பூசித்தல், பொருந்தல், வணக்கம்
அஞ்சிதவணி-தற்குறிப்பலங்காரம்
அஞ்சீரம்-அத்தி, அத்திப்பழம்
அஞ்சு-ஐந்து
அஞ்சுகம்-கிளி
அஞ்சுதல்-பயப்படுதல்
அஞ்சுமான் - சூரியன், சிவகாம மிருபத்தெட்டி லொன்று, துவாதசாதித்தரிலொருவன்
அஞ்சுருவாணி-அச்சுருவாணி
அஞ்சுவர்ணத்தோன்-துத்தநாகம், நெய்த்துக்காரன்

அஞ்சுவனத்தார்-நெய்வாரிஞேர்பேதம்
அஞ்செலி-தாழை
அஞ்செவி-வறட்சுண்டி
அஞ்சோலம்-எருக்கு
அஞ்ஞத்துவம்-அஞ்ஞானம்
அஞ்ஞன்-அறிவிலான்
அஞ்ஞாதம்-அக்கியாதம்
அஞ்ஞாதவாசம்-அக்கியாதவாசம், கரந்துறைதல்
அஞ்ஞானம்-ஞானமின்மை, தெய்வ அறிவின்மை [தாய்
அஞ்ஞை-அறிவிலான், இலாடத்தானம்
அடகாம்பரி - பதினெட்டாவது மேளகர்த்தா
அடகு - இலைக்கறி, கடன்கோடற்கீடுவைத்தல்
அடக்கம் - அடங்கியகாரியம், அடங்கியபொருள், உயிரொடுங்கியிருத்தல், ஒடுக்கம், ஒருவகைத்தோள், கருத்து, கருவி, மனவமைதி
அடக்கம்பண்ணுதல் - சேமஞ் செய்தல், பிரேத முதலியவற்றைப் புதைத்தல்
அடக்கல்-ஒடுக்கல், கீழ்ப்படியப்பண்ணல்
அடக்காப்புல்-பீசைப்புல்
அடக்காய்-கடுகு
அடங்கம்-கடுகுரோகிணி
அடங்கலர்-பகைவர்
அடங்கல்-அடக்கம், அமைதல், எல்லாம், குத்தகை, சுருங்கல், சுற்றுவட்டம், வியங்கோண்முற்று
அடங்கன்முறை - கோவிற்பதிகம், அதாவது சைவசமயாசாரியர் மூவரும் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப்பதிகங்களடங்கிய திருமுறை
அடங்காப்பற்று- அடங்காதவர்களிருக்குமூர்
அடங்காவாரிதி - ஒலிமாருச்சமுத்திரம், கடலுப்பு, மூத்திரம்
அடசல்-அடைசுதல்
அடதாளம்-சத்ததாளத்தொன்று
அடத்தி-வாசி
அடரி-வின்னுனி
அடந்தை-ஓர்தாளம்
அடப்பம்-சாமான் பை
அடப்பனர் - நெய்தற்றலைவன் பட்டப்பெயர்
அடப்பன்-அடப்பனர், கடப்பமரம்
அடம் - ஈனம், சஞ்சாரம், பிடிவாதம், பொல்லாங்கு, போகுதல்
அடம்பக்கொடி - அடப்பங்கொடி, குதிரைக் குளம்பு இலை
அடம்பாரம்-இடம்பம், பரப்பம், பிரபல்லியம், முழுதும்
அடம்பு-அடம்பங்கொடி, அடப்பம்பூ, ஆட்டுக்காலடம்பு, மான்குளம்படம்பு
அடயம்-துடப்பம்
அடரடிபடரடி-முற்றுமழிக்கை
அடரார்-பகைவர்
அடர்-அடரென்னேவல், செறிவு, தகடு, நெருக்குகை
அடர்ச்சி-நெருக்கம்
அடர்தல்-நெருங்கல், பொருதல்
அடர்த்தல்-நெருக்கல், பொருதல்
அடர்த்தி-நெருக்கம்
அடர்ந்தேற்றம்-கொடுமை, நெருக்கிடை
அடர்ந்தேற்றி-இட்டேற்றம், நெருக்கம்
அடர்பு-செறிவு, நெருக்கம், வினையெச்சம்
அடர்ப்பம்-நெருக்கம்
அடர்ப்பு-நெருக்கம், போர்
அடர்வு-அடர்பு
அடலம்-மாறுமை
அடலார்-பகைவர், போர்வீரர்
அடலி-வெள்ளாட்டி
அடலை-சாம்பல், போர்க்களம், மாறுமை
அடலைமுடலை-வீண்வார்த்தை
அடல்-கொல்லுதல், சமைத்தல், பொருதல், வலி, வியங்கோண்முற்று, வெற்றி
அடவாதி-பிடிவாதக்காரன்
அடவி-காடு, கூட்டம், சோலை
அடவிகன்-வனவாசி
அடவிச்சொல்-கோரோசனை
அடவியில்திருடி-சதுரக்கள்ளி
அடனம்-அலைந்துதிரிதல், போகுதல்
அடா-ஓரதிசயக்கிளவி, கீழ்மகனை விளிக்குஞ்சொல்
அடாசனி-ஆரை, புளியாரை
அடாசு-மட்கிச்செத்தது
அடாசுதல்-திணித்தல், விலகுதல்
அடாணு-ஓரிராகம்
அடாதது-தகாதது
அடாத்தியம்-அடாதது
அடாத்து - தகாதது, பொருந்தாதது, முறைகேடானது

அடாவந்தி-அநியாயம்,இட்டேற்றம்,துன்பம்

அடி - செருப்படை, அடியென்னேவல், அடியோர், ஆதி, ஓரளவு, கடவுள், கால், காற்சுவடு, கீழ், கீழ் மகளை விளிக்குஞ் சொல், செய்யுளுறுப்பி ளொன்று, தாது, முன், மூலம், வமிச மூலம்

அடிகள்-கடவுள், குரு, தலைவன், தலைவி, முனிவர், மூத்தோன்

அடிகொள்ள-தொடங்க

அடிகோல-அஸ்திவாரம்போட, முயல

அடிக்கீழ்ப்படுத்தல் - அடக்கி நடத்தல், ஆண்டுகொள்ளல்

அடிக்கானகன்னி - பவளப்புற்று, பாஷாணம்

அடிக்குடில்-அடிச்சேரி

அடிக்குள்-உடனே

அடிக்கொள்ளுதல் - தொடக்கம் பண்ணுதல்

அடிக்கோலுதல்-இடம்பிடித்தல்

அடிசில்-சோறு

அடிச்சுவடு-காற்சுவடு

அடிச்சேரி-அடிக்குடில், கிராமம்

அடிதரிகம்-அமுக்கிரு

அடிதலை-அடிமுடி, ஆதியந்தம், வரலாறு

அடிதல்-அடிபடுதல்

அடித்தலம்-அத்திவாரம், கால்

அடித்தல்-அதுக்கல், அறைதல்

அடித்தழும்பு-காற்சுவடு

அடித்தளம் - அத்திவாரம், வீட்டினிற் பரப்பு

அடித்திகம்-அமுக்கரா, அக்கிரு

அடிநா-நாவினடி

அடிபணிதல்-நமஸ்காரஞ்செய்தல்

அடிபார்த்தல்-எதுபார்த்தல்

அடிபிடித்தல்-எதுபிடித்தல், கறிமுதலிய சுண்டல், முதற்பிடித்தல்

அடிபெயர்தல்-விலகுதல்

அடிப்படுதல்-அமைதல்

அடிப்படுத்தல்-கீழ்ப்படுத்தல்

அடிப்பட்டகாந்தி-தீமுறுகற் பாஷாணம்

அடிப்பதறல்-கால்நடுங்கல்

அடிப்பந்தி-முதற்பந்தி

அடிப்பலம்-முதற்பலன், மூலபலம்

அடிப்பற்று-சோறுமுதலிய பாண்டத்திற் பற்றுகை, பாறையுப்பு

அடிப்பற்றுதல்-கறிமுதலிய சுண்டுதல்

அடிப்பாடு-பழக்கம், வழி

அடிப்பாய்தல்-ஓர்விளையாட்டு, தாண்டுதல்

அடிப்பார்த்தல் - நிழலளந்து பொழுது குறித்தல், யோசித்தல்

அடிப்பினை-வங்கமணல், வங்கம்

அடிப்போடுதல் - இடம் பண்ணுதல், தொடங்குதல்

அடிமடக்கு - சித்திரக்கவியி லொன்று, பாதமடக்கு

அடிமடி-உள்மடி

அடிமடை-உள்மடை

அடிமயக்கு-பாதமயக்கு

அடிமறிமண்டிலவாசிரியப்பா - அகவற்பாவினுளொன்று. அஃது எல்லா வடியு மளவொத்து எவ்வடியை முதனடு விறுதியாகக்கொள்ளினு மோசையும் பொருளும் வழுவாது நிற்பது, ஓர்வகை யாசிரியப்பா

அடிமறிமாற்றுப்பொருள்கோள் - பொருள்கோ ளெட்டி னொன்று, அது யாதானு மோரடியை யிறுதிநடு முதல் களில் வேண்டியவிடத்துக் கூட்டிப் பொருளிசைமாட்சி மாறாது பொருள் கொள்வது, [உ-ம்] "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங்குற்றம், விலைப் பாலிற்கொண்டூன் மிசைதலுங் குற்றஞ், சொலற்பாலவல்லாத சொல்லலுங்குற்றங், கொலற்பாலுங் குற்றமே யாம்." இதனை மாறிக்காண்க

அடிமறி மொழி மாற்றுப் பொருள்கோள் - பொருள்கோ ளெட்டி னொன்று, அஃது அடிகளையேற் புழிக் கூட்டிப் பொருள்கொள்வது [உ-ம்] "படுபயன்வெஃகிப் பழிபடுவசெய்யார் நடுவன்மைநாணுபவர்" என்பதனுள் நடுவன்மை நாணுபவர்படுபயன் வெஃகிப்பழிபடுவ செய்யார் எனக் கூட்டிக் காண்க

அடிமுகனை-துவக்கம்

அடிமுடி-ஆதியந்தம், காலுந்தலையும், கீழ் மேல், வரலாறு

அடிமுரண்டொடை - அடிதோறு முதற் கட் சொல்லேனும் பொருளேனு மறு தலைப்பட்டு வருவது [உ-ம்] இருள் பரந்தன்னமா நீர்மருங்கி னிலவுக் குவித்தன்ன

அடிமோனைத்தொடை - அடிகடோறு முதலெழுத்தொன்றிவருவது
அடிமை - சிறை, தொண்டானவன், தொண்டு
அடிம்பு-சிவதை
அடியடியாக-தலைமுறை தலைமுறையாக
அடியந்தாதி-நின்றபாட்டினீற்றடி வரும் பாட்டின் முதலடியாகப்பாடல்
அடியல்-சொரிதல், [உ-ம்] கதிரடிந்தது, தொடர்
அடியளபெடைத்தொடை - அடிதோறு முதன்மொழிக்கண் அளபெடுத்து வருவது
அடியறுக்கி-மட்கலமறுக்குங்கருவி
அடியனுதி-தொன்றுதொட்டுள்ளது
அடியார்-அடிமைகள், தொண்டர்
அடியார்க்குநல்லார்-சிலப்பதிகார உரையாசிரியர்
அடியாறு-தொன்றுதொட்ட வரலாறு
அடியிடுதல்-தொடங்குதல்
அடியியைபுத்தொடை - அடியினிறுதி தோறுநின்ற வெழுத்தேனுஞ் சொல்லேனுமொன்றி வருவது
அடியீடு-ஆரம்பம்
அடியீரல்-மண்ணீரல்
அடியுண்ணல்-அடிபடுதல், திரிதல்
அடியுப்பு-கல்லுப்பு
அடியுரம்-அடிப்பலம், அத்திபாரம்
அடியெதுகைத்தொடை - அடிதோறு மிரண்டாமெழுத்தொன்றி வருவது
அடியேன்-தொண்டனுகியநான்
அடியோட்டி-யுத்தகருவியி லொன்று
அடில ஓடாகம்-அதில ஓடாகம்
அடிவயிறு-கீழ்வயிறு
அடிவரலாறு - காரணம், தொடக்கம், வமிசவரலாறு
அடிவருடல்-கால்பிடித்தல்
அடிவரையறை-அடியாறு
அடிவாரம்-சாரல்
அடிவாறு-அடியாறு
அடிவானம்-திகாந்தம்
அடிவிடுதல் - பாண்டங்களி னடிப்பொருத்துவிடுதல்
அடிவிரிதல் } அளவிடுதல்
அடிவிள்ளல் }
அடிவெண்குருத்து-முருந்து
அடிவைத்தல் - ஆரம்பித்தல், தலையிடல், நடக்கத்தொடங்கல்

அடுகளம்-போர்க்களம்
அடுகிடை-எழும்பாதகிடை, பிரியாதடுத்துக்கொள்ளுதல்
அடுக்கணி-ஓரலங்காரம், அது சொல்லும்பொருளு மடுக்கிவருவது
அடுக்கம்-பக்கமலை, மலைப்பக்கம்
அடுக்கலிடல் - நெல்லை யிரண்டாமுறை குற்றல்
அடுக்கல்-ஒன்றன்மே லொன்றுவைத்தல், குவித்தல், தொடுத்தல், மலை, வியங்கோண்முற்று
அடுக்களை-மடைப்பள்ளி
அடுக்காலாத்தி-அடுக்குத்தீபம்
அடுக்கானகன்னி-சரியானவள், பவளப்புற்றுப்பாஷாணம்
அடுக்கு - அடுக்கப்பட்டது, அணியம், ஒழுங்கு, சிரேணி, சேர்மானம், பத்தி, பலவின் கூட்டம்
அடுக்குதல்-ஒன்றன்மே லொன்றுவைத்தல்
அடுக்குத்தீபம்-அடுக்குவிளக்கு
அடுக்குத்தொடர் - ஒருமொழியே பலமுறை யடுக்கிவருவது, அஃது அசைநிலையினும் பொருணிலையினு மிசைநிறையினு மிரண்டுமுதனான்களவு மடுக்கிவரும், [உ-ம்] அன்றேயன்றே, அசைநிலை, தீதீதீ, பொருணிலை, வருக வருக வருக வருக, இசைநிறை
அடுக்குப்பார்த்தல் - ஒத்திக்கைப் பார்த்தல்
அடுக்குமல்லிகை-ஓர்மல்லிகை
அடுக்குமுள்ளி-ஓர்பூண்டு, முள்ளி
அடுக்கூமத்தை-ஓர் ஊமத்தை
அடுசிலைக்காரம்-செந்நாயுருவி
அடுதல்-உண்பெண்ணுதல், கொல்லல், சமைத்தல், மேற்கொள்ளல்
அடுத்த-சரியான, நெருங்கின
அடுத்தல்-கிட்டல், சம்பவித்தல், சார்தல், சேர்த்தல்
அடுத்தார்-சேர்ந்தார்
அடுத்தி-வட்டி, வாசி
அடுப்பு-அச்சம், சேர்க்கை, தீவாய்த்தானம், பரணிநாள்
அடுவல்-வரகும் நெல்லுங்கலப்பு
அடை-அடுத்தல், அடைகஷாயம், அடைகிடத்தல், அடையென்னேவல், அப்பவருக்கம், இலை, உவமை, கனம், கொதுவை, சேரென்னேவல், தோசை, நிலவிறை, மூளை, வினைமுற்று

அடைகட்டி-அடைமண்
அடைகலம்-சேமக்கலம்
அடைகல்-கம்மப்பட்டடை, மதகடைக்குங் கல்
அடைகாத்தல்-அடைகிடத்தல்
அடைகாய்-ஊறுகாய், வெற்றிலைப்பாக்கு
அடைகிடத்தல் - குஞ்சுபிறப்பிக்க முட்டையைக்காத்தல், நீங்காதிருத்தல்
அடைகுளம்-வாய்க்காலில்லாக் குளம்
அடைகுறடு-பட்டடை
அடைகோட்டை-வெளிப்போகப் பெறுத தடை
அடைகை-நெருங்குகை, பெறுகை
அடைகோழி-அவயக்கோழி
அடைக்கத்து - அடைகிடக்குங் கோழியிடுஞ் சத்தம்
அடைக்கலக்குருவி-ஊர்க்குருவி
அடைக்கலம்-அடைக்கலப் பொருள், அபயம், சரண்புகல், புகலிடம்
அடைக்கலாங்குருவி-ஊர்க்குருவி
அடைக்காய்-தாம்பூலம், பாக்கு
அடைசல்-அடைசுதல், நெருக்கம்
அடைசீலை-காரச்சீலை, பாழ்ச்சீலை
அடைசுதல்-ஒதுக்குதல், கதுப்புக்குள் வைத்துக் கொள்ளுதல், செருகுதல், நெருக்குதல், நெருங்குதல்
அடைசுபலகை-செருகி வெளியடைக்கும் பலகை
அடைசுவலை-ஓர்வித வலை
அடைசொல்-அடைமொழி, விசேடண மொழி
அடைச்சி-உடுத்து
அடைச்சீட்டு-கிஸ்தி ரசீது
அடைச்சுதல்-மலர்சூட்டல்
அடைதல்-அடங்குதல், ஒதுங்குதல், கூடுதல், சேருதல், பெறுதல்
அடைத்தல்-காப்புச்செய்தல், சேர்த்தல், தடுத்தல், பூட்டல், மழைவிடாது பெய்தல், மறியற்படுத்தல், வெளியை மறைத்தல், வேலியடைத்தல்
அடைநெடுங்கல்லியார் - புறநானூற்றில் இருசெய்யுட்க ளியற்றியவர்
அடைந்தார் - அடைக்கலம் புகுந்தோர், மித்திரர்
அடைந்தோர்-உறவோர்
அடைப்பம் - அம்பட்டனுயுத வுறை, சாமான் பை, வெற்றிலைப் பை

அடைப்பன் - ஓர்வியாதி, மாடுகளுக்குத் தொண்டையிலுண்டாவது
அடைப்பு-அடைக்கப்பட்டது, அடைத்தற்றன்மை, அடைத்தற்றொழில், கதவு, சரளி முதலியவற்றி னடைப்பு, வேலி
அடைப்பை-வெற்றிலைப்பை
அடைப்பைக்காரன் - பிளவு சுருளெடுத்துக் கொடுப்போன்
அடைமண்-கலப்பையிலடைந்தமண்
அடைமழை-விடாமழை
அடைமாங்காய்-மாங்காய் ஊறுகாய்
அடைமானம்-உவமை, ஈடு, பிரதி, வழிவகை
அடைமொழி-விசேடணமொழி
அடைய-எல்லாம்
அடையடுத்தவாகுபெயர் - ஒரு பொருள தன்புறத்துப் பண்பாய்நின்ற வடையோடுகூடி யாகுபெயராய் வழங்குவது, [உ-ம்] புகையிலைநட்டான்
அடையலர் } பகைவர்
அடையலார் }
அடையல்-அடைகுதல், அடைந்து வருவது, எல்லாம், வியங்கோண்முற்று
அடையாளம்-அறிகுறி, குறிப்பு, சின்னம், மாதிரி
அடைவிகச்சேலம்-கஸ்தூரிமஞ்சள்
அடைவு - ஈடு, உபமானம், எல்லாம், முறை, விதம்
அட்சகன்னம்-நேர்முக்கோணத்தி னெடுவரி
அட்சுசூலை-ஓர் வியாதி
அட்சதை-மங்கலவரிசி, பொரியரிசி
அட்சபாகை-நேர்முக்கோணத்தினளவு
அட்சபாடனம்-திரைப்படல்
அட்சபாதன்-கௌதமரிஷி, நியாயவழியோன்
அட்சமணி-அக்கமணி, உருத்திராட்சம்
அட்சமாலை-அக்கமாலை
அட்சம்-அக்கம், உருத்திராட்சம், கண், தான்றிக்காய், வெங்காயம்
அட்சய-ஓர் வருடம்
அட்சயதூணி-அருச்சுன னம்புக்கூடு
அட்சயபாத்திரம்-பாண்டவருக்குச் சூரியன் கொடுத்த பாத்திரம், வைணவர்கள் ஐயமேற்கும் பாத்திரம்
அட்சயம்-கேடின்மை
அட்சரசஞ்சன் }
அட்சரசணன் } எழுத்துக்காரன்
அட்சரசனன் }

அட்சரசன்னி-இலேகிணி
அட்சரசீவிகன்-எழுத்துக்காரன்
அட்சரசுதகம்-அக்கரசுதகம்
அட்சரசுத்தி-உச்சரிப்புத்திருத்தம்,எழுத்துத் திருத்தம்
அட்சரதூலிகை-இலேகிணி
அட்சரப்புல்-பீனசப்புல்
அட்சரமுகன்-மாணுக்கன்
அட்சரம்-எழுத்து, ஓர்நோய், தர்மம், தவம், பிரகிருதி, பிரணவம், முத்தி, வேதப்பொருள்
அட்சரலட்சணம்-அக்கரவிலக்கணம்
அட்சரவினியாசம்-எழுத்து, வேதம்
அட்சராரம்பம்-அக்கராரம்பம்
அட்சி-கண், சேர் என்னு மளவை
அட்சீபம்-ஓர் வகை மாமரம், முருங்கை மரம்
அட்டகசம்-ஆடாதொடை
அட்டகணம்-செய்யுட்குரியவெண்கணம், அவை ஆகாயம், இயமானன், சூரியன், தீ, நிலம், நீர், மதி, வாயு இவற்றுள் முன்னைய நான்கு நீக்கி மற்றய நன்று
அட்டகணிதம்-எண்கணிதம், அவை கனமூலம், கனம், குணனம், சங்கவிதம், பாகாரம், வருக்கமூலம், வருக்கம், விபகலிதம்
அட்டகம் - அயமலாதி எட்டின் கூட்டம், வசம்பு, வடமொழியினேர்பிரபந்தம்
அட்டகருமம்-ஆகருடணம், உச்சாடனம், தம்பனம், பேதனம், மாரணம், மோகனம், வசியம், வித்துவேடணம் ஆகிய எண்வித்தை
அட்டகாசம்-ஆடாதோடை, பெருநகை
அட்டகிரி-அட்டகுலமலை, அவைஇமயம், ஏமகூடம், கந்தமாதனம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம்
அட்டகுணம்-கடவுட்குரிய எண்குணம், அவை இயல்பாகவே பாசங்களி னீங்குதல், இயற்கையுணர்வினனுதல், தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், பேரருளுடமை, முடிவிலாற்றலுடைமை, முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை
அட்டகுலபருவதம்-அட்டகிரி
அட்டகுலயானை-அட்டதிக்கயம்
அட்டகுற்றம் - மலசகிதர்க்குரிய குணம் எட்டு, அவை அந்தராயம், ஆயு, கோத்திரம், ஞானவைபரணீயம், தரிசினவரயம், நாமம், மோகநீயம், வேதநீயம்

அட்டகுன்மம்-எண்வகைக் குன்மநோய், அவை எரி, சத்தி, சன்னி, சிலோத்துமம், சூலை, பித்தம், வலி, வாதம்
அட்டகை-அட்டமி, பிதிர்வணக்கம், யாக பிருபத்தொன்றினென்று
அட்டகோளம்-அட்டதிக்கு
அட்டசித்தி - யோகசித்தர்க்குரிய எண்சித்தி, அஃது அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்
அட்டசுபம் - எண்வகைமங்கலம், அவை இணைக்கயல், கண்ணுடி, சாமரம், கொடி, தோட்டி, நிறைகுடம், முரசு, விளக்கு
அட்டசூரணம்-சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், சீரகம், கருஞ்சீரகம், காயம், இந்துப்பு
அட்டணை-குறுக்கே
அட்டணைக்கால்-மடித்தகால்
அட்டதயாவிருத்தி - பிறரையந் தீர்த்தல், தீமைக்கஞ்சல், பிறர்துயர்க்கிரங்கல், நன்மை கடைப்பிடித்தல், பிறர் கருமத்திற் குடன்படல், பிறர் கருமமுடிக்கவிரைதல், பிறர்க்குப் பொருள் வரவையுவத்தல், பிறர் செல்வம் பொறுத்தல்
அட்டதனம் - எட்டுப் பிரயோஜனம், அவை, குணம், சம்பத்து, தனம், நல்லகுலம், ரூபம், வித்தை, விவேகம், வயது, இவை யோக்கியர்க்குரிய பேறெட்டு
அட்டதாது - எண்வகைலோகம், அவை பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம்
அட்டதானபரீட்சை - வைத்திய ரறிகுறியெட்டு, அவை, நாடி, முகம், மலம், அமுரி, கண், நா, சரீரம், தொனி
அட்டதிக்கயம்-அட்டகுலயானை, அவை கிழக்காதிமுறையே ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம்
அட்டதிக்கு-எட்டுத்திசை, அவைகிழக்கு, தென்கீழ், தெற்கு, தென்மேல், மேற்கு, வடமேல், வடக்கு, வடகீழ்

அட்டதிக்குப் பாலகர் - திக்குக்காவலர், அவர் கிழக்காதி முறையே இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்

அட்டதிசம்-எருக்கு

அட்டதிசையானை-அட்டதிக்கயம்

அட்டநாகம் - எண்வகைநாகம், அவை அனந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி

அட்டபந்தனம்-திக்குக்கட்டு, அவைகருங்குங்கிலியம், வெள்ளைக்குங்கிலியம், சுக்காங்கல், தேன்மெழுக்கு, செம்பஞ்சு, மைசாட்சி, கொம்பரக்கு, காவிக்கல், வெண்ணெய்; இவ்வெட்டையு மிடைப்படி சேர்த்து முறைப்படி யரைத்துச் செய்வது

அட்டபரிசம் - எண்வகையூறு, அவை ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல்

அட்டபாலகர்-அட்டதிக்குப்பாலகர்

அட்டபாலகர்குறி-திக்குப்பாலகரடையாளம், அவை இந்திராதிமுறையே இடி, புகை, சீயம், ஞாளி, இடபம், கழுதை, யானை, காகம்

அட்டபுகைசொல்-கோரோசனை

அட்டபோகம் - எண்போகம், அவை அணிகலன், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம்

அட்டபிரமாணம் - அளவை யெட்டு, அவை அனுமானம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உவமானம், ஐதிகம், சம்பவம், பிரத்தியட்சம்

அட்டமங்கலம்-அட்டசுபம், ஓர்பிரபந்தம்

அட்டமணம்-எண்வகை மணம், அவை ஆசுரம், ஆரிடம், இராக்கதம், காந்தருவம், தெய்வம், பிரசாபத்தியம், பிரமம், பைசாசம்

அட்டமம் - உதயலக்கினத்திற்கு எட்டாமிடம்

அட்டமாசித்தி-அட்டசித்தி

அட்டமாநாகம்-அட்டநாகம்

அட்டமாந்தம் - கணமாந்தம், சுழிமாந்தம், செரியாமாந்தம், பெருமாந்தம், போர்மாந்தம், மலடிமாந்தம், வலிமாந்தம், வாதமாந்தம் என மாந்த நோய் எட்டு

அட்டமி-எட்டாந்திதி

அட்டமூர்த்தம் - ஈசுரன் வடிவ மெட்டு, அவை இயமானன், கால், சந்திரன், சூரியன், தீ, நிலம், நீர், வெளி

அட்டமூர்த்தி, அட்டமூர்த்திதரன் } சிவன்

அட்டமூலம் - அரத்தை, கண்டபரங்கி, காஞ்சொறிவேர், கோரைக் கிழங்கு, சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், நன்னாரிவேர்

அட்டம், அஷ்டம் } அண்ணம், அருகிடம், எட்டு, ஜாதிக்காய், மேல்வீடு, வினைமுற்று

அட்டம்பாரித்தல்-பக்கலில் விசாலித்தல்

அட்டயோகம்-அட்டாங்கயோகம்

அட்டயோசம்-அரப்பொடி

அட்டலட்சணம்-அட்டகுணம்

அட்டலட்சுமி - எண்வகை இலக்குமி, அவை இராச்சியலட்சுமி, கீர்த்திலட்சுமி, சௌரியலட்சுமி, தனலட்சுமி, தானியலட்சுமி, தைரியலட்சுமி, விஜயலட்சுமி, வித்தியாலட்சுமி

அட்டலோகம்-அட்டதாது

அட்டவசுக்கள்-எண்வகைவசுக்கள், அவர் அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன்

அட்டவணிகருணம் - வணிகர் குணம் எட்டு, அவை இடனறிந்தொழுகல், இறுவஞ்சாமை, ஈட்டல், உறுவது தெரிதல், தனிமையாற்றல், பகுத்தல், பொழுதொடு புணர்தல், முனிவிலனுதல்

அட்டவணை-சேர்க்கப்பட்டது, சொல்லப்பட்ட காரியத்தி னொழுங்கு, வரிசைக் குறிப்பு

அட்டவருக்கம்-இந்துப்பு, ஓமம், கருஞ்சீரகம், சீரகம், சுக்கு, திப்பிலி, பெருங்காயம், மிளகு கூடிய எட்டு மருந்து சரக்குகள்

அட்டவிகாரம்-மனிதர்க்குரிய எட்டுவிகாரம், அவை காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் முதலியன

அட்டவூறு-எண்வகையூறு, அவை கருச்சரை, சீர்மை, தன்மை, திண்மை, நொய்மை, மேன்மை, வண்மை, வெம்மை

அட்டவெற்றி-எண்வகைவெற்றி, அவை பகைவரைக் கவர்தல், பகைவர் கவர் நிரைமீட்டல், பகைமேற் செல்லல், பகைமுன் னெதிரூன்றல், தன்னரண் காத்தல், பகைவரரண் வளைத்தல், பொருதல், போர்வெல்லல், இவற் றிற்கு முறையே மாலே, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை

அட்டவைசுவரியம்-எண்வகைச்செல்வம், அஃது அடிமை, இராசாங்கம், சுற் றம், நெல், பொன், மக்கள், மணி, வாகனம்

அட்டனம்-சக்கராயுதம்

அட்டாங்கநமஸ்காரம்-எட்டுறுப்பு நிலந் தோயவணங்கல்

அட்டாங்கயோகம்-யோகமுறை யெட்டு, அவை ஆதனம், இயமம், சமாதி, தாரணை, தியானம், நியமம், பிரத்தி யாகாரம், பிராணாயாமம்

அட்டாங்கவந்தனம் - எண்வகை யுறுப்பு நிலந்தோய வணங்கல், அஃது இரு கால், இருகை, இருதோள், நெற்றி, மார்பு

அட்டாதசகுணம் - யாக்கைக் குறு பதி னெண்குற்றம், அவை அதிசயம், இன் பம், உவகை, உறக்கம், கேதம், கைய றவு, நரை, நினைப்பு, நீர்வேட்டல், நோய், பசி, பயம், பிறப்பு, மதம், மரணம், வியர்த்தல், வெகுளி, வேண் டல்

அட்டாதசதருமசாத்திரம்-தருமநூல்பதி னெட்டு, [சதுரகராதியில் பத்தொன் பது சொல்லப்பட்டிருக்கிறது] அவை மனு, அத்திரி, ஔரிதம், விட்டுணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கீரசம், இயமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயனம்,பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தக்கம், கௌத மம், சாதான்மம், வசிட்டம், இவற் றுள் மனு கிரேதாயுகத்திலும், கௌத மம் திரேதாயுகத்திலும், சங்கலிதம் துவாபரயுகத்திலும் பராசரம், கலி யுகத்திலும் சிறந்தன

அட்டாதசபாடை-பதினெட்டுப் பாஷை, அவை அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திராவிடம், துளு வம், பப்பரம், மகதம், மராடம், வங் கம்

அட்டாதசபுராணம் - பதினெட்டுப் புரா ணம், அவை ஆக்கினேயம், இலிங்கம், காந்தம், காருடம், கூர்மம், சைவம், நாரதீயம், பதுமம், பவிஷியம் [பௌடி கம்], பாகவதம், பிரமகைவர்தம், பிர மம், பிரமாண்டம், மச்சியம், மார்க் கண்டேயம், வராகம், வாமனம்,வைண வம்

அட்டாதசமூலம் - எருக்கு, கண்டங்கத் திரி, கரந்தை, கறிமுள்ளி, குமிழ் கொடிவேலி, சங்கங்குப்பி, சிற்ரு மல்லி, தழுதாழை, தூதுளை, நன்னாரி, நொச்சி, பாதிரி, பேராமல்லி, மாவி லிங்கம், முருங்கை, வில்வம், வேர்க் கொம்பு

அட்டாதசோபபுராணம்-பதினெட்டு உப புராணம், அவை ஆங்கிரம், உசனம், கபிலம், காளி, சனற்குமாரம், சாம்ப வம், சிவதன்மம், சௌரம், தூருவர் சம், நந்தி, நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்க்கவம், மாரீசம், மான வம், வாசிட்டலிங்கம், வாருணம்

அட்டாதுட்டம் } அடாந்தேற்றம், தாறு
அட்டாதுட்டி } மாறு

அட்டாபதபத்திரம்-பொற்றகடு

அட்டாபதம்-எண்காற்புள், கதவின்ருள், பொன், வன்னப்புடவை

அட்டாபந்தனம்-திக்குப்பந்தனம்

அட்டாலம்-அட்டாலே, மேன்மாடம்

அட்டாலிகாகாரன்-கற்சிற்பன்

அட்டாலே-அட்டாளை

அட்டாலேமரம்-ஓர்மரம்

அட்டாவதானம்-ஒரேசமயத்தில் எட்டுக் காரியத்தைச் சிந்தித்தல்

அட்டாளகம் } மேல்வீடு
அட்டாளம் }

அட்டாளிகை-மேன்மாடம்

அட்டாளை-ஓர்மரம், சிரும்பி

அட்டி-அதிமதுரம், இட்டு, இருப்பை, எட்டி, செஞ்சந்தனம், தடை, பருப்பு, மிகவிட்டு

அட்டிகம்-சாதிக்காய்

அட்டிகை-உட்கட்டு, ஓர் ஆபரணம், ஓர் வகைக் கழுத்தணி

அட்டிமதுரம்-அதிமதுரம்
அட்டிமை-ஓமம், சீரகம்
அட்டியம்-அதிமதுரம்
அட்டியல்-அட்டிகை
அட்டில்-அடுக்களை
அட்டிவெள்ளை-அதிமதுரம்
அட்டினம்-சீரகம்
அட்டு-அணை, சமைக்கப்பட்டது, செய்தது, பனுட்டு மதிப்பு, வியங்கோள் விகுதி, வினையெச்சம்
அட்டுதல்-வார்த்தல்
அட்டுப்பு-காய்ச்சியவுப்பு
அட்டை-செருப்பினடி, நீரில்வாழுமோர் செந்து, செவ்வட்டை, நீரட்டை, மரவட்டை என மூன்றுவிதம், வினைமுற்று
அட்டோலகம்-ஆடம்பரம், ஒட்டோலகம்
அட்டோலிங்கம்-ஆடம்பரம், ஆரவாரம், மகிழ்ச்சி
அணகதாரம்-சுத்தநிஷாதம்
அணங்கம்-இலட்சணம்
அணங்காட்டு-சன்னதம், வெறியாட்டு
அணங்கிய-பின்னிவளர்ந்த
அணங்கு-அச்சம், அணங்கென்னேவல், அழகு, ஆசை, கொலை, தெய்வப்பெண், தெய்வம், தேவர்க்கர்டுங் கூத்து, நோய், பெண்மகள், பேய்மகள், ரோகம், வருத்தம், வருத்துந் தெய்வம், பெண்மரம்
அணங்குதல்-அஞ்சல், கொல்லுதல், வருந்துதல், விரும்புதல்
அணத்தல்-தலையெடுத்தல்
அணந்த-மேனோக்கி நின்று வருந்தின
அணம்-கீழ்வாய்ப்புறம், மேல்வாய்
அணரி-அணம்
அணல்-கீழ்வாய், மிடறு, கழுத்து, தாடி
அணவல்-கிட்டல், பொருந்தல்
அணவு-அணவென்னேவல், நடு
அணவுதல்-கிட்டல், புணர்ச்சி
அணுப்புதல்-எய்த்தல்
அணி - அடுக்கு, அணியென்னேவல், அலங்காரம், அழகு, ஆபரணம், எல்லை, ஏர்ச்சீர், ஒழுங்கு, ஓரிலக்கணம், நன்மை, நிரை, படைவகுப்பு, பெருமை, மாலை, நுணு
அணிகம்-சிவிகை, சுந்தகாந்தாரம்
அணிகலச்செப்பு-ஆப்ரணடப்பி

அணிகலம்-ஆபரணம், கம்மாளர் கருவி, பணிமுட்டு
அணிகலன்-ஆபரணம்
அணிச்சை-நாகமல்லிகை
அணிஞ்சில் - அழிஞ்சல், கொடிவேலி, சிற்றாமுட்டி, நொச்சி, முள்ளி
அணிதல் - அணிந்துநிற்றல், அலங்கரித்தல், தரித்தல், படைவகுத்தல், பூணல்
அணித்து-சமீபித்தது
அணிநுணு - அன்னவன்னு, ஆத்தா, சீத்தா
அணிநுசை-மண்ணிலா, ஆச்சா
அணிந்தம்-கோபுரவாசலின்மேடை
அணிந்து-அழகுபெற்று, தரித்தென்னும் வினையெச்சம்
அணிந்துரை-பாயிரம்
அணிப்படுத்தல்-அணியப்படுத்துதல், சிங்காரித்தல்
அணிமா-அட்டசித்தியினென்று, அஃது அணுப்போலாதல்
அணிமுலை-பூசனிக்கொடி
அணிமை-சமீபம், நுட்பம்
அணியம்-கப்பலின் முற்பக்கம், படைவகுப்பு
அணியல் - அணிதல், ஆயத்தம், தளபாடம், படவின் முன்பக்கம், மாலை
அணியிலக்கணம் - பஞ்ச விலக்கணத்தொன்று
அணிலன்-அட்டவசுக்களி லொருவன்
அணில்-அணிற்பிள்ளை, வெளில்
அணில்வரியன்-ஓர்சிறப்பசு, ஓர்வகைப் பட்டு, ஓர்வகைப் பலாப்பழம், ஓர்வகை வெள்ளரி
அணில்வாற்றினை-ஓர்வகைத்தினை
அணிவகுத்தல்-படைவகுத்தல்
அணிவகுப்பு-படைவகுப்பு
அணிவடம்-மாதர்கழுத்தணியி னொன்று
அணிவிரல்-மோதிரவிரல்
அணிவேர்-குருவேர்
அணு-இனம், உயிர், சிறுமை, நுண்மை, பரமாணு
அணுகலர்-அயலார், பகைவர்
அணுகல்-கிட்டல்
அணுகன்-சமர்த்தன், விப்பிராஜன் புத்திரன்
அணுகார்-பகைவர்
அணுகுப்பு-அண்ணிதாகநின்று

அணுக்கம்-சந்தனம்
அணுக்கர்-சிநேகர்
அணுக்களைந்து - உயிரணு, நிலவணு, நீரணு, தீயணு, காற்றணு வென்பன
அணுச்சைவம்-சைவம் பதினாறினொன்று
அணுபை-மின்னல்
அணுமை-சமீபம்
அணுரூபம்-மிகச்சிற்றுரு
அணுரூபி-ஆன்மா, கடவுள்
அணுரேணு-சிறுதூளி
அணுவெழுத்து-இனவெழுத்து
அணை - அணையென்னேவல், உதவி, கரைப்பொது, செய்கரை, படுக்கை, புணர்ச்சி, மெத்தை, வரம்பு
அணைகயிறு-ஏணைக்கயிறு, பால் கறக்கக் கட்டுங் கயிறு
அணைசல்-ஒதுங்கல், விலகல்
அணைசொல் - அசைச்சொல், துணைச் சொல்
அணைதல்-அவிதல், சேர்தல், புணர்தல்
அணைதறி-யானை கட்டுங் கயிறு
அணைதுகில்-ஏணையாடை
அணைத்தல் - அடுத்துக் கொள்ளுதல், அவித்தல், சேர்த்தல், தழுவுதல்
அணையாடை-ஏணைத்துகில், சாணைச்சீலை
அனோக்கம் - அனோக்கம், மரப்பொது, மரம், மேனோக்கம்
அண் - அண்ணென்னேவல், தடியில் வெட்டியவரை, மேல், வேட்டை நாயினுருவுகயிறு
அண்டகடாகம்-அண்டகோளவோடு
அண்டகம்-குப்பைமேனி, பீசம்
அண்டகன்-அண்ணகன்
அண்டகை-அப்பவருக்கம்
அண்டகோசம் - அண்டசொரூப சாத்திரம், எல்லை, பழத்தோல், பழம், பீசம்
அண்டகோளகை-கடாகம், கூடம்
அண்டகோளம்-அண்ட உண்டை
அண்டங்காக்கை-ஓர்வகைக் காகம்
அண்டசம் - முட்டையிற் பிறப்பன, அவை அரணை, ஆமை, இப்பி, உடும்பு, ஓணான், தவளை, நண்டு, பல்லி, பறவை, பாம்பு, மீன், முதலை
அண்டச்சுவர்-பித்திகை
அண்டத்தைலம்-முட்டைத்தைலம்
அண்டப்பார்த்தல்-பொருந்தப்பார்த்தல்
அண்டமுகடு-மூதண்டம்
அண்டம்-ஆகாயம், உலகம், தலையோடு, பீசம், முட்டை, விதை
அண்டயோனி-அண்டசம், சூரியன்
அண்டரண்டப்பட்சி-பெரும்பறவை
அண்டரண்டம்-தேவரண்டம்
அண்டரசம்-சுத்தரசம்
அண்டர்-இடையர், பகைவர், வானோர்
அண்டர்நிலை-பொன்னாங்காணி
அண்டர்மகன் குறுவழுதி - புறநானூறு பாடிய புலவர்களுள் ஒருவர்
அண்டலர்-பகைவர்
அண்டல்-அண்டுதல், அழுந்தல், கிட்டுதல், சேர்தல்
அண்டவாதம்-அந்திரவாயு, வளி, விரைவாதம்
அண்டவாணர்-ஆகாயவாசிகள், தேவர்
அண்டவாயு-அண்டவாதம், ஓர்நோய்
அண்டா-பெருஞ்சட்டி, பெரும்பாத்திரம்
அண்டார்-பகைவர்
அண்டிகம்-செந்நாய், நா
அண்டிரன்-மனுஷன்
அண்டிரல் - மாடு முதலியவற்றின் கண்ணிற்பற்றும் பூச்சி
அண்டுகை-அண்டுதல்
அண்டுதல்-நெருங்கல்
அண்டை-அயல், அருகிடம், ஒட்டு, பீ, லடைக்குந் துண்டு, முட்டு, வரம்பு
அண்டைத்தோல்-முட்டையோடு
அண்டைபோடல்-ஒட்டுப்போடுதல்
அண்டையர்-அயலார்
அண்ணகன்-கோசா, பீசம்வாங்கப்பட்டவன்
அண்ணந்தாள்-அண்ணாந்தாள்
அண்ணம்-உண்ணா, கீழ்வாய்ப்புறம், மேல்வாய்
அண்ணல்-அரசன், அருகன், சார்தல், சிவன், தமையன், தலைமை, புத்தன், பெருமை, பெருமையிற் சிறந்தோன், முல்லைநிலத் தலைவன்
அண்ணன்-முன்பிறந்தான்
அண்ணா-உண்ணா, உண்ணாக்கு
அண்ணாக்கயிறு-அரைஞாண்
அண்ணாக்கு-உண்ணாக்கு
அண்ணாத்தல்-அங்காத்தல், மேனோக்கல்
அண்ணாந்தாள்-தலைநிமிர்ந்திருக்கப் பூட்டுங்கயிறு
அண்ணாமலை-அருணாசலம்

அண்ணாவி - உவாத்தி, புலவன், மூத்தோன்
அண்ணி-தமையன் மனைவி
அண்ணிசு-அணுமை
அண்ணிது-அண்ணிசு
அண்ணுதல்-சார்தல்
அண்ணொரிஞ்சான் பூண்டு - அன்றெரிந்தான்பூண்டு
அண்முதல்-கிட்டுதல்
அண்மை-அணுமை
அண்மைச்சுட்டு - சமீபத்தி லிருக்கும் பொருளைச் சுட்டிக்காட்டல்
அண்மைவிளி - சமீபத்தி லிருப்பவரை யழைத்தல்
அதகடி-அதட்டு
அதகணம்-நாசகணம்
அதகம்-சுக்கு, பெருமருந்து, மருந்து,
அதக்காழ்-ஆண்மரம்
அதக்குதல் - இளக்குதல், கசக்குதல், குதப்புதல்
அதங்கம்-ஈயம்
அதங்கோட்டாசான்-அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருள் ஒருவர்
அதசம்-ஆன்மா, காற்று, மரவுரி
அதசு-கேள்வி, நாசம்
அதட்டம்-செங்குத்து
அதட்டம் - அரவுயிர்ப்பு, அரவினச்சுப் பல்லு
அதட்டல்-உரப்புதல், உறுக்குதல்
அதப்பியம்-அசப்பியம்
அதமசரீரம்-கற்பகதரு
அதமதானம்-முத்தானத்தொன்று
அதமபிரதகன்-காக்காரன்
அதமம்-கடைத்தரம், நீதித்தப்பு
அதமவிமிசதி-அதமவருட்டிருபஃது
அதமன்-கடையானவன்
அதமாங்கம்-கால்
அதம்-அத்தி, சங்காரம், தாழ்வு, தொலை, பள்ளம், பின்பு
அதம்பம்-கற்பறிபாஷாணம்
அதம்பல்-அதட்டல்
அதரபானம் } இதழூறல்
அதரமதம் }
அதரம்-உதடு, கீழுதடு, நிதம்பம்
அதராமிர்தம்-அதரபானநீர்
அதராவலோகம்-இதழதுக்கல்
அதரிகொள்ளுதல்-கடாவிடுதல்

அதரிசனம் - காணப்படாமை, குருடு; மறைதல்
அதரிசனன் } கடவுள், குருடன்
அதரிசி }
அதரித்திரன் - கன்னன், தரித்திரமில்லான்
அதருமம்-நீதிக்கேடு, பாவமான செய்கை
அதருமாத்திகாயம்-யாதனுசரீரம்
அதர்-நீளக்கிடங்கு, நுண்மணல், புழுதி, வழி, விலங்குசெல்வழி
அதர்கொளல்-வழிப்பறித்தல்
அதர்கோள்-வழிப்பறி
அதர்க்கம்-குதர்க்கம்
அதர்பறித்தல்-குழிவெட்டல்
அதர்மாசாரி-துராசாரி
அதர்மாத்திகாயம் - காரண காரியத்தொன்று
அதர்வச்சிரம் - உபநிடதமுப்பத்திரண்டிலொன்று
அதர்வணம்-நான்காம்வேதம்
அதர்வம்-அதர்வச்சிரம்
அதலகுதலம்-கலகம்
அதலமூலி-ஆடுதின்னாப்பாலை
அதலம்-கீழேழுலகிலொன்று
அதவம்-அத்திமரம், பள்ளம், பின்பு
அதவா-அல்லாமல்
அதவாபடீசம்-அல்லாதபட்சம்
அதவிடம்-அதிவிடயம்
அதவு-அத்தி, நெய், பள்ளம்
அதழ்-பூவிதழ்
அதளி-அமளி
அதளை - அடைநிலப்பீர்க்கு, புளியதளை, வயல்வெளியில்கட்டுங் காவற்குடிசை
அதள்-களகம்பளம், தோல், பட்டை
அதள்புனையரணம்-தோற்கைத்தளமென்னுங் கருவி
அதறுதல்-உதிர்த்தல், பதறுதல்
அதனப்பிரசங்கி-அகங்காரி
அதனம்-மிகுதி
அதனு-மிகுதி
அதன்மம்-நீதிக்கேடு
அதாசலம்-காட்டுமல்லிகை
அதாதிரு-உலோபி
அதாலத்து-நியாயத்தீர்ப்புஸ்தானம்
அதாவரிசி-வெட்பாலையரிசி
அதி-அதிதி, மிகுதிப்பொருளைக் காட்டுமசைச்சொல்

அதிகசிதம்-பெருநகை
அதிகடம்-யானை
அதிகண்டம் - நித்தியயோகத்தொன்று, அது சந்திரனைப்பற்றியது, மரணாவஸ்தை
அதிகதம்-சென்றது, வாயு
அதிகதை-பயனில்பேச்சு
அதிகநாரி-கொடிவேலி
அதிகந்தம்-ஓர்வாசனைப்புல், கெந்தகம், சண்பகப்பூ
அதிகப்ரசங்கம் - அதிகப்படப் பேசுதல், தன் மேம்பாட்டுரை
அதிகமாதம் - ஆறு வருஷத்துக் கொருதரம், ஒருவருஷத்தில், அதிகமாகும் மாதம்
அதிகமான்-ஔவைசகோதரருள்ஒருவன்
அதிகம்-அடையாளம், இலாபம், உதாரணங்களைப் பலவாருகப் பிரயோகித்தல், குருக்கத்தி, தோல்வித்தானமிருபத்திரண்டினொன்று, படைபொலிவு, மிகுதி
அதிகரணம்-இடம், உரித்து, ஏழனுருபு, கேள்வி, மேன்மை
அதிகரித்தல் - அதிகப்படுதல், விசேடித்தல்
அதிகரிப்பு-அதிகரித்தல்
அதிகல்-காட்டுமல்லிகை
அதிகற்ருதி-கொடிவேலி
அதிகன்-ஆதிக்கன், ஓர்வள்ளல், இவன் தனக்குக் கிடைத்த அமிழ்து விளையும் கருநெல்லிக் கனியைத் தானுண்டு உடம்புபெருதே ஔவைக்குக் கொடுத்தோன், சிவன்
அதிகாசம்-பெருநகை
அதிகாந்தம்-ஓர்கல், செவ்வானம், மிகுவழகு
அதிகாயன்-இராவணன் மக்களி லொருவன்
அதிகாரத்தலைவன்-அதிகாரி
அதிகாரப்புறனடை - அதிகாரத்துளெஞ்சியதற்கோர் விதியாய் நிற்பது
அதிகாரம்-அதிகரித்தல், உத்தியோகம், உரித்து, ஒழுங்கு, சிலாக்கியம், தத்துவம், நூலுரை பதினன்கி னொன்று, நூற்கூறுபாடு, பண்பு
அதிகாரவுரை - நூலுரை பதினன்கினொன்று

அதிகாரி-அதிபதி, நூல்கேட்டற் குரியோன், நூல் செய்வித்தோன், பாட்டுடைத்தலைவன், கொடிவேலி
அதிகாலம்-அதிகாலை
அதிகிரமம் - அசட்டை, அதிகப்படல், எதிர், மீறுதல்
அதிகிருச்சிரம்-ஓர்விரதம், அஃது ஆறுநாள் ஒவ்வோர் பிடி யன்னமுண்டு மேன் மூன்றுநா ளுபவாசித்திருப்பது
அதிகுணன்-கடவுள், நற்குணன்
அதிகும்பை - பொற்றலைக் கையாந்தகரை, பொற்ருது
அதிகோர்வம்-அதிகோலம், அழிஞ்சில்
அதிக்கண்ணி-வெறுகு
அதிக்கிரமம்-அக்கிரமம்
அதிக்கிராந்தபிந்து-ஈசுரன் நவபேதத்திலொன்ருகிய ஆண்தத்துவம், ஓர் ரூபமான பெரியோர்
அதிக்குதி - ஒவ்வாதநடை, கொடுமையானநடை
அதிங்கம்-அதிமதுரம்
அதிசங்கலிதம்-சங்கலிதசங்கலிதம்
அதிசஞ்சயம்-திரவியக்குவியல்
அதிசத்திரகம், அதிசத்திரம் } காளான்
அதிசந்தானம்-பொய்
அதிசயச்சொல்-வியப்புமொழி
அதிசயம்-அதிரேகம், அற்புதம், ஓரலங்காரம், நூதனம், புதுமை, மாயை, யாக்கைக்குரிய பதினெண் குற்றத்தொன்று
அதிசயவிரக்கச்சொல் - இரக்கத்தோடு கூடிய வியப்புமொழி
அதிசயன்-அருகன்
அதிசயோத்தி-மிகக்கூறல்
அதிசரம்-நெட்டுயிர்ப்பு
அதிசரித்தல் - தூரமாய்ப்போதல், மிகுகதியாய் நடத்தல்
அதிசருச்சனம் - கொடுத்தல், கொடை, கொலை
அதிசனசி-கொடிவேலி
அதிசாமியை-வெண்குன்றிச்செடி
அதிசாரணம்-மாவிலங்கு
அதிசாரத்திரவியங்கள் - அதிவிடயம், ஆவிரை, இருபூலா, இலவம்பிசின், ஓமம், கஞ்சா, கருங்காலிப்பிசின், கருவேல், காட்டாத்திப்பூ, கிராம்பு, தீழ்க்

காய்நெல்லி, குங்கிலியம், சாதிக்காய், சிறுகாஞ்சொறி, சுக்கு, திப்பிலி, தென்னம்பாளை, தேன், புளியங்கொட்டைத்தோல், புளியம்வேர், மாதுளம் பிஞ்சு, மாவிரை, முத்தக்காசு, வட்டத்திருப்பி, வறட்சுண்டி, வாழை, வெட்பாலையரிசி, வெள்ளிலோத்திரம்

அதிசாரம்-ஓர் பேதிநோய், சுரத்தோடு கூடிய ஓர்வகைப்பேதி, அது சிலேத்மம், திரிதோஷம், பித்தம், வாதம் என நான்கு, கிரகநடை

அதிசாரவக்கிரம்-கிரகவக்கிரத்தொன்று

அதிசித்திரம் - மார்க்கசடப் பிரமாணத்தொன்று, அது கால் மாத்திரையோர்களையாகக் கொண்டது

அதிசீக்கிரம்-மிகுசுறுக்கு

அதிசூரன்-சிங்கமுகாசுரன் புத்திரன்

அதிசௌரபம்-தேமா

அதிச்சத்திரகம் } காளான்
அதிச்சத்திரம் }

அதிட்சேபம்-அனுப்புதல், நிந்தைப்படுத்தல்

அதிட்டச்செல்வி-இந்திரபாஷாணம்

அதிட்டம் - நல்லனுபோகம், நல்வினைப்பயன், மிளகு

அதிட்டானசைதன்னியம்-பிரமம்

அதிட்டானம்-இடம்,காரியத்திற்குக்காரணம், சில்லு, நிலை, பட்டினம்

அதிட்டித்தல்-நிலைப்படுத்தல், விதித்தல்

அதிதலசிலேட்டுமம்-சிலேஷ்மம்

அதிதனு-பொன்

அதிதாதிரு-ஈகையாளன்

அதிதாரம்-இலந்தை

அதிதானம்-கொடை

அதிதி-காசிபப்பிரம்மாவின் மனைவிகளிலொருத்தி, சத்தபிதிர்களிலொருவர், சிராத்தத்திற் கொவ்வாத திதி, தேவரையீன்றாள், பரதேசி, புதியவன், பூமி, விருந்தன்

அதிதிகிரியை-விருந்தோம்பல்

அதிதிசேவை-விருந்துபசாரம்

அதிதிநாள்-புநர்பூசநாள்

அதிதிபூசை-பரதேசிக்கன்னமிடல்

அதிதிப்பம்-பசியின்மை

அதிதூதர் - அதிகப்பிரதான விசேடங்களை யறிவிக்க உலகத்துக் கனுப்பப்படுவோர்

அதிதேவதை-அதிகாரதேவதை

அதிதேவன்-கடவுள்

அதிநரம்-மதுரம்

அதிநாரம்-இலந்தை

அதிபசமி-கொன்றை

அதிபதி-இராசா, சண்பகம், தலைவன்

அதிபதிச்சங்கம் - அதிபறிச்சம், வாலுழுவை

அதிபதுங்கி-கொடிவேலி

அதிபரன்-சத்துருவைவென்றவன்

அதிபலம்-நேர்வாளம், மிகுபலன்

அதிபலை-பேராமுட்டி

அதிபுறிச்சம்-வாலுழுவையரிசி

அதிபன்-இராசன், எசமான், எப்பொருட்குமிறைவன்

அதிபாதகம்-மிகுபாதகம்

அதிபாதம்-எதிரிடை, மீறுதல்

அதிபாரகம்-கோவேறுகழுதை

அதிபாரகன்-மிகுநிபுணன்

அதிபாரம்-மிகுபாரம்

அதிபானம்-மதுபானம்

அதிபூதம்-பிரகிருதிமாயை

அதிமதுரம்-ஓர்சரக்கு, குன்றிவேர், மிகுமதுரம், வெண்குன்றி

அதிமலம்-மாவிலங்கு

அதிமாத்திரம்-உயர்வு, மிகுதி

அதிமாயம்-மாயையின்மை

அதிமானுடன்-உத்தமபுருடன், சிரஞ்சீவி

அதிமிதி-அதிக்குதி

அதிமித்திரன்-கணவன், மிகுநேசன்

அதிமிருத்தியாதி மாத்திரை - கோரோசனை மாத்திரை

அதிமுத்தம்-குருக்கத்தி

அதிமோகம்-அனேகம், ஒருதலைக்காமம்

அதியட்சன்-கண்காணி

அதியம்-அதிகம், ஓர்மருந்து

அதியாமம்-அறுகம்புல், முயற்புல்

அதிரசம்-இரசம், உப்பு, ஓர்பண்ணிகாரம், ஓர்பானம்

அதிரதம் - ஓர்பண்ணிகாரம், ஓர்பானம், நால்வகைத்தேரி னொன்று

அதிரதர்-முழுத்தேரரசர்

அதிரதன்-கன்னனை வளர்த்தவன்

அதிரதி-அதிரதன்

அதிரல்-அதிர்தல், புனலிப்பூ, மோசிமல்லிகை, விரிதூறு

அதிராகம்-கந்தகம்

அதிராத்திரம் - யாக மிருபத்தொன்றி லொன்று
அதிராம்பை-பொற்றலைத்தகரை
அதிராயம்-அதிசயம்
அதிரிசம்-கடவுள்காணப்படாத தன்மை, குருடு
அதிரிசயம் - கலைஞான மறுபத்துநான்கி லொன்று
அதிரிசனம்-அதரிசனம்
அதிரிசன்-கடவுள், குருடன்
அதிரிசியம்-அதிரிசம்
அதிருசியந்தி-அருந்ததி
அதிருஷ்டம்-பார்வைக்கெட்டாதது
அதிருத்தி-திருத்தியின்மை
அதிரேகம் - அதிசயம், மிகுதிமேற்பட்டது
அதிரோகணி-ஏணி
அதிரோகம்-ஓர்காசம்
அதிரோகிதம்-அடுத்திருத்தல்
அதிர்-அதிரென்னேவல், ஒலி, நடுக்கம், பயம்
அதிர்ச்சி - அதிகப்படுதல், ஆரவாரம், குமுறல், பயம்
அதிர்தல்-குமுறல், நடுங்கல்
அதிர்த்தல்-அதட்டல், குமுறல், சொல்லுதல்
அதிர்ப்பு-அச்சம், அதிரல், ஆரவாரம், நடுக்கம்
அதிர்வு-யாழ்நரம்பைச் சிதறவுந்தல்
அதிர்வெடி / அதிர்வேட்டு } ஓர்வெடி
அதிலஓடாகம்-அடிலஓடாகம், ஓர்பூண்டு
அதிலோகம்-உலகம், ரசகற்பூரம்
அதிவ்சனம்-பேர்
அதிவாசம் - அயல், இடம், உபவாசத்திற்கு முதனாள், கிருத்தியாரம் பச்சடங்கிலொன்று, மிகுமணம், வீடு
அதிவாசனம்-வாசனுபிஷேகம்
அதிவாதம்-பெருங்காற்று
அதிவாலகன்-குழந்தை
அதிவிடம்-அதிவிடயம்
அதிவிடயம்-அத்தம், அவிருகம், ஓர் மருந்து
அதிவியதை-மிகுவேதனை
அதிவியாத்தி - அருத்தாபத்தி, மிகக் கூறல், மிகவியாபித்தல்
அதிவிருஷ்டி-கனமழை
அதிவீரன்-யாளிமுகன் மகன்

அதிவெள்ளைச்சிந்தூரம்-சவ்வீரம், புறங்கிப் பாஷாணம்
அதிவேகம்-மிகுகதி
அதிவேதனம் - மனைவியைவிட வேறொருத்தியை விவாகம் பண்ணுதல், மிகக் கூலி
அதீசன்-எஜமான்
அதீசாரம்-அதிசாரம்
அதீச்சுரபதவி - நவவிலாச சபைக்குரிய வதிகாரம்
அதீச்சுரன் / அதீச்சுவரன் } அரசன், கடவுள்
அதீட்சணதை-மழுங்கல்
அதீதப்பிரமம்-கடவுள்
அதீதம் - எட்டாதது, கடந்தது, குரல் முன்னுந் தாளம் பின்னுமாய் வருவது, பொன், மேற்பட்டது
அதீதர்-வானோர், முனிவர், மேலோர்
அதீதவேதன்-வேதநிபுணன்
அதீதாவஸ்தை-துரியாதீதம்
அதீதியம்-ஆசையின்மை
அதீந்திரியம்-காணப்படாதது, புலனுக்கெட்டாதது
அதீரம்-கரையின்மை, தைரியமின்மை
அதீரை-அமையாதவள், மின்னல்
அதீனத்துவம்-இட்டம்
அதீனன்-உரித்து
அதீனம்-சகாதேவன் புத்திரன்
அது-அஃது, ஆறுவதனொருமையுருபு
அதுக்கம்-அடிப்பு, ஒதுக்கம், குழிவு
அதுக்கல்-அடித்தல், அடைசுதல்
அதுங்கல்-ஒதுங்கல், குழிதல்
அதுலம்-உவமையின்மை, ஓரெண்
அதுலன்-ஒப்பிலி, கடவுள்
அதுலிதம்-அசைவின்மை
அதுல்லியம்-ஒப்பின்மை
அதெந்து-பயப்படாதே, யதெந்து
அதைத்தல்-தாக்கிமீளல், வீங்கல்
அதைப்பு-தாக்கியெழுதல், வீக்கம்
அதைரியம்-தைரியமின்மை
அதொன்மையம்-நூதனம்
அதோ-கீழ், படர்க்கைச்சுட்டு
அதோகதி-இறந்துதல், நரகம், பள்ளம், பாதலம்
அதோங்கம்-குதம், யோனி
அதோசாதி-கீழ்ச்சாதி
அதோயாகம்-கீழ்ப்பக்கம்

அதோபுவனம்-கீழுலகம்
அதோமாயை-ஓர் மாயை
அதோமுகம் - ஆற்றுநீர்க்கழிமுகம், கீழ் நோக்கியமுகம்
அதோமுகி-கவிழ்தும்பை
அதோலம்பம் - செங்குத்து, தூங்குதல், நிறுத்திட்டவரி
அதோலோகம்-கீழுலகம்
அதோவதனம்-அதோமுகம்
அதோர்வாயு-அபானவாயு
அத்-ஒன்று, பாதி
அத்தகடகம்-கைவளை
அத்தகண்டாதனம்-ஒருகால் மேனீட்டி ஒருகைகொண்டு நீட்டின காலைக்கட்டி மற்றைக் கையை நிலத்தூன்றி யிருப்பது
அத்தகம்-ஆமணக்கு, கருஞ்சீரகம்
அத்தகோரம்-நெல்லி
அத்தசகாயம்-பொருளுதவி
அத்தசதம்-ஐம்பது, நூறுண்டு
அத்தசந்திரன்-வாலசந்திரன்
அத்தசாமம்-நடுச்சாமம்
அத்தசித்திரம்-மார்க்கசடப் பிரமாணத் தொன்று, அஃது அரைமாத்திரை யோர்களையாகக்கொண்டது
அத்தடி-அடிக்கெடுதல், அந்தரிப்பு
அத்தநாசம்-பொருளழிவு
அத்தநாரீசுரன்-சிவன், பாதி ஸ்த்ரீயாக விருப்பவன்
அத்தபாகம்-பாதி, பொருட்பாகம்
அத்தப்பிரகரம் - நாலேகாலுழிகைகொண்டது
அத்தப்பிரகரன்-கரந்துறைக் கோள்களி லொன்று
அத்தமண்டபம்-கருப்பக்கிரகமண்டபம், கோவிலினடுமண்டபம்
அஸ்தமம் } அஸ்தமிக்கை, அத்தகிரி
அத்தமம் }
அஸ்தமனம் } அத்தமன்காலம், அத்தமித்தல்
அத்தமனம் }
அத்மதசம்-வெண்காரம்
அத்மானம்-ஆமணக்கு
அத்தமானியம்-கண்டதிற்பாதியிறைதருதல்
அஸ்தமிக்கை-படுகை
அஸ்தமித்தல் - அற்றுப்போதல், உட்குதல், படுதல், மறைதல்
அத்தமிப்பு-படுகை
அத்தமேற்காலாதனம்-இருகாலுமேலுற மடக்கி யக்காலிரண்டையுங் கையாற் பற்றிக்கிடப்பது
அஸ்தம் } அஸ்தமிக்கை, அத்தகிரி, ஓர் நட்சத்திரம், கை
அத்தம் }
அத்தம்-அதிவிடயம், அருநெறி, ஆண்டு, ஓர்நட்சத்திரம், ஓர்நாள், ஓர்மலை,கண்ணடி, காடு, குக்கில், கை, சொற்பொருள், பாதி, பொன், முகில், வழி
அத்தரசிதம்-மடல்துத்தம்
அத்தர்-முனிவர், தேவர், வனவாசர்,வாசனைப் பண்டம்
அத்தலைப்பொருந்தி-ஓர் பூடு
அத்தவாரணம்-போதுமெனல்
அத்தவாளம்-உல்லாசம்,காடு, போர்வை, வடகம்
அத்தவேடணை-பொருளிச்சை
அத்தனை-அவ்வளவு
அத்தன்-உதயலக்கினத்திற்குப் பதினோராமிடம், ஒன்பதாம் இடத்திற்கும் பொதுப்பெயர், அருகன், கடவுள், கடுக்காய், குரு, சிவன், பிதா, மூத்தோன், வெள்ளீயம்
அத்தன்மை-அம்மாதிரி
அத்தாட்சி-ஒப்பனை, திட்டாந்தம்
அத்தாணி-அரசிருக்கை
அத்தாதிக்கம்-பாதிக்கதிகப்பட்டது
அத்தாதுரம்-பொருளாசை
அத்தாபித்தல்-உரப்பிநெருக்கல்
அத்தாயம்-அந்தரம், கடைச்சற்சக்கரத்தின் மிதிதடி
அத்தாரம்-மரமஞ்சள்
அத்தார்ச்சனை-திரவியசம்பாத்தியம்
அத்தார்த்தம் - அரைவருடம், பொருணிமித்தம்
அத்தானம்-ஆஸ்தானம்
அத்தான்-அக்காள் கணவன், மைத்துனன்
அத்தி-அக்காள், அதவு,அத்தன்மையள், உண்மை, எலும்பு, என்பு, ஓர்மரம், கடல், கண்ணினிற்கு மோர்நரம்பு, கருவிளை, கொலை, திப்பிலி, பாதி, செய்யென்னேவல், பிடியன்யானை, மலை, யானை, வெருகமரம், கல்லத்தி, காட்டத்தி, கொடியத்தி பேயத்தி, மலையத்தி, விழலத்தி என ஆறுவிதம்
அத்திகை - அக்காள், அத்தன்மையளதுகை

அத்திகோபம்-ஓர்நயனரோகம்
அத்திகோலம்-அழிஞ்சில்
அத்திக்கன்னி - கரிசிலாங்கண்ணி, வெருகமரம்
அத்திசம்-நீர்முள்ளி
அத்திசயனன் } பாற் கடலிற் றுயின்
அத்திசயன் } றோன், விட்டுணு
அத்திசுரம் - எலும்பைப்பற்றின சுரம், ஓர்நோய்
அத்திதந்தம்-முள்ளங்கி
அத்தித்தல்-பாதிசெய்தல்
அத்தித்திப்பிலி-யானைத்திப்பிலி
அத்திநந்தனி-பார்வதி
அத்திநவநீதகம்-சந்திரன்
அத்திபஞ்சரம் - என்புக்கூடு, முழுவெ[லும்பு
அஸ்திபாரம் } அடிப்படை
அத்திபாரம் }
அத்திபுரசாதனி-அவுரி
அத்திபேதி-ஓர்மருந்து
அத்திமண்கே-முத்துச்சிப்பி
அத்திமல்லிகை-பத்திராக்ஷி
அத்தியக்கினி - சீதனம், வடவாமுகாக்கினி
அத்தியக்கினிட்டோமம் - யாகமிருபத்தொன்றி னொன்று
அத்தியசனம்-ஏகோத்திட்டவூண்
அத்தியட்சரம்-பிரணவம்
அத்தியட்சன்-அதிகாரி
அத்தியந்தகோபம்-மிகுகோபம்
அத்தியந்தம் - ஒரெண், மட்டற்றது, மிகுதி
அத்தியந்தபாவம்-முழுதுமின்மை
அத்தியயநம்-வேதமோதல்
அத்தியயம்-அத்தியாயம், அழிவு, ஆக்கினை, இக்கட்டு, ஒரு பொருளின்பேதத்தை ஐயத்துடனறிதல், குற்றம், நட்டம், பொல்லாங்கு, மரணம், மீறுதல்
அத்தியயனம்-படித்தல், வேதமோதல்
அத்தியவசயித்தல்-ஒரு பொருளின்கணியல்பாய் நிகழுந்தன்மையை யொழித்துத் தானெடுத்த பொருண்மே லேற்றிச் சொல்லல், தற்குறிப்புச்செய்தல்
அத்தியவசாயம் } தானெடுத்துக்கொ
அத்தியவசாயிதம் } ண்டது, முயற்சி
அத்தியாகரணம் - தொக்கு நின்றதை நிரப்புதல், வாதுபேசுகை, வேதமோதல்

அத்தியாகாரம் - அவமானம், குற்றம், மிகுபோசனம், வருவித்தசொல்
அத்தியாசநம்-ஏகோதிட்டம்
அத்தியாசம் - சாட்டுதல், வித்தியாசம், வீற்றிருத்தல்
அத்தியாசனம் - அபரக்கிரியையினோர் பகுதி, ஏகோதிட்டம்
அத்தியாசாரம்-முறைவழு
அத்தியாதாநம் - கிரமத்தினின்று மாறுபடுதல்
அத்தியாத்துமா- ஆன்மாகடவுள்
அத்தியாத்துமிகநூல் - அத்தியான்மிகநூல்
அத்தியாத்துமிகம் - கடவுட் கடுத்தது, தன்னால் வருந் துன்பம்
அத்தியாபகன்-வேத மோதுவிப்போன், உபாத்தியாயன்
அத்தியாபநம் } ஓதுவித்தல், வேத
அத்தியாபனம் } மோதுவித்தல்
அத்தியாயநம்-வேதமோதல்
அத்தியாயம்-இலக்கியச் செய்யுட் பகுதி, காண்டம், சருக்கம், படலம், பரிச்சேதம், வேதநூலை விரித்த விலக்கியத்தின் கூறுபாடு, வேதம்
அத்தியாரோகணம் } ஏறுதல்
அத்தியாரோகம் }
அத்தியாரோபம் } ஒன்றை யொ
அத்தியாரோபணம் } ன்றிலேற்றல்
அத்தியாவாகனிகம்-சீதனம்
அத்தியான்மிகம்-அத்தியாத்துமிகம்
அத்தியான்மிகநூல்-பதிநூல், அது சாங்கியம் பதஞ்சலியம் வேதாந்தம் எனப்படும்
அத்தியான்மீகநூல்-மூவகைச் சாத்திரம்
அத்தியூடன்-சிவன்
அத்திரசந்தானம்-அம்பின் தொடர்ச்சி
அத்திரசத்திரம்-அம்பும் வாளும்
அத்திரசாஸ்திரம்-வில்வித்தை
அத்திரதர்-காற்றேரரசர்
அத்திரதேவர்-ஆயுததேவர்
அத்திரபரீட்சை-கலைஞான மறுபத்து நான்கினொன்று, வில்வித்தை கற்கை
அத்திரம்-குறிஞ்சில், இஞ்சி, அம்பு, இலந்தை, கடுக்காய்ப்பூ, கழுதை, குதிரை, கைவிடுபடை, நிலையின்மை, மலை, மூன் விடுமம்பு
அத்திரா-அரசு

அத்திராசம்-பயமின்மை
அத்திராதரம் } அம்புக்கூடு, அம்புறை
அத்திராதாரம் } தூணி
அத்திரி-உலைத்துருத்தி, ஒட்டகம், ஓ ரிருடி, அவர் அத்திரிமாமுனி, கணை, கழுதை, குதிரை, சூரியன், தருமநூல் பதினெட்டிடுனென்று, மலை, விண்
அத்திரிகிலை-பூமி
அத்திரிசாதன்-சந்திரன், முதன்மூன்று வருணத்தான்
அத்திரிசாரம்-இரும்பு
அத்திரிசிருங்கம்-சிகரம்
அத்திரீசன்-இமையம், சிவன்
அத்திரு-அரசமரம்
அத்திரோகம்-மெத்தெனவு
அத்திலை-செருப்படை
அத்திவாரம்-அடி, அடியுரம்
அஸ்தினபுரம் } அத்தினபுரம், அஸ்
அத்தினபுரம் } தனபுரி, இதுவங்காள வடமேற்கு மாகாணங்களில் மீரட் என்னும் ஜில்லாவில் மகாபாரதத்திற் சிறந்த சந்திரவமிசத் தரசர்களாகிய பாண்டவர்களின் இராஜதானிப் பட்டினம்
அத்தினி-நால்வகைப் பெண்களிலொரு த்தி, பெண்யானை
அஸ்து-அப்படியாக
அத்து - அசைச்சொல், அரைநாண், அரைப்பட்டிகை, இசைப்பு, சாரியை, சிவப்பு, செவ்வை, தைப்பு
அத்து } [தெலுங்கிலுந் துலுக்கிலும்]
ஹத்து } எல்லை
அத்துகமானி-அரசு
அத்துகம்-ஆமணக்கு
அத்துச்சம்-கிரகத்திற்கு நல்லுச்சம், சரியுச்சம்
அத்துணை-அவ்வளவு
அத்துதல்-இசைத்தல், பொருத்தல்
அத்துமம்-அரத்தை
அத்துமானி-அரசு
அத்துருக்கம்-அகழ்சூழ்ந்த கோட்டை
அத்துலாக்கி-கருஞ்சீரகம்
அத்துவகமனம்-பிரயாணம் பண்ணல்
அத்துவசோதனை-பிரமசோதனை செய்தல்
அத்துவம் - இரண்டொன்று யிருத்தல், ஒன்றிப்பு, சிவப்பு, வழி
அத்துவர்-பிரமஞானிகள்
அத்துவர்க்கயம்-கருஞ்சீரகம்
அத்துவர்க்காயம்-கருஞ்சீரகம், சீரகம்
அத்துவா-இரண்டொன்றாயிருப்பது
அத்துவாக்காயம்-கருஞ்சீரகம்
அத்துவாசைவம்-ஓர்சைவம்
அத்துவாந்தம்-காலைமாலை வெளிச்சம்
அத்துவாமூர்த்தி-பிரபஞ்சத்திற் கலந்து நின்றுசேட்டிப்போன்
அத்துவானம் - கட்டம், செவ்வானம், பாழ்ங்காடு
அத்துவிதம்-அத்துவைதம், ஒன்றிப்பு
அத்துவிதியம்-ஒன்றிப்பு
அத்துவிதியன்-ஒன்றானவன்
அத்துவை - கோழையினது மூளையின துங்கலப்பு, தெரு, நேரம்
அத்துவைதம்-பரமாத்துமாவும் சீவாத்துமாவு மொன்றென்கை
அத்தூரம்-மரமஞ்சள்
அத்தேரி-சோனைப்புல்
அத்தை-அக்காள், குரு, தலைவி, மாதா, மாமி, முன்னிலை யசைச்சொல்
அத்தோ - அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல்
அத்தோதயம் - அருத்தோதயம், ஓர் விசேடநாள், இது அறுபது வருஷத்துக் கொருதரம் தைமாசத்திலோர் ஞாயிற்றுக்கிழமையில் சூரியன் மகரத்திலும் சந்திரன் விதிபாதயோகம் கூடின திருவோண நட்சத்திரத்திலுமிருந்து ஒன்றாக உதயமாதல், இந் நாளில் ஸ்நானம் தருமம் முதலியன செய்தால் விசேட மென்று எண்ணம்
அநகம்-பாவமின்மை, மாசின்மை
அநகன்-அருகன், கடவுள், சிவன்
அநங்கம்-இருவாட்சி, உடலின்மை, மல்லிகை
அநங்கன் - உடலிலான், கடவுள், மன்மதன்
அநந்தசயநன்-சேடசயனன், விட்டுணு
அநந்தஞானி-கடவுள்
அநந்தம்-அளவின்மை, ஆகாயம், ஓரெண், கோளகபாஷாணம், பொன்
அநந்தரம்-மேல்
அநந்தலோசநன்-கடவுள், புத்தன்
அநந்தன் - அருகன், கடவுள், சிவன், சேடன், சோரபாஷாணம், திருமால், பலபத்திரன்
அநந்தாழ்வான்-ஆதிசேடன்

அநந்தை-பார்வதி, பூமி
அநபிஹிதகருத்தன் - எழுவாய், வினை முதல்
அநயம்-அதிட்டவீனம், தீங்கு, வருத்தம்
அநரவன்-பஞ்சபட்சி, பாஷாணம், வெந் தோன்றி
அநகருகம்-தகுதியின்மை
அநர்த்தம்-பயனிலாச்சொல்
அநலர்-தேவயோனிகள்
அநலன்-அக்கினிதேவன்
அநலை-மாலியவான் மகள்
அநவரதம்-எப்போழ்தும்
அநாகுலன் - இடைச்சங்கத்தார் காலத் திருந்த தெய்வப்பாண்டியன்
அநாதரட்சகர்-கடவுள்
அநாதரம்-மதியாமை
அநாதன்-ஆதரவில்லாதவன்
அநாதி-கடவுள், சிவன், புராதனம்
அநாதிகரம்பு
அநாதிதரிசு
அநாதிபஞ்சர்
அநாதிபீடு } நெடுநாளாகப் பாழாய்க் கிடந்த நிலம்
அநாமிகை-ஆழிவிரல், பெயரில்லது
அநாயகம்-அரசாட்சியின்மை, முதன்மை யின்மை
அநாயு-கசியபன் மனைவி
அநாரதம்-எப்போழ்தும்
அநாவிருஷ்டி
அநாவிருட்டி } மழைக்குறைவு
அநாவிலன்-சுக்கிரன்
அநித்தம்-அநித்தியம்
அநிகம்-சங்கம், மூன்றுகொண்டபடை
அநிக்கிரகம்
அநிக்கிரகித்தல் } கட்டுப்பாடின்மை, காத்தல்
அநிசம்-நித்தியம்
அநிட்டை
அநிஷ்டை } உறுதியின்மை
அநிதம்-அநித்தியம்
அநிதானம்-அனுதாரம்
அநித்தம்-அநித்தியம்
அநித்தியகாலம்-முடிவுகாலம்
அநித்தியசமம் - உதாரணத்தால் ஞாயம் பேசல்
அநித்தியம்-நிலையின்மை, பொய்
அநிமாலின்ம்-சாவு
அநியதம்-அழிவுள்ளது, விலக்கியது
அநியமச்சிலேடை - சிலேடையணியில் ஒன்று

அநியமம்-சந்தேகம், துன்னடை, விலக் கியது
அநியமவுவமை - நியமித்த வுவமையை விலக்கிப் பிறிதுமொரு பொருளைக் கூட்டி உவமிப்பது [உ-ம்] மதுவராக விரே நின்வாயொப்பதன்றியதுபோ ல்வதுண்டெனினுமாம்
அநியாயம்-நியாயமின்மை
அநிரதம் - சத்துருபத்துக் கன்னியம்மாகு மாயை
அநிருத்தபதம்-ஆகாயம்
அநிருத்தன் - அடங்காதவன், கிருட்டி னன், பௌத்திரன், மன்மதன் மகன்
அநிருமலம்-அழுக்கு
அநிர்தம்-ஒன்றுமில்லாதிருத்தல், மாயை
அநிலநாள்-சோதிநாள், விசாகநாள்
அநிலம்-காற்று, பிறப்பு
அநிலன்-ஓரவுணன், வாயு
அநீகம்-அநிகம், ஓர் படைத்தொகை
அநீசம்-மரியாதை
அநீச்சுரத்துவம்-ஈச்சுரனில்லையென்னும் பாவம்
அநீதம்-நீதியின்மை
அநீதர்-கீழ்மக்கள், நீதியற்றோர்
அநீதி-நீதிக்கேடு
அநு-அனு, கதுப்பு, தொடர்ச்சி
அநுகம்-செஞ்சந்தனம்
அநுகரணவோசை-ஒலிக்குறிப்பு
அநுகூலம்-காரியசித்தி, விக்கினமின்மை
அநுக்கம்-சந்தநம், சோம்பு, பயம், பாம்பு, வருத்தம்
அநுக்காரம்-ஒப்புமை
அநுசன்-தம்பி
அநுசாரம்-ஒப்புமை
அநுசிதம்-தகுதியின்மை, பொய்
அநுஷ்ணம்-குளிர், சோம்புல், பாதகம்
அநுதாத்தம்-உருபகத்திலொன்று, வேத ஸ்வரம் நான்கிலொன்று
அநுதாபம்-மனத்தாபம்
அநுத்தம்-பொய்
அநுத்திரபஞ்சமம்-அயிர்ப்பு
அநுநாதம்-எதிரொலி
அநுபமை-உவமையின்மை, தென்மேற் றிசை யானைக்குப் பெண்யானை
அநுபோகம்-அனுபவம், கைப்பத்து
அநுமதி-சம்மதி, பௌரணை
அநுமன்-வானரவீரன்

ஓதல் - அந்தணர் வணிகர்க்குரிய வறு தொழிலினென்று, ஒழிதல், சொல் லல், படித்தல், போதித்தல், மந்திரஞ் செபித்தல், வாசித்தல்
ஓதவனம் - கடல்
ஓதனம்-உண்டி, சோறு, பெருமை, போர்
ஓதன்மை - ஓதற்றன்மை, பாடல்
ஓதி - அறிவு, அறிவுடையோன், இடங் கழிமை, ஓந்தி, கல்வி, ஞானம், பூனை, பெண்மயிர், போர், மலை, பச்சோந்தி
ஓதிமத்தர் - பிரமர்
ஓதிமுயர்த்தோன் - பிரமன்
ஓதிமம் - அன்னம், கவரிமா, புளியமரம், மலை
ஓது - பூனை
ஓதுதல் - சொல்லுதல், படித்தல், போ தித்தல், மந்திரமுச்சரித்தல்
ஓதுவார்க்குணவிடுதல் - அறமுப்பத்திர ண்டினொன்று
ஓதுவான் - ஆசான், திருப்பாட்டுப்பாடு வோன், மாணக்கன்
ஓதுவித்தல் - அந்தண ரரசர்க்குரியவறு தொழிலி னொன்று, படிப்பித்தல், வே தங்கற்பித்தல்
ஓதை-ஒலி, பேரொலி, மதிலுண்மேடை, மதில், மலை
ஓதைவாரி - இறகு,
ஓத்தி - ஓந்தி
ஓத்து - ஓரினப்பொருளை யொருவழி வைத்திருக்குமியல், வேதம்
ஓத்துப்புறனடை - இயலிற்கிற்றிற் சொல் லப்படும் புறனடை
ஓத்துமுறைவைப்பு - ஓர் யுத்தி
ஓத்துரைப்போர் - பொருந்தச் சொல்லு வோர், வேதமோதுவோர்
ஓநாய் - ஓர்விதநாய், கோனய்
ஓந்தி - ஓணன்
ஓப்பலியாள்-கணவனின்தமையன்பெண் சாதி
ஓப்புதல் - ஓட்டுதல், நீக்குதல்
ஓமகுண்டம் - வேள்விக்குண்டம்
ஓமசாந்தி - ஓமம் வளர்த்துச் சாந்திபண் ணல்
ஓமதிராவியம்- ஓமத்திற்குரியஉபகரணம்
ஓமப்பொடி - திருநீறு
ஓமமண்டபம் - ஓமாலயம்
ஓமம் - அசமோதகம், அப்பிரகம், ஓர் பூடு, யாகம்
ஓமம்வளர்த்தல் - யாகம்பண்ணல்
ஓமல் - ஊர்ப்பேச்சு, பேச்சுப்பரத்தல்
ஓமவிறகு - சமிதை
ஓமாக்கினி - ஓமத்தீ
ஓமான் - ஓந்தி
ஓமி - தீ, நீர், நெய்
ஓமித்தல் - ஓமஞ்செய்தல்
ஓமிடி - துக்கம்
ஓமிடித்தல் - கேடுறல்
ஓமியம் - ஓமம்
ஓமுடிவு - அழிவு
ஓமை - மாமரம், பாலைநிலத்து மரம்
ஓமைக்கொட்டை - மாங்கொட்டை
ஓம் - அயன், அரன், அரி, ஆமெனல் தன்மைப்பன்மை விகுதி, பிரணவம்
ஓம்படல் - சம்மதித்தல்
ஓம்படை-காவல், கையடை, பாதுகாப்பு
ஓம்படைக்கிளவி-கையடைவாக்கு, பெரி யோர் சொல்லும் புத்தி
ஓம்பல், ஓம்புதல் - உண்டாக்கல், பாதுகாத்தல், வெளுத்த பிசின், வளர்த் தல், பேணுதல், தவிர்த் தல், பரிகரித்தல்
ஓயல் - ஓய்தல்
ஓயாமாரி - இடைவிடாமை, ஓயாமழை, பெருங்கொடை
ஓயாமை - இடைவிடாமை
ஓய்-ஓயென்னேவல், பால்பகாவுயர்திணை யொருமை, முன்னிலைவிளியுருபு
ஓய்தல் - ஆறுதல், ஒழிதல், சாய்தல், தளர் தல், முடிதல், விட்டு நீங்குதல்
ஓய்ந்திருக்குதல் - ஆறியிருக்குதல், வேலை யொழிந்திருக்குதல்
ஓய்ப்பிடியாள் - ஓரகத்தி
ஓய்மான்நல்லியக்கோடன் - கடையெழு வள்ளலி லொருவன்
ஓய்வு - சாதல், தளர்வு, முடிதல்
ஓய்வுகரை - அளவுமுடிவு
ஓரகத்தி - உரிமைச்சுதந்தரக்காரி, கண வனின் சகோதரன் மனைவி
ஓரக்கண் - சாய்வானபார்வை
ஓரக்கண்ணன் - சாய்ந்த பார்வை யுள்ள வன், பட்சபாதன்
ஓரக்காரன் - பக்கபாதக்காரன்
ஓரசைச்சீர் - நேரசையானுவது நிரை யசையானுவது வருமசைச்சீர்
ஓரடிமடக்கு - நான்கடி யுள்ளோரடியே மடங்கிவருவது [உ-ம்] துறைவாதுறை வார் பொழிற்றுணைவர் நீங்க

ஓரபட்சம் - ஓரவாரம்
ஓரம் - காரசாரம், சத்திச்சாரம், பக்க பாதம், பக்கம், வீளிம்பு
ஓரம்பேசல் - ஒருபக்கஞ்சாயப்பேசல்
ஓரம்போகியார் - ஐங்குறுநூற்றில் மருதத்திணையைக் குறித்த முதனூறு பாடிய புலவர்
ஓரல் - ஆய்தல்; ஒடுக்கமானது, தெளிதல், ஓர்தல்
ஓரவாரம் - ஒருபக்கவாரம்
ஓரா - ஓட்டி, ஓர்மீன்
ஓராசிடைநேரிசைவெண்பா - ஓராசிடையிட்டுவரும் வெண்பா
ஓராட்டல் - தாலாட்டல்
ஓராட்டு - தாலாட்டு
ஓராட்டுதல் - ஓலாட்டுதல்
ஓராயம் - இணைப்பு, சத்தார், சாய்வு
ஓரி - ஆணரி, ஆண்மயிர், ஆண்முசு, ஒல்லட்டை, கடையெழுவள்ளலிலொருவன், காளிவாகனம், கிழநரி, புறமயிர், விலங்கின் படுக்கை, விலங்கேற்றின் பொது, கருடன், நிறம்
ஓரிசு - ஆயத்தம், இசைவு, இணக்கம், சமாதானம், தீர்மானம்
ஓரிதழ் - வனசம்
ஓரிதழ்த்தாமரை - ஓர் பூடு
ஓரிபூத்தல் - தேடாமற் கிடத்தல்
ஓரிலைத்தாமரை - ஓர் பூடு
ஓரிலைத்துத்தி - ஓர் பூடு
ஓருதல் - ஓர்தல்
ஓரும் - அசைச்சொல் [உ-ம்] செயற்பாலதோருமறனே, பெயரெச்சம்
ஓருள்ளிப்பூடு - பல்லிலாவுள்ளி
ஓரெழுத்தினம் - ஓரெழுத்துவரிக்குள் வருங்கவி
ஓரெழுத்துமடக்கு - அடிகடோறுமிடை பிறிதெழுத்தின்றி வந்த வெழுத்தே வருவது
ஓரை-இராசுப்பொது, இலக்கினம், ஐந்துநாழிகைநேரம், கூகை, சமயம், சித்திரான்னம், தோழி, மகளிர் கூட்டம், மாதர்விளையாடுங்களம், மாதர் விளையாடுங்கலன்கள், மூர்த்தம், விளையாட்டு
ஓரைக்கதிபன் - இலக்கினதிபதி, ராசிக் கதிபதி
ஓரொரு - ஒவ்வொரு
ஓரொன்று - ஒவ்வொன்று

ஓரோவழி - ஒருசார்
ஓரோவிடம், ஓரோவிடை - ஒவ்வோரிடம்
ஓர் - ஒன்று, ஓரென்னேவல்
ஓர்கட்புள் - காகம்
ஓர்குடிமணாளன், ஓர்குடியிற்கொண்டோன் - சகலன்
ஓர்குண்டலன் - பலபத்திரன்
ஓர்க்கோலை - ஓர் வாசனைப் பண்டம், அம்பர்
ஓர்சல் - ஓரிசு
ஓர்ச்சி - ஆராய்ச்சி, ஆலோசனை, ஞானம்
ஓர்தல்-ஆராய்தல், தெளிதல், நினைத்தல்
ஓர்பலம் - கோங்கு
ஓர்ப்பு - ஆடூ உக்குணம் நான்கினென்று அஃது ஓர்மம், கருமமுடிக்குந்துணிவு, பொறுக்கட்டுதல், பொறுமை
ஓர்மம், ஓர்மிப்பு - மனத்திடன்
ஓர்மை - துணிவு, ஒருமை
ஓர்வு - ஆராய்வு, அறிதல்
ஓலக்கமண்டபம் - சங்கமண்டபம்
ஓலக்கம் - சங்கத்தானம், திரிச்சமுகம்
ஓலமிடல், ஓலமிடுதல் - அபயமிடுதல், அழுதல், கதறல், முறையிடுதல்
ஓலம்-அபையமிட்டழைத்தல், ஒலி, கடல், திரை, துக்கக் குறிப்பு, பாம்பு, அடைக்கலம்
ஓலாட்டல் - தாலாட்டல்
ஓலாட்டு - தாலாட்டு
ஓலாட்டுதல் - ஓராட்டுதல்
ஓலிடல், ஓலிடுதல் - ஊளையிடுதல், ஓலமிடுதல், அலறுதல், முழங்குதல்
ஓலை-ஒலி, கமுகு, தாழை, தெங்கு, பனை முதலியவற்றினோலை, சீட்டு, ஒரு காதணி
ஓலைக்கணக்கர் - வித்தியார்த்திகள், பண்டிதர்
ஓலைக்கணாட்டு - ஓலைத்தளிர்
ஓலைக்கண் - ஓலைச்சட்டம்
ஓலைக்காந்தல் - ஓலைத்துகள்
ஓலைக்கிளிஞ்சில் - ஓர்வித சங்கு
ஓலைக்கூடு - ஓலைக்குடை
ஓலைச்சிறகு - பாதிப்பனையோலை
ஓலைச்சுருள் - செந்திரிக்கம்
ஓலைதீட்டல் - திருமுகம்வரைதல்
ஓலைதீட்டும்படை - எழுத்தாணி
ஓலைப்பூ - தாழைப்பூ

ஓலைமுத்திரை - ஓர் முத்திரை
ஓலைமூங்கில் - ஓர் மூங்கில்
ஓலையெழுதல் - சீட்டெழுதுதல், சீதன வுறுதி யெழுதுதல்
ஓலைவாங்குதல் - சாதல்
ஓலைவாளை - ஓர் மீன்
ஓல் - ஒலி, ஒலித்தல், ஓலம்
ஓவம் - உயரம், சித்திரம், சித்திர வேலை
ஓவர் - ஓவியர், பாடற்கீழ்மக்கள்
ஓவல் - ஓவுதல்
ஓவன் - சித்திரக்காரன்
ஓவாப்பிணி - மாறாத துன்பம்
ஓவாமுயற்சி - ஒழியா முயற்சி, இஃது வேளாண்மை மாந்தரியல்பு ளொன்று
ஓவாமை - ஒழியாமை
ஓவியம் - சித்திரம், பிரதிமை
ஓவியர் - கம்மாளர், சித்திரக்காரர்
ஓவுதல் - நீங்குதல், இசைதல், ஒழிதல், வருந்தல்
ஓவெனல் - அதிசயக் குறிப்பு, இரக்கக் குறிப்பு
ஓவென்றவெளி - பெரியவெளி
ஓளி - ஒழுங்கு, யானைக்கூட்டம்
ஓற்பலம் - கோங்கு
ஓனம் - எழுத்தின்சாரியை
ஓனாய் - கோனாய்

---

ஔ அழைத்தல், வியப்பு தடை இவற்றைக் காட்டுமோ ருபசருக்கம், அனந்தம், ஓரெழுத்து, ஔவென்னேவல், கடித்தல், பூமி
ஔகாரக்குறுக்கம் - தன் மாத்திரையிற் குறுகிய ஔகாரம்
ஔகாரம் } ஓரெழுத்து
ஔகான் }
ஔசரம் - கோடாங்கல்லு
ஔசனசம்-அட்டாதச தருமசாத்திரத்தி னொன்று
ஔசித்யம் - உசிததர்மம், தகுதி, மெய்
ஔசீரம்-ஆசனம், கவரிமாமயிர், படுக்கை
ஔஷதம் } மருந்து
ஔடதம் }
ஔடதவாதி - ஓர் மதக்காரன்
ஔடும்பரம் - தாமிரம்
ஔதகம் - உதகம், நீலரத்திநம்
ஔதசியம் - பால்
ஔதநிகன் - சமையல் செய்கிறவன்
ஔதரிகன் - உதரபோஷகன்
ஔதாரியம் - உதாரம், மிகுகொடை
ஔதாரியன் - வரையாதுகொடுப்போன்
ஔத்தாநபாதி - துருவநக்ஷத்திரம்
ஔத்தாலகம் } புற்றுத்தேன்
ஔத்தாலிகம் }
ஔத்திரி - ஒருவித தீக்ஷை
ஔபசாரிகம் - உபசார வார்த்தை
ஔபசிலேஷம் - ஒருவழிமேவல்
ஔபதேயம் - பண்டிச்சில்
ஔபத்தியம் - புணர்ச்சி
ஔபரிதிகம் - ஈடு
ஔபாசனம் } உபாசனை, வைதீகச் சடங்கு நடத்தல்
ஔபாசனை }
ஔரகம் - உரகம்
ஔரசன் - குலமொத்த கன்னி யைத்தீ வேட்டுப்பெற்ற புத்திரன்
ஔரப்பிரகம் - ஆட்டுமந்தை
ஔரிதம்-தருமநூல்பதினெட்டினொன்று
ஔருவசேயன் - அகத்திய முனிவன்
ஔருவவிரதி - நீரொன்றையே யுட்கொண்டு தவஞ்செய்பவன்
ஔவித்தல் - அழுக்காறடைதல், பொறாமை யடைதல்
ஔவியம் - அழுக்காறு, பொறாமை, தேவர்களுக்குச் செய்யும் சடங்கு
ஔவுதல் - அங்கலாய்த்து விழுதல், அழுந்தி யெடுத்தல்
ஔவை - தவப்பெண், தாய், திருவள்ளுவர் சோதரி
ஔவைமூலி - கஞ்சா
ஔவையார்கூந்தல்-சீதேவி, செங்கழுநீர்
ஔனம் - மிளகுரசம்

---

ஃ அக்கேனம், இது கூ

க அரசன், ஆன்மா, உடல், ஓரெழுத்து, கந்தருவசாதி, காமன், காற்று, சூரியன், செல்வன், திருமால், தீ, தொனி, நமன், பிரமன், மயில், மனம், விநாயகன்
கஃகான் - ககரவெழுத்து
கஃசு - காற்பலம்
கஃறெனல் - கறுப்பாதல்
ககசம் - வெள்ளரி
ககபதி - இராசாளிப்பறவை, கருடன்
ககமாறம் - மணித்தக்காளி
ககம் - வாயு, அம்பு, சரகாண்ட பாஷாணம், பறவை, மணத்தக்காளி
ககரம் - ஓரெழுத்து, ஒன்றினிலக்கம்
ககவசுகம் - ஆல்
ககனபம் - வீணைத்தண்டு
ககனம் - ஆகாயம், ஓர் கிழங்கு, காடு, படை, புட்பொது
ககனக்கிரகம் - அண்டமுகடு
ககனரவிந்தம் - கொட்டைப்பாசி, அந்தரத்தாமரை, பொய்
ககன் - சூரியன்
கக்காரம் - ஓரெழுத்து
ககு - தீச்செய்கையுள்ளவன்
ககுஞ்சலம் - சாதகப்புள்
ககுதி - முத்திரை குத்தின எருது
ககுத்தன்-இக்ஷுவாகுபுத்திரனாகிய சசாதனது மகன்
ககுத்து - இராசலட்சணம், எருத்தின் பிடர், நாக்கு, முக்கியம்
ககுபம் - திசை, மருதமரம்
ககுபுதேவி-தக்ஷன்மகள், தருமன்மனைவி
ககுவன் - கம்சனுக்கிளவல்
ககேசன் / ககேசுரன் / ககேந்திரன் } கருடன், சூரியன்
ககோளசாஸ்திரம் - வானசாஸ்திரம்
ககோளம் - கோளம், வானவட்டம்
ககோளவித்தை - வானசாத்திரம்
கக்கசம் - பிரயாசம்
கக்கப்பாளம் - கக்கப்பை, கக்கப்பொட்டணி
கக்கப்பொட்டணி-இடுக்குப் பொட்டணி
கக்கம்-அக்குள், எண்ணெய்க்கடுகு, கைக்குழியின்கீழ்
கக்கரி / கக்கரிகம் } ஓர் நாய், ஓர் கொடி, சுக்காரி
கக்கலாத்து - கரப்பான்பூச்சி
கக்கல் - இருமல், கக்கப்பட்டது, கக்குதல், சத்திபண்ணல்
கக்கார் - தேமா
கக்கிசம் / கக்கிஷம் } ஒன்றைவிளக்குமுறை, ஓர் மாந்திரிய நூல், பிரயாசம், வருத்தம்
கக்கிசாரம் / கக்கிஷாரம் } பிரயாசம்
கக்கிருமல் - ஒருவகை இருமல் நோய்
கக்குதல்-ஆணிமுதலியபுறப்படுதல், இருமுதல், உட்கொள்ளாமை, வெளிவருதல், எதிரெடுத்தல், கதிர்குலை முதலிய வீனுதல், கொப்பளித்தல், சந்தித்தல்
கக்குரீதி - கக்கசம்
கக்குவான் - குக்கல்நோய்
கங்கடகன் - சிவன்
கங்கடம் - கவசம், சிவனது திரிசூலம்
கங்கணங்கட்டல் - ஒருகாரியத்திலாயத்தப்படல், சயக்குறியணிதல், விருதுகட்டல்
கங்கணம் - ஓர் நீர்வாழும்பறவை, கடகம், கைவளை, நீர்த்துளி, மஞ்சட்காப்பு, முடி, மேகக்கூட்டம்
கங்கதம் / கங்கதிகை } சீப்பு
கங்கபத்திரம் - அம்பு, உமி, பருந்திறகு
கங்கம் - சீப்பு, யாகத்தம்பம், கழுகு, கோளகபாஷாணம் சீப்பு, தீப்பொறி, பருந்து, பெருமரம், மரணம், வரம்பு
கங்கரம் - மோர்
கங்கன் - யமன், தருமனுக்கு அஞ்ஞாதவாசத்தில் வழங்கியபெயர், நன்னூல் செய்வித்தவன், ஓரரசன், பிறவிச்சீர்பந்தபாஷாணம்
கங்காசுதன் - குமரன், விநாயகன், வீடுமன்
கங்காதரன் - சிவன்
கங்காதீரம் - கங்கைக்கரை
கங்காதேவி - கங்கை
கங்காத்துவாரம் - அரித்துவாரம்
கங்காபுத்திரன்-முருகக்கடவுள், வீடுமன், வேளாளன்
கங்காளமாலி - சிவன்
கங்காளம்-உண்கலம், தசைகழிந்தவுடன் முழுவெலும்பு
கங்காளன் - சிவன், துருசு
கங்காளி - காளி, பார்வதி
கங்கானம் - குதிரை

கங்கு - எல்லை, கருந்தினை, கரை, கவர், கழுகு, தீப்பற்றியதுரும்பு, தீப்பொறி, பக்கம், பருந்து, பனைமட்டையின் கவை, வரம்பருகு, வரம்பு, வரையறை
கங்குகரை - எண்ணிக்கை, எல்லை
கங்குல் - இரா, இருள், பரணிநாள்
கங்குல்விழிப்பு - இராக்காவல், கூகை
கங்குற்கிறை - சந்திரன்
கங்குனிறம் - கருப்புநிறம்
கங்கேஷமிசுரம் - கவுடதர்க்கம்
கங்கேஷமிசுரன்- கங்காதீரத்தில்வசித்து கௌடதர்க்கம் என்னும் தர்க்கசாஸ்திரஞ்செய்த ஓர்பிராமணசிரேஷ்டன்
கங்கை-சத்தநதிகளினொன்று, நதி, நவட்சாரம், பகீரதி, மேனைபுத்திரரி லொருத்தி, மருது
கங்கைகோத்திரம் - நீர்விளங்குன்றம், வேளாளர்குலம்
கங்கைக்குணன் - நவட்சாரம்
கங்கைசக்களத்தி - பார்வதி
கங்கைதூவி - மேகம்
கங்கைபெற்றோன், கங்கைமைந்தன் - குமரன், விநாயகன், வீடுமன்
கங்கையோன் - துருசு
கங்கைவேணியன் - சிவன்
கசகசப்பு - ஒலிக்குறிப்பு
கசகசா - ஓர்சரக்கு, அவினிவிரை
கசகசெனல் - ஒலிக்குறிப்பு
கசகம் - வெள்ளரி
கசகரிகம் - கக்கரி
கசகன்னம் - காதையசைக்கும் வித்தை, மாரீசம்
கசகன்னி - வெருகு
கசகுதல் - நழுவுதல், வருந்தல்
கசக்கம் - சுணக்கம்
கசக்கல் - கசங்கப்பண்ணல், வருத்துதல்
கசக்கார் - தேமா
கசக்கு - கயக்கு, சோர்வு
கசக்குதல்-கயங்கச்செய்தல், வருத்துதல்
கசக்குப்புகையிலை - சுருட்டுப் புகையிலை
கசங்கம் - பீநாறி
கசங்கலம் - கடல்
கசங்கல் - குழைதல்
கசங்கனம் - கடைவீதி
கசங்கு - ஈந்து, ஓலைநீங்கிய வீந்தின்மட்டை, கசங்கென்னேவல், கயங்கு
கசங்குதல் - குழைதல், தேம்பல், மனநோவல், வேலையிலுலிளைத்தல்
கசடர் - கீழ்மக்கள்
கசடு - ஐயம், கீழ்மை, குறைவு, குற்றம், தழும்பு, மாசு
கசட்டை-இளமை, கசப்பு, கயர், துவர்ப்பு
கசட்டைத்தயிர் - ஆடைநீக்கின தயிர்
கசட்டைப்பிஞ்சு - இளம்பிஞ்சு, கசப்புப் பிஞ்சு
கசதி - கஸ்தி
கசத்தல் - கைத்தல், வெறுத்தல்
கசந்தலை - கயந்தலை
கசபம் - புல்
கசபரீட்சை - கலைஞான மறுபத்து நான்கினொன்று, அஃது யானைப்பரீட்சை
கசபாசம் - மயிர்த்திரள்
கசபுடம் - இரண்டுமுழக்கன அளவுக்கு ஆயிரம் எருவைத்து எரிக்கும்புடம்
கசபுளுகன் - பெரியபுளுகன்
கசப்பி - மயிர்ச்சிகைப்பூடு, வல்லாரை, வேம்பு
கசப்பு - கைப்பு, வனத்துக்கம், வெறுப்பு
கசமடையன் - பெருமூடன்
கசமரம் - மஞ்சள்
கசமரேபம், கசமாது - ஊமத்தை
கசமாலம் - புகை
கசம்-இரண்டுமுழ அளவு, ஓர்நோய், கயம், தாமரை, மயிர், யானை, ஆழமுடைய குளம்
கசரிபு - சிங்கம்
கசரோகம் - கயரோகம்
கசர் - இளநீர் முதலியவற்றின் கயர், ஓர் சரக்கு, துவர்ப்பு
கசர்ப்பு - இறைச்சி
கசலை - துன்பம்
கசவஞ்சி - மகாலோபி
கசவம் - கடுகுச்செடி
கசவாரக்கெட்டது - அறக்கெட்டது
கசவியாதி - கயரோகம்
கசவிருள் - பெரியவிருள்
கசற்பம் - மஞ்சள்
கசனை - ஈரம், காவி, குறிச்சூடு
கசன் - வியாழன்மகன்
கசாகு - பாம்பு, விரோதமான நடை
கசாகூலம், கசாகூளம் - குப்பை, தாறுமாறு, பல சாதிக் கலப்பு
கசாக்கிரம் - மயிர்நுனி
கசாசனம், கசாசனை - அரசமரம்

கசாயம் - கஷாயம், குடிநீர்
கசாரி - சிங்கம்
கசாருகன் - கொலையாளன்
கசாளம் - அடையல்
கசானனன் - விநாயகன்
கசி - ஈரமூறு, வெயர்
கசிகசிப்பு - ஒட்டீரம்
கசிதம் - துடிப்பு, பதித்தல், பூச்சு
கசிதல்-அழுதல், இரங்கல்,உருகல், ஊறுதல், கரைதல்
கசித்தி - வீழி
கசிந்து - பொன்
கசியபன் - காசிபரிஷி
கசிவகத்துண்மை - வேளாண்மை மாந்தரியல்புளொன்று
கசிவு - அழுகை, அன்பு, கசிதல், வருத்தம், வெயர்வை, இரக்கம்
கசுகசுத்தல்-ஈரலித்தல், கசிவாயிருத்தல்
கசுகசுப்பு - ஒட்டீரத்தன்மை
கசுகசெனல் - ஈரமொட்டுங்குறிப்பு
கசுகுசுத்தல் - இரகசியம்பேசுங் குறிப்பு, இரகசியம்பேசுதல்
கசுகுசெனல் - மெதுவாகப்பேசுதல்
கசுபிசுத்தல்-ஒட்டீரமாக்கி யிளகியிருக்குதல்
கசுமாலம் - அழுக்கு, கெட்டது
கசுமாலி - அசுத்தமானவள், கெட்டவள்
கசேந்திரஐசுவரியம் - மிகு ஐசுவரியம்
கசேந்திரன் - அயிரார்வதம், இராசயானை
கசேருகம் - தமரத்தை
கசை-கவ்சம், குதிரைச்சம்மட்டி, சவுக்கு, சித்திரவேலை, பசை, பின்னற்கயிறு, முறுக்கினகம்பி
கசைமுறுக்கி - தட்டான்குறடு
கச்சகம் - குரங்கு
கச்சகர் - கொள்ளு
கச்சக்கடாய் - ஆமை ஓடு
கச்சட்டம் - உடைமடிப்பு, கௌபீனம், சண்டை
கச்சதூஷன் - தவளை
கச்சபக்கடாய் - ஆமை ஓடு
கச்சபந்தி - குபேர னவநிதியி னொன்று
கச்சபம்-ஆமை, மற்போர்நிலையினொன்று
கச்சபாலயம் - காஞ்சீவரத்தில் ஓர் பரிசுத்த ஸ்தலம்
கச்சபி - பெண்ணாமை, சரஸ்வதியின் வீணை
கச்சம் - அளவு, ஓர்மீன், கடகரோகணி, கடன், கவசம், காய்ச்சற் பாஷாணம், குதிரையங்கவடி, துணிவு, நிச்சயம், மரக்கால், மீனெலும்பு, மூலக்கச்சு, முன்றானை, யானைக்கழுத்திடு கயிறு, வார்
கச்சரம் - மோர், விநயம்
கச்சலம் - மேகம்
கச்சலி - ஓர்மீன்
கச்சல் - ஒல்லியாள், ஓர்மீன், கைப்பு, சிறுமை, பிசகு, மிகவு மிளம்பிஞ்சு, வாழைக்கச்சல், வெறுப்பு
கச்சவடம் - வியாபாரம்
கச்சளம் - இருள், கண்ணிடுமை
கச்சற்கொடி - ஓர் கொடி
கச்சற்கோரை - ஓர் கோரை
கச்சன் - ஆமை
கச்சாச்சேர்-எட்டுப்பலம்கொண்ட நிறை
கச்சாந்தகரை - திராய்
கச்சாயம் - ஓர்பணிகாரம், கடலருகான மூலை
கச்சாலம் - சுரபாஷாணம்
கச்சாலை - கச்சபாலயம், காஞ்சிநகரம்
கச்சால் - மீன்பிடிக்குங்கூடு
கச்சான் - மேற்காற்று, மேற்றிசை
கச்சி - ஊமற்பிளவு, காஞ்சிபுரம், சிரட்டைக்கையில், சின்னி, சீந்தில்
கச்சிசாதநிறமணி - சாதுரங்கப் பதுமராகம்
கச்சியப்பசிவாசாரியார் - கந்தபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்
கச்சியப்பமுனிவர்-காஞ்சிப்புராணம் பிற்பகுதி, விநாயகபுராணம்,பேரூர்ப்புராணம், தணிகைப்புராணம் பாடியவர்
கச்சில் - ஈந்து
கச்சு - உத்தரீயம், நூற்கயிறு, இடைக்கட்டு, பிணிக்கை, மூலைக்கட்டு
கச்சுக்கச்செனல் - விடாதுபிதற்றல்
கச்சுச்சாத்தல் - விக்கிரகத்துக்குக் கச்சிடுதல்
கச்சுப்பிச்சுப்படுதல் - கம்பலைப்படுதல்
கச்சுரன் - காமுகன், சிரங்குபிடித்தவன்
கச்சுரு - நெருப்பு
கச்சூரம் - கழற்சிக்கொடி,சிறுகுறட்டை, பேரீந்து
கச்சேரி - உத்தியோகசாலை, சங்கீத விநோத சபை

கச்சை - கயிறு, கவசம், கௌபீனம், தழும்பு, முழுப்புடவை, யானைகட்டுங் கயிறு, வார்
கச்சைக்கட்டுதல் - அரைகட்டுதல், தாறுபாய்ச்சிக்கட்டுதல்
கச்சைக்கொடியன் - கண்ணன்
கச்சோணி - வாசனைப்பண்டம்
கச்சோதம் - மின்மினி
கச்சோரம் - கிச்சிலிக்கிழங்கு
கச்சோலம் - ஏலப்பட்டை, கிச்சிலிக்கிழங்கு, மாஞ்சில், கஸ்தூரி மஞ்சள், பச்சைப்பூலாங்கிழங்கு
கச்சோளி - வாசனைப்புல்
கஞலல் - கஞறல்
கஞறம் - கள்
கஞறல் - எழுச்சி, கடுப்பு, சினக்குறிப்பு, நிறைதல், நெருங்கல், பொலிவு, மிகுதி
கஞன்றல் - எழுச்சி
கஞ்சகம் - கச்சுவிடுந்தலைப்பு, கண்ணிலிடுமோர் மருந்து, முன்றானை, கருவேம்பு
கஞ்சகன் - கண்ணன்
கஞ்சகாரர் - கன்னார்
கஞ்சக்கருவி - தாளமுதலிய வெண்கல வாத்தியம்
கஞ்சணி - பிரதானம்
கஞ்சத்தகடு - ஈயத்தினாற் செய்யுமோர் தகடு
கஞ்சநன் - மன்மதன்
கஞ்சம் - அப்பவருக்கம், அமிர்தம், ஒரூர், கஞ்சா, கற்கடகபாஷாணம், கைத்தாளம், தாமரை, துளசி, நீர்பாத்திரம், வஞ்சகம், வெண்கலம்
கஞ்சரம் - சிவந்திநாயகம்
கஞ்சரன் - குறியவன், சூரியன், பிரமன்
கஞ்சரீடம் - வலியான் குருவி
கஞ்சல் - எளியது, குப்பை, கூளம்
கஞ்சனம் - கண்ணாடி, கரிக்குருவி, கைத்தாளம், வலியான்
கஞ்சனை - கண்ணாடி, கலசப்பானை
கஞ்சன் - ஓரரசன், அவன் கிருஷ்ணன் மாமன், பிரமா, மூடவன், லோபி
கஞ்சா - கள், கோரக்கர்மூலி, சாராயம்
கஞ்சாகம் - தவிடு
கஞ்சாக்குடுக்கை - குடுகுடா
கஞ்சாங்கொற்றி-கனமற்றது, பாலற்றது, பிச்சிப்பேய்
கஞ்சாங்கோரை - ஓர் துளசி
கஞ்சாரி - கண்ணன்
கஞ்சாலேகியம் - ஓர் மருந்து
கஞ்சி - அன்னப்பால், காஞ்சிபுரம்
கஞ்சிகை - இரத்தினச்சிவிகை, சீலை, திரைச்சீலை
கஞ்சித்தண்ணீர்குடித்தல் - சாச்சடங்கில் ஒன்று
கஞ்சிப்பசை - கஞ்சிலானபசை
கஞ்சியிடல் - கஞ்சிப்பசை தோய்த்தல்
கஞ்சீயம் - வெண்கலம்
கஞ்சு - வெண்கலம்
கஞ்சுகம் - கட்டை, சிலந்தி, பாம்பின் றோல், மார்ச்சட்டை, முருக்கு
கஞ்சுகர் - மெய்காப்பாளர்
கஞ்சுகன் - காவற்காரன், வயிரவன், சட்டை தரித்தவன்
கஞ்சுகி - காவற்காரன், சட்டை, திரைச்சீலை, பாம்பு
கஞ்சுலிகை - இரவிக்கை
கஞ்சுளி - சட்டை, பொக்கணம்
கஞ்சூழ் - பேரீந்து
கடகடத்தல் - உபயவோசை கொள்ளல், உழன்றுபோதல், கழலல், வசங்கெடுதல், தளர்ந்து போதல்
கடகடப்பு - கடகடத்தல், வசக்கேடு
கடகடென்னேவல் - ஈரடுக் கொலிக் குறிப்பு
கடகம் - ஆயுதவருக்கம், இராஜதானி, உருள், கங்கணம், கர்க்கடகம், கிம்புரி, கூடை, கூத்தின் விகற்பம், கெண்டிகை, கேடகம், கைவளை, நாடு, படை, பூவாது காய்க்குமரம், மதில், மலை, மலைப்பக்கம், யானைக்கூட்டம், வட்டம், வீடு, சேனை, வாகுவலயம், ஓர் நகரம், இதனிடத்திலேயே கிருஷ்ணமூர்த்தி சமாதியாகிய ஜகந்நாதமுளது
கடகன் - நடுவன்
கடகாதகன் - காக்கை, நரி
கடகி - மனை
கடகு - கேடகம்
கடங்கரம் - உமி
கடசம் - கங்கணம்
கடசியம் - கன்னத்தட்டு
கடதாசி - கங்கதாதி
கடத்தல் - செலுத்தல், தாண்டல், நடத்தல், நெடுகவிடுதல், பாய்தல், பொழுதுபோக்கல், மீறுதல், விலக்குதல், வெல்லுதல், வஞ்சியாதெதிர் நிற்றல்

கடத்தி - கழப்புணி
கடத்துதல் - செலுத்துதல், நாட்போக்குதல், நெடுகவிடுதல், விலக்குதல்
கடத்தேறல், கடத்தேறுதல் } கடைத்தேறுதல்
கடத்தேற்றம் - இரட்சிப்பு
கடத்தேற்றுதல் - கடைத்தேற்றுதல்
கடந்தஞானம் - முற்றுந் துறந்த ஞானம்
கடந்தபொருள் - கடவுள், கிட்டாதது, போனபொருள்
கடந்தவெண்ணம்-முதிர்ச்சியான வெண்ணம்
கடந்தேறல் - இடையூறுகடத்தல், நற்கதியடைதல்
கடபலம் - தேக்குமரம்
கடப்பாடு-ஈகை, கடமை, செய்யவேண்டுவது, புகுதி, நடை, நேர்மை, முறைமை
கடப்பாரை - ஓர் கருவி
கடப்பு - கருங்குறுவை நெல், கடத்தல், கடவை
கடப்புக்கால் - விளையற்கால்
கடமா - காட்டுப்பசு, பொலிப்புயானை
கடமாத்தன் - சிவன், நோய் தீர்ப்போன்
கடமான் - காட்டுப்பசு
கடமுடெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு
கடமுனி - அகத்தியன்
கடமை-இறை, கடன், காட்டுப்பசு, குடியிறை, தகுதி, முறைமை
கடகம் - அருநெறி, உடல், உபரிடதம் முப்பத்திரண்டி னொன்று, ஓர் மந்திரம், கடமை, கடன், கயிறு, காக்கை, காடு, குடமுழவு, குடம், கொடிக்கடை, கோளை, சாரல், சுடலை, தோட்டம், நண்டு, நீதி, பதக்கு என்னும் ஓரளவை, பாண்டம், மயானஸ்தானம், மரமஞ்சள், மலைப்பக்கம், யானைக்கதுப்பு, யானைக்கூட்டம், யானைமதம், யானைமத்தகம், வார்ச்சியம், வானம், முறைமை
கடம்பக்கூனன், கடம்பக்கூனி, கடம்பக்கூனை } ஆமை
கடம்பம்-அம்பு, ஓர் மரம், கீரைத்தண்டு, வாலுளுவை
கடம்பர்-ஒருசாதியார், குறும்பர்
கடம்பல் - குமிழ்மரம்
கடம்பவனம் - மதுரை
கடம்பன் - குமரன்
கடம்பாடவி, கடம்பாடி } மதுரை
கடம்பு - கருங்குறுவைநெல், நீபமரம், பிள்ளை பிறந்தவுடன் சுரக்கும்பால், பிக்கதொன்று, இந்துவனம், நீலம், மார்க்கதம், தீங்கு
கடம்புவனம் - மதுரை
கடம்பூர் - ஓரூர்
கடம்பை - கடம்பூர், ஓர் காட்டு மிருகம்
கடயம்-அத்த கடகம், இந்திராணிகூத்து
கடரி - மரமஞ்சள்
கடலகம் - ஆமணக்கு, ஊர்க்குருவி, பூமி
கடலஞ்சிதம் - தருப்பை
கடலடக்கி - பேய் முசுட்டை
கடலடம்பு - ஓரடம்பு
கடலடி - இலவுங்கம்
கடலடைத்தான் - அபின், கஞ்சா
கடலர் - நெய்தனிலமாக்கள்
கடலாடி - நாயுருவி
கடலாமணக்கு - ஓராமணக்கு
கடலாமை - கடலில் வசிக்கும் ஓர் ஆமை
கடலியாத்திரை - கடற்பயணம்
கடலியோச்சியம் - சமுத்திரசாஸ்திரம்
கடலிருஞ்சி - ஓர் மரம்
கடலுடும்பு - ஓர் மீன்
கடலுருய்ஞ்சி-நீர்வாழ் பறவையினொன்று
கடலெடுத்தல் - சமுத்திரம் பெருகுதல்
கடலெலவிர் - ஓர் மீன்
கடலெள்ளு - ஓரெள்
கடலை - மஞ்சூரம், ஓர் பயறு
கடலைக்கம்பி-புடவை யருகிற்கிறுங் கம்பிகளிலொன்று
கடலோடி - மரக்கல மோடுவோன்
கடலோடுதல் - கடற்பிரயாணம் பண்ணுதல்
கடலோட்டு - கப்பலோட்டு
கடலோரம் - கடற்கரை
கடல்-இராசசின்னத்தொன்று, ஓரெண், சமுத்திரம், பசு
கடல்கட்டி-நீர்தடுப்போன், மச்சங்களின் வாய் கட்டுவோன்
கடல்கலக்கி - பேய்முசுட்டை
கடல்கொள்ளுதல் - கடலெடுத்தல்
கடல்நாய் - நீர்நாய்
கடல்நுரை - அக்கினிகர்ப்பம், ஓரப்பம்
கடல்படுதிரவியம்-கடலிலுண்டாகுந் திரவியமைந்து, அவை அக்கு, உப்பு, சங்கு, பவளம், முத்து

கடல்மனிதன்-நீரிலிருக்குமோர்வித மனு
கடல்முனை - கடலந்தம்
கடல்வண்டு - குடைவண்டு
கடல்வண்ணன் - ஐயன், விண்டு
கடல்வருணனை-பெருங் காப்பிய வுறுப்பு ளொன்று, அது கடற் சிறப்புக்கூறுவது
கடல்விராஞ்சி - ஓர்செடி
கடவ - அப்படியாக
கடவது - ஆகட்டும், கூடியது, செய்ய வேண்டுவது, முறையானது
கடவநாள் - செல்லுநாள்
கடவல்-செலுத்தல், பிரயோகித்தல்
கடவல்லி - உபநிடதம்
கடவுனாள் - செல்லுநாள்
கடவன் - செய்வானுக, செய்வேனுக
கடவாத்தியம் - குடவாத்தியம்
கடவாப்பண்டம் - பயணச்சாமான்
கடவான் - சுண்டாயம், செய்வானுக, வரம்பிலுடைவு
கடவு - தணக்குமரம், வழி
கடவுட்பணி-ஆதிசேடன், தேவதொண்டு
கடவுட்பாம்பு - ஆதிசேடன்
கடவுணதி - கங்கை
கடவுண்மூர்த்தி - அருகன்
கடவுண்மை - கடவுட்டன்மை
கடவுதல் - ஏவுதல், செலுத்தல், தகுதியாதல், பிரயோகித்தல்
கடவுமரம் - தணக்குமரம்
கடவுளர் - தேவர், வானவர்
கடவுளர்தாரம் - தேவதாரம்
கடவுள் - குரு, தெய்வம், நன்மை, முனிவன், வானவன்
கடவுள்வணக்கம்-கடவுள்வாழ்த்து, தேவவணக்கம்
கடவுள்வாழ்த்து - தேவதுதி
கடவை-ஏணி, கடத்தல், கடப்பு, கடப்புமரம், குற்றம், வாயில்
கடவைப்படுதல் - விட்டுப்பிரிதல்
கடவைப்படுத்தல் - தூற்றரித்தல், நீக்கல்
கடறு - அருநெறி, காடு, வாளுறை, சுரம்
கடற்கரை - கடலருகு
கடற்காகம் } ஓர்பறவை, கடலுராஞ்சிமரம்
கடற்காக்கை }
கடற்காளான் - கடலினோர்பாசி
கடற்குட்டம் - கடல்சூழ்ந்த இடம்
கடற்குதிரை - ஓர் நீர்வாழ் மிருகம்
கடற்குருவி - கல்லுப்பு
கடற்கொஞ்சி - ஓர்மரம்
கடற்கொடி - தும்பை
கடற்கொழுப்பை - எழுத்தாணிப்பூடு
கடற்சார்பு - நெய்தனிலம்
கடற்சிப்பி - கடலிலுள்ளசிப்பி
கடற்சில் - ஓர்கடன், மரக்கொட்டை
கடற்சேர்ப்பன்-நெய்தற்றலைவன், பாண்டியன்
கடற்பகை - வெண்கடுகு
கடற்பக்கி - கடற்பட்சி
கடற்பச்சை - சமுத்திரப்பச்சை
கடற்பட்சி - கிளிஞ்சில்
கடற்பன்றி - ஓர் கடல்மிருகம்
கடற்பாசி - கடலிலுண்டாகும் பாசி
கடற்பாம்பு - நீர்வாழுமோர்விதப்பாம்பு
கடற்பாலை - சமுத்திரசோகி
கடற்பிணா - நெய்தனிலப்பெண்
கடற்பிறந்தாள் - இலக்குமி, மூதேவி
கடற்புறா - கடலின்வாழ்புறா
கடற்பெருக்கு - கடல்நீர்ப்பெருக்கு
கடற்றுரா - கடலின்வாழுமோர் பறவை
கடற்றுழை - கொந்தாழை
கடற்றிரை - கடல் அலை
கடற்றீ - கடனுரை
கடற்றேங்காய் - கடற்றெங்கங்காய்
கடனம் - தாழ்வாரம், முயற்சி
கடனாளி - கடன்பட்டவன்
கடனிறுத்தல் - கடன்தீர்த்தல்
கடனுரை-ஓர்பணிகாரம், ஓர் மருந்து
கடனெடுத்தல் - கடன்வாங்குதல், பழிசாதித்தல்
கடன் - அளத்தல், இருணம், கடமை, குடியிறைமரக்கால், முறைமை
கடன்கட்டு - கடன்
கடன்கழித்தல் - கரிசனமற்றவேலைசெய்தல், தென்புலத்தார்க்குச் செய்வன செய்தல், பதிலளித்தல்
கடன்காரன்-கடன்கொடுத்தவன், கடன்பட்டவன், பார்வைக்கூழியஞ் செய்வோன்
கடன்சீட்டு-பற்றியகடனைக்காட்டு முறுதி
கடன்ஸ்தானம் - இலக்கினத்திற் காறுமிடம்
கடன்செய்தல் - இறந்தோர்க்கு வேண்டுஞ் சடங்குசெய்தல், கடமைசெய்யல்
கடன்படுதல் - கடன்வாங்குதல்

கடன்முறி - கடன்சீட்டு
கடன்மூர்த்தி - அருகன்
கடன்வழி - பிரயோசனமின்மை, வீண்
கடா - ஆடு, எருமை இவற்றினாண், கடா வென்னேவல், வினா
கடாகம் - கிணறு, பெருங்கொப்பறை
கடாகாசம் - குடத்திற்றோன்றிய வாகாயம்
கடாகாயம் - உருவுக்குள்வெளி
கடாகு - பறவை
கடாக்கம் - கடாட்சம்
கடாசலம் - யானை
கடாசுதல் - எறிதல், கடாவுதல்
கடாச்சங்காத்தம் - மடைத்தனம், மதியாத்தன்மை
கடாட்சம் - கடைக்கண், கருணம், கிருபை, தயவு
கடாட்சவீட்சணம் - கருணை, கிருபைக் கண்வைத்தல், மோகப்பார்வை
கடாட்சித்தல் - கிருபைசெய்தல்
கடாத்தன்மை - கீழ்ப்படியாமை, மடமை
கடாம் - யானைமதம்
கடாயம்
கஷாயம்
கஷாயனம் } குடிநீர், மருத்தூற நீர்
கடாரம் - ஓரூர், கருமைகலந்தபொன்மை, கொப்பரி, பசுவின் பெண்கன்று
கடாரன் - காமாதுரன்
கடாரி - நாகு, எருமை பசு, இவற்றின் பெண் கன்று
கடாரை - ஓர் நாரத்தை
கடாவல் - ஆணி முதலிய கடாவல், செலுத்தல், வினாவல்
கடாவு - கடாவென்னேவல், வினா
கடாவுதல் - செலுத்தல்
கடாவுதற்சீட்டு - பொருத்தச்சீட்டு
கடி - அதிசயம், அரை, அச்சம், அழகு, இடிப்பு, இரப்போர்கலம், இன்பம், உக்கிரம், ஐயம், ஒழிக்கை, ஒளி, ஓசை, கடிக்கப்பட்ட தழும்பு, கடியென்னேவல், கரிப்பு, கலியாணம், களிப்பு, காலனுட்பம், காலம், காவல், கூர்மை, கைப்பற்றல், சிறப்பு, சிறுகொடி, சீக்கிரம், தொனி, நந்தனவனம், நிதம்பம், நீக்கல், பிசாசம், பிணம், புணர்வு, புதுமணம், புதுமை, பொழுது, மிகுதி, வாசனை, விளக்கம், கூர்மை, நீக்கம், குறுந்தடி
கடிகண்டு - பூனைக்காலி
கடிகம் - கரமுட்டி
கடிகாசூத்திரம் - அரைஞாண், நாழிகை வட்டம்
கடிகாசூத்திரன் - குயவன்
கடிகாஸ்நாநம் - அரைஸ்நானம்
கடிகாரம் - நாழிகைவட்டம்
கடிகை - அரையாப்பு, உண்கலம், கரகம், சமயம், தாழ்க்கோல், துண்டம், நாழிகை, வேதம், முகூர்த்தம் விதிப்பவன், தோள்வளை, மங்கலபாடகர்
கடிகைமாக்கள் - நாழிகைக்கவி சொல்வோர், மங்கலப்பாடகர்
கடிகையாரம் - கடியாரம்
கடிகையார் - அரசனுக்குச்சென்ற நாழிகைக்குக் கவி சொல்லுவார்
கடிகைவெண்பா - ஓர்பிரபந்தம், அஃது தேவரிடத்து மரசரிடத்தும் நிகழுங்காரியங் கடிகையளவிற்றோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது
கடிகைவேளாளர் - ஓர் வேளாளர்
கடிகோல் - கொடுங்கோல், சூழிகோல், தட்டை, நாய் கழுத்தில் கட்டுந்தடி
கடிசு - கடுமை, நிமிர்வு
கடிசூத்திரம் - கடிகாசூத்திரம், அரைநாண்
கடிசை - பாய்மரந்தாங்கி
கடிச்சவாய்துடைச்சான் - காஞ்சொறி
கடிச்சை - உலோபகுணம், ஓர்பூடு, ஓர்மீன்
கடிஸ்நாநம் - இடைவரைக்குஞ் செய்யும் ஸ்நாநம்
கடிஞை - இரப்போர்கலம்
கடிதடம் - சகனபக்கம், நிதம்பம்
கசுதமாறு - ஊமத்தை
கடிதம் - அடுக்கல், இணைவு, காகிதம், செய்யப்பட்டது, பிசின்
கடிதல் - அழித்தல், அறுத்தல், ஒடுக்கல், கோபித்தல், சினக்குறிப்பு, தடைசெய்யல், தண்டித்தல், நீக்கல், வெட்டல்
கடிது - கடியது
கடிதேசம் - இடை
கடிதோமம் - கோரைக்கிழங்கு
கடித்தல் - கயிறு முதலிய விறுக்கிப்பிடித்தல், கறித்தல், தழும்புபடுத்தல்
கடித்திரம் - மேகலை
கடிநம் - சர்க்கரை, பானை, வெல்லம், அழுத் [தம்

கடிநாய் - கடிக்கிறநாய், துஷ்டன்
கடிந்தமன் - குயவன்
கடிந்தோர் - முனிவர்
கடிபிடி - சண்டை
கடிப்பகை - கடுகு, வேம்பு, சிற்றரத்தை
கடிப்பம் - ஆபரணப்பெட்டி, காதணி, கெண்டிகை
கடிப்பான் - ஊறுகாய், கறி
கடிப்பிடுகோல் - முரசறைகோல்
கடிப்பிணி - காதணி
கடிப்பிரதேசம் - பின்பக்கம்
கடிப்பிரோதம் - தொடைச்சந்து
கடிப்பு - கடிப்பட்டகாயம், கோல், செய்வார் கருவியிலொன்று
கடிப்பை - சிறுகடுகு
கடிம் - புருஷ்டம்
கடிமூலம் - முள்ளங்கிச்செடி
கடியடு - சிற்றரத்தை
கடியது-கடுமையானது
கடியந்திரம் - ஏற்றமரம்
கடியலூர்உருத்திரங்கண்ணனர் - பத்துப்பாட்டில் பெரும்பாணற்றுப்படையும், பட்டினப்பாலையும்பாடிய புலவர்
கடியல் - மரக்கலங்களின் குறுக்குமரம்
கடியன்-கடிக்கப்பட்டது, கடிக்கிற குணமுடையது, கடியது
கடியாரம் - நாழிகை வட்டம்
கடியிரத்தம் - மூக்கிரட்டை
கடிரோமம் - கோரைக்கிழங்கு
கடிலா - மூக்கிரட்டை
கடில்லகம் - துளசி
கடிவாய் - பற்பட்டவிடம்
கடிவாளம் - குதிரையின் வாய்வடம்
கடிவு - அரையில் வருந்திரட்சி
கடிவுகம் - இடுப்பின்கீழ்வரும் வீக்கம்
கடிவை - யானை
கடினகாலம் - தீங்கானகாலம், பஞ்சங் கோதாரியுள்ளகாலம்
கடினம் - கடுமை, கற்கசம், கொடுமை, மிகுதி, முறைப்பு, வருத்தம், வன்மை
கடினை-உறைப்பாய்விழியகத்திலிருக்கும் வெள்ளைச்சவ்வு
கடூரகம் - உபத்தம்
கடூரகசத்தம் - மூக்கிரட்டை
கடூரம் - அல்குல்
கடு - கசப்பு, கடுகுரோகணி, கடுக்காய் மரம், கடுவென்னேவல், காத்தல், கூர்மை, நஞ்சு, பாம்பு, மாவிலங்கு, முதலை, முள், முள்ளி
கடுகடுத்தல் - உவர்த்தல், கசத்தல், வெடுவெடுத்தல்
கடுகடுப்பு-அதிசீக்கிரம், ஓர்சுவை, வெடுவெடுப்பு, வெறுப்பு
கடுகம் - கடுகுரோகணி, காக்கும்மருந்து, காப்பு, குடம், சுக்கு, திப்பிலி, மிளகு, மோதிரம்
கடுகல் - சமீபித்தல், விரைதல்
கடுகன்னம் - கடுகோரை
கடுகாலாத்தி - கடுகினுற்சுற்றுமாலாத்தி
கடுகி - சுண்டைச்செடி
கடுகியகாந்தி - இரதபாஷாணம்
கடுகீடகம் - கொசுகு
கடுகு - எண்ணெய்க்கஷாயம், ஐயவி, ஓர் சரக்கு, கடுகென்னேவல், குன்றிச்செடி
கடுகுசாதம் - கடுகோரை
கடுகுதல் - விரைதல், சமீபித்தல், உதைத்தல்
கடுகுடுத்தல்-கோபமாய்ப்பேசுதல், தெளிவின்றிப்பேசுதல், விரைவுபண்ணுதல்
கடுகுடுத்தான்-நிலையில்லாதவன், பரபரப்பானவன்
கடுகுதல் - கடுகல்
கடுகுமணி - கடுகு, சிறுமணி
கடுகுரோகணி } ஓர் மருந்து
கடுகுரோணி }
கடுகெண்ணெய் - கடுகுத்தைலம்
கடுகை - கடுகுரோகணி
கடுகோரை - சித்திரான்னத்தொன்று
கடுக்கல் - உவமையாதல், உளைதல், கடுக்குதல், பசைப்படுத்தல்
கடுக்கன் - ஓர் காதணி
கடுக்கன்புல் - ஓர்புல்
கடுக்காய்-திரிபலையிலொன்று, துவர்பத்திலொன்று, முள்ளி, கடுமரம்
கடுக்காய்த்தலையன் - ஓர் பாம்பு, சிறுத்து வட்டித்தலையுடையவன், சிறுகடுக்காய், வரிகடுக்காய்
கடுக்காய்நண்டு - ஓர் நண்டு
கடுக்காய்வேர் - அரேணுகம்
கடுக்கிரந்தி - இஞ்சி
கடுக்குதல்-உவமையாதல், உளைதல், கடிவாய் கடுக்குதல், பசைப்படுத்தல்
கடுக்கெனல் - உயருதல், மிகுதல், வளருதல்
கடுக்கென்குதல் - வளர்தல்

கடுக்கென்றவன் - வளர்ந்தவன்
கடுக்கை - கொன்றைமரம், மருதமரம்
கடுக்கைக்கண்ணியன் - சிவன்
கடுங்கணாளர்-கொடியோர், வன்கண்ணர்
கடுங்கண் - ஓலைக்கண், கொடுமை
கடுங்கருத்து-கூரியகருத்து, வன்கருத்து
கடுங்கள் - அழன்றகள்
கடுங்காந்தி-வைப்புப்பாஷாணத் தொன்
கடுங்காய் - சாதிக்காய், பழாதகாய் [று
கடுங்காய்தல் - அறக்காய்தல்
கடுங்காய்நுங்கு - முதிர்ந்தநுங்கு
கடுங்காரநீர் - முட்டை
கடுங்காரம்-ஆயக்கல், ஒருப்பு, கடுங்கூட்டானகாரம், சாதிபத்திரி, மிகுவுறைப்பு
கடுங்காலம் - உபத்திரவகாலம், கொடிய காலம், பஞ்சகாலம், வெப்பமானகாலம்
கடுங்கூர்மை - அமரியுப்பு, அறக்கூர்மை, கடலுப்பு, கந்தகவுப்பு
கடுங்கை - கடுமை
கடுங்கோடை - வன்கோடை, வேனிற்காலம்
கடுங்கோபம் - மிகுகோபம்
கடுங்கோன்-தலைச்சங்கமிருத்திய பாண்டியர்களில் இறுதியான்
கடுசரம் - கடுகுரோகணி
கடுசாரம் - காசிச்சாரம்
கடுசித்தாழை - பறங்கித்தாழை
கடுஞ்சாரி - நவட்சாரம்
கடுஞ்சினப்பூமி - உழமண்
கடுஞ்சினேகம் - மிகு சினேகம்
கடுஞ்சுண்ணத்தி - சீனக்காயம்
கடுஞ்சூல்பெற்றிருந்தபாலன் - தை மாசியில் பாலைநிலத்திற்பிறந்த பூநீறு
கடுஞ்செட்டு - கொடிய வியாபாரம்
கடுஞ்சொல் - நால்வகை யிழிசொல்லி னொன்று
கடுடம் - மருக்காரை
கடுதலைமுடிச்சு - விகடச்செய்கை
கடுதலைவிற்பூட்டு - வழுவாத பூட்டான சொல்
கடுதல் - திருடல், பறித்தல்
கடுதாசி - காகிதம், நிருபம்
கடுதீத்தா - வெண்கடுகு
கடுத்தம் - அடர்த்தி, அழுத்தம், சோனகருடைய சீதனவுடம்படிக்கை, புத்தகத் தினட்டை
கடுத்தலூசி - கற்றூளைக்குங்கருவி
கடுத்தலை - வாள்

கடுத்தல் - உவமையாதல், ஐயம், ஓரெறும்பு, ஓர் மீன், கோபம், கோபித்தல், சினம், விருவிருத்தல், வேகம்
கடுத்தி - நாயுருவி
கடுத்திரயம் - திரிகடுகம்
கடுநடை - நடைச்சுருக்கு
கடுநிம்பம் - நிலவேம்பு
கடுநீர் - மதி, மேகம்
கடுந்தது - கடந்தது, கடினமுடையது
கடுந்தரை - வன்னிலம்
கடுந்தழற்பூமி - உழமண்
கடுந்தி - நாயுருவி
கடுந்திலாதணம் - அமரியுப்பு
கடுந்தோயல் - ஆயுதங்களையறக்காய்ச்சித் தோய்வது
கடுபத்திரம் - சுக்கு
கடுபி - வாலுழுவை
கடுப்ப - உவமைச்சொல்
கடுப்படக்கி - எருமுட்டைப்பீநாறி
கடுப்பிறக்கல் - அகங்காரத்தை யகற்றல்
கடுப்பு - ஊமத்தை, அகங்காரம், எரிவு, கடுநோய், குற்று, கொதிப்பு, சினம், வேகம்
கடுப்புச்சூடு - வற்றச்சூடு
கடுப்புமரம்-எண்ணெயூற்று மிடுக்கு மரம்
கடுப்பூ - ஊமத்தை, கடுக்காய்வேர்
கடுப்பெடுத்தல் - கடுப்பிறக்கல்
கடுப்பை - வெண்கடுகு
கடுமஞ்சரிகை - நாயுருவி
கடுமரம் - எட்டிமரம், கடுக்காய் மரம், நச்சுமரம்
கடுமலை - காரீயமலை
கடுமழை - பெருமழை, கனத்தமழை
கடுமன் - கடுமை
கடுமா - புலி
கடுமாவிலங்கு - கடுக்காய், முள்ளிகசப்பு, மிளகு
கடுமான்கோதை - சேரமான் குட்டுவன் கோதை
கடுமுடுக்கல் } விரைவு, வில்லங்கம்
கடுமுடுக்கு }
கடுமுடுத்தல் - விரைதல்
கடுமுடெனல் - ஒலிக்குறிப்பு
கடுமுள்-ஆயுதப்பொது, கண்டங்கத்திரி, நச்சுமுள்
கடுமுறவு - மிகுநேசம்
கடுமூர்க்கம் - மிகுகோபம்
கடுமை - அகோரம், கடினம், கண்டிப்பு, குரூரம், கொடுமை, கோபம், வன்மை,

சீக்கிரம், மிகுதி, முறைப்பு, மூர்க்கம், விரைவு
கடும்பகல் - மத்தியானம்
கடும்பச்சை - நாகபச்சை
கடும்பலம் - இஞ்சி, கருணைக்கிழங்கு
கடும்பால் - ஈன்றணிமைப்பால்
கடும்பு - உறவு, சும்மாடு, சுற்றம், பாற்கடும்பு முதலியன
கடும்பை - வெண்கடுகு
கடுரம் - மோர்
கடுரவம் - தவளை
கடுரோகணி / கடுரோணி } ஓர் மருந்து
கடுவங்கம் - இஞ்சி, வேர்க்கொம்பு
கடுவட்டி - அநீதவட்டி
கடுவல் - கடுங்காற்று, கடுநிலம்
கடுவழி - அந்தரவழி, அருமையான வழி
கடுவளி - பெருங்காற்று
கடுவன்-குரங்கு, நாய், பூனை, முசு, இவற்றினாண், மரவிலங்கு, விலங்கேற்றின் பொது
கடுவாயன் - கழுதை, பாம்பு
கடுவாய் - ஓர் புலி, நாய், புலிக்குடத்தி
கடுவான் - ஓர் கரப்பன்
கடுவிதித்தம் - கடுகுரோகிணி
கடுவெளி - நிழலற்றவெளி, வெறுவெளி
கடூரம் - கொடுமை
கடேந்திரநாதர் - ஓர் சித்தர்
கடேரம் - நோய், முகில்
கடேரன் - நோயாளி
கடேரியம் - மரமஞ்சள்
கடை-அங்காடி, இடம் எழனுருபு [உ-ம்] அவன் கடைச்சென்றான், கடையென்னேவல், கதவு, கீழ், பக்கம், புறவாயில், பூணின் கடைப்புணர்வு, பெண்குறி, முடிவு, வழி, வாயில், வினையெச்சவிகுதி
கடைகழிமகளிர் - பொதுமகளிர்
கடைகள் - இழிந்தோர்
கடைகாப்பாளர் - வாயில்காவலாளர்
கடைகால் - பால்கறக்கும் மூங்கிற்குழல் பின்கோக்கியினேருறுப்பு, பின்னணை
கடைகாவலர் - வாயில் காப்போன்
கடைகெட்டவன் - கீழ்மகன்
கடைகேடு - மிகவிழிபு
கடைகோல் - தீக்கடைகோல்
கடைக்கட்டு - முடிப்பு
கடைக்கணித்தல் - கடாட்சஞ்செய்தல், கடைக்கண்ணாற் பார்த்தல், புறக்கணித்தல்
கடைக்கண் - கடாட்சம், கண்ணின்கடை
கடைக்கருவி - உடுக்கை
கடைக்கனல் - வடவாக்கினி
கடைக்காப்பு-பதிகத்தின்கடைசிப்பாட்டு
கடைக்கால் - தறுவாய், அஸ்திவாரம்
கடைக்குடர் - கீழ்க்குடர்
கடைக்குட்டி - கடைசிப்பிள்ளை
கடைக்குளம் - உத்திராடநாள்
கடைக்குறை - ஈறு குறைந்து நிற்குஞ் சொல்
கடைக்கூட்டல் - அனுபவத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தல், செய்வினைப் பயனை யனுபவிப்பது, முடித்தல்
கடைக்கூழை - ஓர் தொடை, படைப் பின்னணி
கடைக்கூழைமுரண் - ஓரடியின் முதற் சீர்க்கணின்றி யேனைச்சீர்க்கண்முரண் வருவது
கடைக்கூழைமோனை - முதற்சீர்க்கணின்றியேனைச்சீர்க்கண் மோனைவருவது
கடைக்கூழையளபெடை - முதற் சீர்க்கணின்றி யேனைச்சீர்க்கணளபெடை வருவது
கடைக்கூழையியைபு - ஓரடியின் கடைச்சீர்க்கணின்றி யேனைச்சீர்க்கணியைபு வருவது
கடைக்கூழையெதுகை-ஓரடியின் முதற் சீர்க்கணின்றி யேனைச் சீர்க்கணெதுகை வருவது
கடைக்கொள்ளல் - உறுதியாகக் கொள்ளல்
கடைக்கொள்ளி - குற்றங்கொள்ளி
கடைக்கோடி - அறக்கடைசி
கடைசல் - கடைதல்
கடைசாரம் - காரியத்தின்முடி, முடிவு
கடைசாரி - கடைகெட்டவள்
கடைசார் - காரியம், பின்னணை, முடிவு
கடைசால் - பின்னணை, முடிவு
கடைசி - கடைப்பெண், முடிவு
கடைசியர் - மருதநிலப்பெண்கள்
கடைசோரி - அப்பக்கடை
கடைச்சங்கம்-புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர் அடங்கிய மதுரையிலிருந்த பிற்சங்கம்

கடைச்சரக்கு - கறிக்குஞ்சரக்கு, பலசரக்கு
கடைச்சல் - கடைதல்
கடைச்சல்மரம் - கடையுமரம்
கடைச்சற்காரர் - ஓர் சாதியார்
கடைச்சன் - இளையமகன், கடைப்பிள்ளை
கடைச்சி - இளையமகள், கடைப்பெண், நெட்டி, மருதநிலத்துப்பெண்
கடைச்சித்தாழை - பறங்கித்தாழை
கடைஞர் - மருதநிலமக்கள், இழிந்தோர்
கடைதடம் - வாயில்
கடைதலைப்பூட்டு - விற்பூட்டுப் பொருள்கோள்
கடைதலைவிற்பூட்டு - பூட்டு விற்பொருள்கோள், பேச்சிற் கொளுவிப்பிடித்தல்
கடைதல் - கலக்குதல், குடைதல், தயிர் கடைதல், தயிர் சிலுப்புதல், மரம், உலோகம் முதலியவைகளிலே சில சேர்க்கைவடிவப் பொருள்களைச்செய்தல்
கடைதிறப்பு - கதவு திறத்தலைக் குறித்த ஓர் பிரபந்தம்
கடைத்தடம் - வாயில்
கடைத்தரம் - கீழ்த்தரம்
கடைத்தலை, கடைத்தலைவாயில், கடைத்தலைவாய்தல் - முதல்வாயில்
கடைத்தெரு - கடைவீதி
கடைத்தேறல், கடைத்தேறுதல் - ஈடேறுதல், உய்தல்
கடைத்தேற்றம் - ஈடேற்றம்
கடைநாள் - இரேவதி, இறக்கும் நாள்
கடைநிலை - ஈற்றெழுத்து, ஓர்பிரபந்தம், அஃது சான்றோர் எம்வரவினைத் தலைவற் குரையெனக் கடைகாவலர்க்குக் கடைக்கண்ணின்று கூறுவது, புறவாயில்
கடைநிலைத்தீபகம், கடைநிலைத்தீபம், கடைநிலைத்தீவகம் - ஓர் பயனிலை, அது இறுதிநிலை விளக்கம்
கடைநிலையெழுத்து - இறுதிநிலை
கடைபட்டவன் - இழிந்தவன்
கடைபட்டது - இழிந்தது
கடைபோதல் - நிறைவேறல், முடித்தல்
கடைப்படல், கடைப்படுதல் - இழிவாதல், நிறைவேறல், மிகவிழிவாதல், முடிதல்
கடைப்படுதானம் - அதமதானம், அது அச்சம், ஆர்வம், கடைப்பாடு, கண்ணோட்டம், காரணம், கைம்மாறு, புகழ் முதலியவை, இலவுகீக காரணமாகக் கொடுக்குங்கொடை
கடைப்பந்தி - கடைசிப்பந்தி
கடைப்பாடு - இழிவு, தீர்மானிப்பு
கடைப்பிடி - உறுதி, கரும முடிக்குந் துணிவு, அஃது ஆடூஉக் குணம் நான்கி னொன்று, ஞாபகம், தேற்றம், மறவாமை, சித்தாந்தம்
கடைப்பிடித்தல் - உறுதியாய்ப்பிடித்தல், தெளிவாயறிதல், மறவாதிருத்தல்
கடைப்பிடிப்பு - உறுதியாய்ப்பிடிக்கை
கடைப்பிறப்பு - கீழ்ப்பிறப்பு
கடைப்புணர்முரண் - கடைமுரண்
கடைப்புணர்வு - ஆபரணக்கடைப்பூட்டு
கடைப்புத்தி - இழிந்தபுத்தி, பின்புத்தி
கடைப்புளி - கருமமுடிக்குந்துணிவு, தேற்றம், மறவாமை
கடைப்பூட்டு - பின்கோக்கி
கடைப்போதல் - நிறைவேறல்
கடைமடக்கு - நான்கடியினீறும் பல பொருள் ஒரு சொல்லான் முடியுங்கவி
கடைமரம் - கடையுந்தறி
கடைமீன் - இரேவதிநாள்
கடைமுகம் - தலைவாயில், வாயில், இடம்
கடைமுரண் - செய்யுளுறுப்பி னொன்று அது அடிதோறு மிறுதிச்சீர்மறுதலைப் பட்டு வருவது
கடைமுறை - கடைசிமுறை
கடைமை - கீழ்மை
கடைமோனை - நான்கடியினீறு மோரடியின் முடியுங்கவி
கடையம் - இந்திராணிகூத்து, கடகம்
கடையயல் - ஈற்றயல்
கடையர் - ஓர் சாதி, சுண்ணும்புக்காரர், மருதநிலத்தவர், இழிந்தோர்
கடையழிதல் - கஷ்டப்படல், குன்றல், கெடுதல், கேடுறல், தேய்தல், வருந்தல்
கடையழித்தல் - தேய்த்தல், மிகக்கெடுத்தல்
கடையளபெடை - செய்யு ளுறுப்பி னொன்று, அடியினிறுதிக் கண்ணளபெடை பயிலுவது
கடையனல் - ஊழித்தீ
கடையன் - இழிந்தோன்
கடையாகுமோனை - இடையாகுமோனை முரணிவருவது

கடையர்கெதுகை - அடிகடோறு முதற் சீரினீற்றசையொன்றி வருவது
கடையாட்டம் - உலைவு, மிகுந்தகஷ்டம், வருத்தம்
கடையாணி - அருகாணி, பூட்டாணி
கடையாந்தரம் - முடிவு
கடையாயர் - கடையர்
கடையால் - ஓர்சலபாத்திரம், கடைசால், தோணியின் பின்புறம்
கடையிணைமுரண் - ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணு முரண்வருவது
கடையிணைமோனை - ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணுமோனை வருவது
கடையிணையளபெடை - ஓரடியின்கடையிரு சீர்க்கண்ணு மளபெடைவருவது
கடையிணையியைபு - ஓரடியின் முதலிரு சீர்க்கண்ணுமியைபு வருவது
கடையிணையெதுகை - ஓரடியின் கடையிரு சீர்க்கண்ணுமெதுகை வருவது
கடையியைபு - அடிதோறு முதற்சீர்க் கண்ணியைபு வருவது
கடையீடு - இழிந்தது
கடையுணி - கீழ்மகன்
கடையுண்ணல் - வருத்தப்படல்
கடையுவா - பௌர்ணை
கடையெதுகை - அடிதோறுமிறுதிக் கண்ணெதுகை வருவது
கடையெழுஞ்சனி - உத்திரநாள்
கடைவளர்தல் - ஈனுங்காலத்திற்குறிவிரிதல்
கடைவள்ளல் - பலமுறையுங்கேட்க மறுத்துக் கொடுப்பவன்
கடைவாசல், கடைவாயில் } தலைவாய்தல்
கடைவாய் - வாயருகு
கடைவாய்நக்கி - உலோபி
கடைவால் - கடைசிவால்
கடைவு - கடைதல்
கடோரம் - கடினம், கொடுமை, வயிரம்
கடோரன் - கடுமையானவன்
கடோற்கசன் - வீமசேனன் மகன்
கடோற்காதித்தன் - பன்னிரு சூரியருள் ஒருவன்
கட்கட்டி, கட்கண்டு } இமையிற்கட்டி
கட்கத்தம்பம் - கலைஞான மறுபத்து நான்கினொன்று, அஃது வெட்டுருமற் கொடுக்கும் வித்தை
கட்கம் - வாள், ஓர் மிருகம்
கட்கராடம் - பரிசை
கட்காகாதம் - வாளேறு
கட்காதாரம் - வாளுறை
கட்சம் - மந்திரசாத்திரம், சங்கபாஷாணம், தந்திரவிதி, நவக்கிரககட்ச மென்னுமோர் நூல்
கட்சாந்தரம் - அந்தப்புரம்
கட்சி - காடு, சரீரம், பக்கம், பங்கு, பறவைக்கூடு, மனிதர் படுக்கை, வழி, புகலிடம்
கட்செவி - பாம்பு
கட்டகம் - காந்தக்கல்
கட்டகாலம், கஷ்டகாலம் } கிரகந் தீங்கான காலம், பஞ்சங்கோதாரியுள்ள காலம்
கட்டக்கடுமை - அதிககடுமை
கட்டங்கம், கட்டங்கு } தண்டு, பொல்லு, மாத்திரைக்கோல், மழுவாயுதம்
கட்டசாத்தியம் - கடுமெசாத்தியம்
கட்டசிவி - ஆயற்காரன், துறைகாவற்காரன்
கட்டணம் - தகைப்பு, கட்டுந்தொகை
கட்டதரம், கஷ்டதரம் } மிகுந்த கொடுமை
கட்டநாவி - எழுத்தாணிப் பூண்டு
கட்டபாரை - கடப்பாரை
கட்டப்படுதல் - சம்பந்தத்திற் குள்ளாதல், பிணிக்கப்படுதல், வருத்தப்படுதல்
கட்டம் - கஷ்டம், காடு, தாடி, துறைமுகம்
கஷ்டம் - துன்பம், மலம், மிகுவருத்தம்
கட்டரம் - சேறு
கட்டல் - உடுத்தல், கட்டுதல், தடை, திருடல், தோண்டல், பருக்கொள்ளல், பிடுங்குதல், மூடல், மெய்ப்பரிச மெட்டினொன்று
கட்டவர் - களைந்தவர்
கட்டவிழ்தல் - முறுக்கவிழ்தல்
கட்டழகு - அலங்காரம், பேரழகு
கட்டழல் - நெருப்பு
கட்டழிதல் - நெறிதப்புதல்
கட்டழித்தல் - நெறியழித்தல், முற்றுமழித்தல், காவலளித்தல்
கட்டளை - அளவு, உத்தரவு, உருவங்கள் வார்க்குங்கருவி, உரைகல், உவமை, ஒழுங்கு, கற்பனை, செங்கலச்சு, தடை, துலாராசி, நிறை, நிறையறிகருவி, முறை

கட்டளைக்கலித்துறை - கலித்துறையி னோர்பேதம், முதற்சீர்நான்கும் வெண் டளை பிழையாது நிற்பக் கடையொரு சீரும் விளங்காயாகி வருவது
கட்டளைக்கலிப்பா - கலிப்பாவினோர் பே தம், அது முதற்கண்மாச்சீர் பெற்று நாற்சீரான் வருவ தரையடியாகவும் அஃதிரட்டிகொண்ட தோரடியாகவும் மவ்வடி நான்குகொண்டு வருவது
கட்டளைக்கல் - உரைகல், படிக்கல்
கட்டளைக்கோல் } நியாயப் பிரமா
கட்டளைச்சட்டம் } ணம்
கட்டனன் - குள்ளன்
கட்டாகட்டிமை - மிகுந்தகட்டிமை
கட்டாக்காலி - கட்டுக்ககப்படாதகாலி
கட்டாசம் - நாவிமிருகம்
கட்டாஞ்சி - முள்வேல்
கட்டாடி - குறிசொல்வோன், வண்ணாரிற் றலைவன், வண்ணான்
கட்டாணி - உலோபி, கடைப்பூட்டாணி, சமர்த்தாளி, தூர்த்தன், பலசாலி, பேரா சைக்காரன்
கட்டாண்மை - பேராண்மை
கட்டாந்தரை - கடுந்தரை, வெறுந்தரை
கட்டாம்பாரை - ஓர் மீன்
கட்டாயம் - கடுமை, கட்டுப்பாடு, நெருக் கிடை, பலாத்காரம், வெறுப்பு
கட்டாரம் - குற்றுவாள்
கட்டாரி - எழுத்தாணிப்பூடு, குற்றுவாள், சூலம்
கட்டாரிக்குத்துணி - ஓர் புடவை
கட்டாரிக்கையொலி - ஓர் பட்டுச்சீலை
கட்டார்ச்சிதம் } வருந்தித் தேடின
கஷ்டார்ஜ்ஜிதம் } தேட்டம்
கட்டி - அகமகிழ்ச்சி, இடப்பு, ஓர் புள், கருப்பிண்டம், கருப்புக்கட்டி முதலி யன, சருக்கரை, திரண்டமாத்திரளை, பாடை, சிரத்தை, பொன், பரு, பிளவை
கட்டிக்கொள்ளுதல் - அடிப்படுத்துதல்
கட்டிபடுதல் - கட்டியாதல்
கட்டிமுட்டி - பெரிதுஞ்சிறிதுமான கட்டி
கட்டிமை - கட்டுப்பாடு, பிசுனத்தனம்
கட்டியகாரர் } புகழ்வோர்
கட்டியக்காரர் }
கட்டியங்காரன் - சச்சந்தன் மந்திரி, இவ னேசச்சந்தனைக் கொன்றுவிட்டு இரா சமாபுர ராச்சியத்தைக் கவர்ந்தவன்
கட்டியங்கூறல் - எழுச்சிகூறல், புகழ்கூறல்
கட்டியப்பொல்லு - எழுச்சி கூறுவோர் பிடிக்குந்தண்டு
கட்டியம் - ஓர்கூத்து, புகழ்ந்துபேசல்
கட்டியாரம் - இறுக்கம், கடுமை, நெருக் கிடை
கட்டில் - மஞ்சம்
கட்டிவிழுதல் - கட்டியாதல், கருவழிந்து விழுதல்
கட்டிளமை - மிக்கிளமை
கட்டு - அரண், ஆணை, உறுதி, ஓர்வகைக் குறி, கட்டென்னேவல், காவல், கிளை, குறி, சம்பந்தம், சிலந்திப்பரு, தளை, பொய், மலைப்பக்கம், மிகுதி, மூட்டை, வரம்பு
கட்டுக்கதை - பொய்க்கதை
கட்டுக்கலியாணம் - பாணிக்கிரகணம்
கட்டுக்கழுத்தி - மங்கிலியதாரணி
கட்டுக்காடை - ஓர் பறவை
கட்டுக்காரன் - குறிசொல்வோன்
கட்டுக்காவல் - கடுங்காவல்
கட்டுக்கிடை } வெகுநாளாய்க் கிடக்
கட்டுக்கிடையன் } கிற சரக்கு
கட்டுக்குத்தகை - ஏகதேசமாய் விற்குங் குத்தகை
கட்டுக்கூட்டு - எழுத்துமாறி யெழுதல், ஒன்றாய்க்கூடல், கட்டுக்கதை, பொய் யான தொடுப்பு
கட்டுக்கொடி - ஓர் பூண்டு, காலிகட்டுங் கயிறு
கட்டுக்கோப்பு - கட்டடம்
கட்டுச்சூலை - சூலைக்கட்டு
கட்டுச்சொல் - பொய்
கட்டுச்சோறு - ஆற்றுணா, வழிக்கு உணவு
கட்டுடைத்தல் - அணையுடைத்தல்
கட்டுண்ணல் - கட்டுப்படுதல்
கட்டுண்ணி - அடிக்கடி கட்டுப்பட்டது
கட்டுதல் - அடக்குதல், இறுகுதல், சம் பந்தப்படுதல், சுவர் முதலிய வெழுப் புதல், தடைசெய்யல், தழுவுதல், பிணி த்தல், விவாகம் பண்ணுதல், வீடு முத லிய தொடுத்தல், பிடுங்குதல், கதைகட் டல்
கட்டுத்தறி - யானைமுதலிய கட்டுந்தூண்
கட்டுத்திரவியம் - கிழிக்கட்டுப்பொன்
கட்டுத்தேர் - கட்டியெழுப்புந்தேர்
கட்டுத்தையல் - ஓர்வகைத் தையல்
கட்டுத்தோணி - தெப்பம்

கட்டுப்படல் } அடங்குதல், அமைதல்,
கட்டுப்படுதல் } தங்குதல், தடைபடுதல்
கட்டுப்படுத்துதல் - அடக்கிக் கொள்ளுதல், எல்லைப்படுத்துதல், கீழமையப் பண்ணுதல்
கட்டுப்பாடு - இணக்கம், கட்சி, பந்தம்
கட்டுப்பூட்டு - ஆபரணம்
கட்டுப்பெட்டி - ஓர்வகைப் பெட்டி
கட்டுப்பேச்சு - வீண்கதை
கட்டுமலை - செய்குன்று
கட்டுமட்டு - அச்சறுக்கை, அடக்கம், அளவாய் நடத்தல்
கட்டுமரம் - மிதவை
கட்டுமாமரம் - ஒட்டுமாமரம், ஓர் வகை மாமரம்
கட்டுமுகனை - அச்சறுக்கை, அதிகாரம், கண்டிப்பு, சிக்கனம், தடை, மேல் விசாரணை
கட்டுமுறித்தல் - கட்டுடைத்தல், நியமம் மீறுதல்
கட்டுமை - கட்டுப்பாடு
கட்டுரசம் - ஜாதிலிங்கம்
கட்டுரை - உறுதிச்சொல், ஏற்றசொல், பழமொழி, பொய், பொருளுள்ள சொல், புனைந்துரை
கட்டுரைத்தல்-உறுதிப்படச் சொல்லுதல்
கட்டுவடம் - மணிமாலை
கட்டுவம் - ஓர் காலணி
கட்டுவர்க்கம் - பலவித உடை
கட்டுவன் - கட்டுவம்
கட்டுவாங்கம் - தண்டு, மழு
கட்டுவிசேடம் - கட்டுக்கதை
கட்டுவிடல் } அவிழ்தல், இந்திரிய
கட்டுவிடுதல் } மோசனம், உடைத்தல், உருகுதல், பலவீனமாதல்
கட்டுவிட்டுப்பாய்தல் - கட்டுடைத்துப் பெருகல்
கட்டுவிரியன் - ஓர் பாம்பு
கட்டுவை - கட்டில்
கட்டூண்மாக்கள் - களவுகண்டுண்ணு மூணையுடைய மாக்கள்
கட்டூர் - பாசறை
கட்டெறும்பு - ஓரெறும்பு
கட்டை - உடல், குறைவு, திப்பி, தேய்ந்தது, நீளங்குறைந்தது, பிரேதம், மரக்கட்டை, விறகு
கட்டைக்கருத்து - மந்தக்கருத்து
கட்டைக்காலி - கரடி
கட்டைக்குரல் - அமர்ந்தகுரல்
கட்டைக்குருத்து - பொத்திக்குருத்து
கட்டைப்புத்தி - தடிப்புத்தி, மந்தப்புத்தி
கட்டையன் - குறளன், குள்ளன்
கட்டைவாக்கு - அரதனத்தின் மங்கலொளி
கட்டைவிரல் - காலின்பெருவிரல்
கட்டைவைத்தல் - ஓர்விளையாட்டு
கட்டோசை - பேரொலி
கட்டோடே - முற்றாக
கட்பலம் - தான்றி
கட்பவர் - களைபவர்
கட்பு - களைபறித்தல்
கட்புலன் - நேத்திரேந்திரியம்
கட்போர் - களவுசெய்வோர்
கட்வாங்கம் - மழு
கணகணத்தல் } உரத்தசூடு, ஒலிக்கு
கணகணப்பு } றிப்பு
கணகம் - படையிலோர்தொகை, அஃது குமுதம் மூன்றுகொண்டது
கணகன் - கணிதன்
கணக்கதிகாரம் - கணக்குநூல்
கணக்கன் - எழுத்துக்காரன், ஓர் சாதியான், சண்பகமரம், கணக்குப் பார்க்கிறவன், புதன்
கணக்காசாரம் - கணிக்குமொழுங்கு
கணக்காயர் - அறிஞர், ஓத்துரைப்போர், பொருந்தச்சொல்வோர், உபாத்தியாயர், ஓதுவிப்போர்
கணக்காய்ச்சல் - கணரோகம்
கணக்கு-எண், எழுத்து, காரியம், மட்டு, முடிவு, கருத்து, அளவு தன்மை
கணக்குவகை - சங்கலிதம் என்னும்தொகை, பாகாரம் என்னும் பிரிவு, குணனம் என்னும் பெருக்கு, விவகலிதம் என்னும் கழிவு
கணக்கோலை - கணக்கேடு, தளிரோலை
கணங்கள் - பூதங்கள்
கணத்திரவியம் - பொதுத்திரவியம்
கணநாதர் } கணதிபர், சிவபெரு
கணநாயகர் } மான்
கணபங்கம் - கணம்தோறும் தோன்றி எழுதல்
கணபதி - விநாயகன்
கணபன் - கணநாதன்
கணப்பறை - ஒருவகைத்தோற்கருவி
கணப்பு - சூடு, தீச்சட்டி

கணப்பூண்டு - ஓர் பூண்டு
கணப்பொருத்தம் - செய்யுட்பொருத்தத் தொன்று, விவாகதசப் பொருத்தத் தொன்று
கணப்பொழுது - நொடிநேரம்
கணமூலம் - திப்பிலிவேர்
கணமூலி - சாணக்கி, திப்பிலி
கணம் - ஓர்நோய், ஓர்புல், காலநுட்பம், குறைவு, கூட்டம், சிறுமை, கீரிலக் கணம், திப்பிலி, திரட்சி, தீப்பொறி, நான்குநிமிஷம் அல்லது முப்பது கலை கொண்ட கால அளவு, நீர்த்துளி, பதி னெட்டென்னும் ஓர் இலக்கம், பிசா சம், மாத்திரைவட்டம்,வருக்கம்,விண் மீன், விலங்கின் கூட்டம்
கணம்புல் - வாசனைப்புல்
கணம்புல்லர்-அறுபத்துமூவரி லொருவர்
கணரோகம் - ஓர்நோய்
கணவம் - அரசமரம்
கணவர் - கொழுநர், பூதவீரர்
கணவன்-அதிபன், காந்தன், கொழுநன்
கணவாய்-ஓர்மீன், மலைகளுக் கிடைவழி, மலைமேற்பாதை
கணவீரம் - அலரி
கணனம் - எண்ணல்
கணாசலம் - கைலை
கணாதன் - ஒருமுனிவன்
கணாதிபன்-கணநாயகன், சிவன், விநாய கன்
கணாதி - வெண்சீரகச்செடி
கணாரிடுதல் - ஒலிக்குறிப்பு
கணி-ஓர்சாதி, கணிப்போன், கணியென் னேவல், கூத்தாடுந்தொழில், மருத நிலம், மூங்கில், வேங்கைமரம், சோதி டன்
கணிகம் - நூறுகோடி, கணப்பொழுது, கணப்பொழுதுமாத்திரம் நிற்பது
கணிகன் - திருதராட்டிரனுடைய பிர தான மந்திரி
கணிகை - தாசி, முல்லை, வேசி
கணிசம் - அதிகம், அளவு, கணிக்கத்தக் கது, கனம், சங்கை, மதிப்பு
கணிச்சி - உளி, கோடரி, தறிகை, நமனா யுதம், மழு, முட்கோல், வெற்றிலை, மூக்கரிகத்தி, தோட்டி
கணிதசாஸ்திரம்-ககோளநூல், கணக்கு நூல்
கணிதசிந்தாமணி - ஓர் சோதிடநூல்
கணிததீபிகை - ஓர் சோதிடநூல்
கணிதம்-எண், எண்ணிக்கை, கலைஞான மறுபத்து நான்கினொன்று அஃது சோதிடநூல்
கணிதர் - கணக்கறிந்தோர், கணக்கெழு துவோர், சோதிடர்
கணிதன் - சத்துரு
கணித்தல் - அளவுகுறித்தல், எண்ணல், மதித்தல்
கணிப்பு - கணித்தல்
கணிமம் - பிரேங்கணம்
கணியன்பூங்குன்றனார் - புறநானூறு பா டிய புலவரு ளொருவர்
கணியான் - கூத்தாடி
கணீரிடுதல் - ஒலிக்குறிப்பு
கணீர்கணீரெனல் - ஈரடுக்கொலிக் குறி ப்பு
கணீல் - ஒலிக்குறிப்பு
கணையம் - ஓர்வாத்தியம், தண்டாயுதம்
கணையல் - அம்பு எய்தல்
கணு - கவர், மரத்தின்முளி, மூட்டு, மூங் கில்
கணுக்கால் - பரடு, கணைக்கால்
கணுக்கிரந்தி - ஓர் மேகநோய்
கணுப்பாலை - ஓர்பாலை
கணுவட்டு - சிறுவாழைக்குலை
கணுவை - ஓர்வாத்தியம்
கணேசன் - சிவன், விநாயகன்
கணேரம் - மலைப்புளிச்சைச்செடி
கணை - அம்பு, ஒலி, ஓர்நோய், கரும்பு, சிவிகைமேல் வம்பு, திப்பிலி, திரட்சி, நிறைவு, பூரநாள், வளைதடி
கணைக்கால் - முழந்தாளின் கீழ்க்கால்
கணையம் - அம்பு, காவற்காடு, பொன், போர், யானைக்கம்பம், வளைதடி
கணையாழி - மோதிரம்
கணையுலக்கை - பூணில்லாவுலக்கை
கணையோகவணி - வியாயோகம்
கண்-இடம், ஏழனுருபு [உ-ம்] எண்கண், ஓர்விகுதி [உ-ம்] வண்கண், ஓலைக் கண், கணு, கண்ணென்னேவல், கண் ணோட்டம், குழி, துவாரம், தேங்காய் முதலிய முளைக்குமிடம், நுங்குக்கண், மூங்கில், விழி, அஃது பஞ்ச பொறியி னொன்று, அறிவு, அல்லி, மூங்கில்
கண்கட்டி - கட்கட்டி

கண்கட்டு - திருட்டித்தம்பனம்
கண்கட்டுவித்தை - ஒரு காருடவித்தை
கண்கலத்தல் - எதிர்ப்படுதல்
கண்கழு - முளைவெளிக்க முன்விடும்நீர்
கண்காசம் - ஓர் நோய்
கண்காட்சி - அதிசயம், கண்ணுக்குச் சிறப்பு, பார்வை
கண்காட்டல்-கண்ணினுற் குறிப்புக்காட்டல்
கண்காந்தல் - கண்ணெரிவு
கண்காணம் - மேல்விசாரிப்பு
கண்காணி - அத்தியட்சர், சிரேஷ்டாதிகாரி, மேல்விசாரிப்புக்காரன்
கண்காணித்தல்-மேல்விசாரணைசெய்தல்
கண்காரர் - அஞ்சனம்பார்ப்போர், குறிப்பறியத்தக்கவர்கள்
கண்குத்திப்பாம்பு - ஓர் பாம்பு
கண்குவளை - கண்குழி
கண்குளிர்தல் - பார்வைக்குத் திருத்தியாயிருத்தல்
கண்குறிப்பு - பார்வையா லறிதல்
கண்கூடு - கண்குவளை, காட்சியளவை, பிரத்தியட்சம்
கண்கூடல் - கூடுதல், நெருங்குதல்
கண்கூர்மை - பார்வைநுட்பம்
கண்கூலி - கண்டதற்காகக் கொடுப்பது
கண்கையில் - தாய்க்கையில்
கண்கொழுப்பு - அகங்காரம்
கண்கொள்ளாக்காட்சி- அடங்காதகாட்சி
கண்கொத்திப்பாம்பு-கண்குத்திப் பாம்பு
கண்சமிக்கை - கண்சயிக்கை
கண்சயிக்கினை - கண்சாடை
கண்சாடை - அறிந்து மறியார் போன்றிருத்தல், கண்ணுல் குறிப்பித்தல்
கண்சாய்தல் - அறிவு தளருதல்
கண்சாய்த்தல் - பதனழிதல், வாடல்
கண்சாய்ப்பு - கண்சாடை
கண்சிமிட்டல்-கண்ணுலே குறிப்புக்காட்டல்
கண்சைகை - கண்சாடை
கண்டகசங்கம் - முட்சங்கு
கண்டகதுவாரம் - முட்டொளை
கண்டகபலம் - பலாப்பழம்
கண்டகம் - உடைவாள், ஊசிமுனை, கம்மாலை, காடு, தடை, நீர்முள்ளி, புளகம், முள், வயிரம், வாள், தயைதாட்சண்யமில்லாதவன்
கண்டகர் - அசுரர், கீழ்மக்கள், துட்டர்
கண்டகாசனம் - ஒட்டகம்
கண்டகி-காசிக்கருகிலுள்ள ஓர்நதி, முள்ளெலும்பு, தாழை, பொல்லாதவள், இலர்தை
கண்டகிக்கல், கண்டகிச்சிலை - சாலக்கிராமம்
கண்டகூணிகை - வீணை
கண்டகோடரி, கண்டகோடாலி - ஓர்வகைக்கோடாலி, மழு
கண்டக்கரப்பன் - ஓர்நோய்
கண்டக்கருவி - மிடறு
கண்டக்காறை-கழுத்திடுகொறை, பொன்னிறம்
கண்டக்கிரந்தி - ஓர்நோய்
கண்டங்கத்திரி - ஓர் வழுதுணை, அஃது சிறு பஞ்சமூலத்தொன்று, தசமூலத்துமொன்று
கண்டங்கருவிலி - ஓர் பாம்பு
கண்டங்காலி - கண்டங்கத்திரி
கண்டசரம் - கழுத்திலணியுமோர் பணி
கண்டசருக்கரை - ஓர்வகைச் சருக்கரை
கண்டசித்தி - ஆசுகவி, கண்டகாரியத்திற்குப் பாட்டுச்சொல்ல வல்லபம்
கண்டசூலை - ஓர்நோய்
கண்டதிப்பிலி - வங்காளத்திப்பிலி
கண்டதுண்டம் - பலதுண்டம்
கண்டத்தலம் - கழுத்து
கண்டஸ்நானம் - கழுத்துவரையும் குளித்தல்
கண்டநாளம் - மிடறு
கண்டந்திறத்தல் - தொண்டைதிறத்தல்
கண்டபலி - ஞாழல்
கண்டபவம்-ஒருவகைக்கிடம், அது கடித்தால் கடித்தவாயிற் பல கொப்புளங்களுண்டாகி அதிலெரிவுந் தினவு முண்டாகும்
கண்டபித்தரோகணி - ஒருவகைநோய், அது கழுத்திற்குப் புறத்தில் மூங்கிற்புறத்தைப்போல் துர்மாமிசத்தைப் பிறப்பிப்பது, அதனுல் அவ்விடத்ததி நோவோடு புகைகம்மியதுபோ விருத்தல், மேலே தொடக்கூடாத வுபத்திரவம், சுரம், காங்கை, தாகம், சோதலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது
கண்டபூர்த்தி - கண்டமளவு, நிறைவு
கண்டபேரண்டபட்சி - இருதலைப்புட்சி

கண்டபுற்று - ஒருநோய்
கண்டமணி - கண்டாமணி
கண்டமண்டலம் - குறைவட்டம்
கண்டமாலை - கழுத்தைச்சுற்றிவரும் ஒரு நோய்
கண்டம் - எல்லை, எழுத்தாணி, கண்ட சருக்கரை, கண்டை, கவசம், கழுத்து, கள்ளி, குன்றிவேர், கைப்பிடிவாள், சாதிலிங்கம், சிறுவாள், தத்து, திரைச் சீலை, துண்டம், நாடு, நித்தியயோகத் தொன்று, நீர்க்குமிழி, பங்கு, படையினோர்தொகை, மணி, மணியுள்ளோசை, யானைக்கச்சை, யானைக்கழுத்து, வெல்லம்
கண்டரத்தரோகணி - ஒருவகைநோய், அது கண்டத்திற் குட்புறத்தில் தூர் மாமிசத்தைப் பிறப்பித்து அதிற் கரி நெருப்பையொத்த கொப்பளங்களை நிறைப்பிப்பது, அதனுற் காதுக்குள் நோவும், பித்தரோகணி நோயினது குணங்களு முண்டாகும்
கண்டராதித்தர் - திருவிசைப்பாப் பாடினோர் ஒன்பதின்மரு ளொருவர் இவர் உறையூரிலிருந் தரசுபுரிந்த சோழரு ளொருவர்
கண்டரை-இருதயத்தின் ஜடரங்கள் என்னும் கீழறைகள் இரண்டில் வலத்தி லிருந்து உற்பத்தியாகும் பெருநாடி யென்னும் பெரிய குழல்
கண்டர் - துருசு
கண்டலம் - முள்ளி
கண்டல் - ஒருமரம், தாழை, நீர்முள்ளி
கண்டவாதரோகணி - ஒருவகை நோய், அது கழுத்திற்கு உட்புறத்தில் தூர்மாமிச மூளைகளை மூளைப்பித்து அம்மார்க்கத்தை யடைந்து நாவையாட வொட்டாமற் செய்வது அதனுல் நெஞ்சும் வாயுமுலர்தல், கண்டத்திலுஞ் செவியிலும் நோதலென்னும் இக்குணங்களுண்டாகும்
கண்டறியாதவன் - முன்னனுபவித்தறியாதவன்
கண்டறை - கற்புழை, மலைக்குகை
கண்டற்குயம் - தாழை, மூலை
கண்டனம் - உறல், கண்டனை, பொலிதூற்றல்
கண்டனை - தள்ளுதல், நிராகரித்தல்
கண்டன் - எசமான், சோழன், நாயகன், வீரன்
கண்டன்று - கண்டது
கண்டாகண்டன் - ஒரு விஷ்ணுபத்தன்
கண்டாகர்ணன் - குபேரன் கிங்கரனுகிய ஒரு பிசாசபதி, ஸ்ரீ கிருஷ்ணனொரு சமயத்தில் வதரிவனத்தில், யோகத்தி லிருந்தபோது இக்கிங்கரனவரை வழிபட்டுப் பிசாசரூபம் நீங்கப்பெற்றான்
கண்டாகனன்-ஒரு சிவபத்தனுன வசுரன் இவன் விஷ்ணுவினமம் காதிற்படா வண்ணம் செவிகளின்மணியை யணிந்துகொண்டுதிரிந்து முடிவில் விஷ்ணுவாலேயே வைகுந்தப் பதவியடைந்தவன்
கண்டாக்கிரி - பட்சி
கண்டாங்கி - ஒரு புடவை
கண்டாசுரன் - கண்டாகனன்
கண்டாஞ்சி - முள்வேல்
கண்டாபதம் - இராசமார்க்கம்
கண்டாபலம் - பலாமரம்
கண்டாமணி - மிக்கோசையுள்ளமணி, கண்டை, வீரக்கழல்
கண்டாயம் - கடவை, துவாரம், வழி
கண்டாரம் - இருவீரர்போர்
கண்டாரவம் - ஓரிசை, மணியினோசை
கண்டாலசி-ஒருவகைநோய் அது தாடையிலெவ்விதத்திலாவது நீங்காதவீக்கத்தைப் பிறப்பிப்பது அதனுற் சுரமுந் தாகமுமுண்டாகும்
கண்டாலம் - ஒட்டகம், பாரை, யுத்தம்
கண்டாலி - வெள்ளெருக்கு
கண்டாவிழ்தம் - ஒருபெரிய மருந்து
கண்டாளம்-எருதின்மேற்போடு மூட்டை
கண்டாற்புதம்-ஒருவகைநோய், அதுகண்டத்திற் பிறந்த விரணவிவேகங் கபாலத்தி லடிபடுவதாற் பிறப்பது அதனுலங்கிருக்குங் கபமாகிய கோழைச்சலங் கறுத்தாவது வெளுத்தாவது நாசிவழியாலேனுந் தொண்டை வழியாலேனு மாறுது விழுந்துகொண்டே யிருப்பது
கண்டி - இலங்கையில் ஓரூர், ஓரளபு, ஓராபரணம், கடவை, சிறுகீரை, மீன் பிடிக்க வடைக்கும் பிரிவு
கண்டிகம் - ஒருவிதத்தானியம்
கண்டிகை-உருத்திராட்சம், கடகம், கைக்குழி, தோளணி, நிலப்பிரிவு, பணிச் செப்பு, பதக்கம், மாதரணி வடம்

குதிரைமறி-குதிரைக்குட்டி, பெண்குதி
குதிரைமார்க்கம்-குதிரை செல்வழி [ரை
குதிரைமுகம் - நளகம்
குதிரையங்கபடி - குதிரை யேறும்படி
குதிரையாளி - வைரவன்
குதிரையிலக்கணம் - குதிரையின் சுழி முதலிய வுறுப்புக்கள்
குதிரையேறல் - தோற்றோர் மேலேறல், பரிமேலேறல்
குதிரையேற்றம் - குதிரையேறும் பயிற்சி
குதிரைலாயம் - குதிரைப்பந்தி
குதிரைவலி - ஓர்நோய்
குதிரைவாய்க்கருவி - கடிவாளம்
குதிரைவாய்வடம் - குசைக்கயிறு
குதிரைவாலி - ஓர்சாமை, ஓர்புல்
குதிரைவாலிச்சம்பா - ஓர் நெல்
குதிரைவாலிச்சாமை - ஓர் தானியம்
குதிரைவையாளிவீசி - புரவிவட்டம்
குதிர்-கூடு, நெல் முதலியவைக்குங்கூடு
குதிர்தல் } செவ்வைப்படுதல்
குதிர்படுதல் }
குதிவாதம் - ஓர் நோய்
குதுகம் } விருப்பம்
குதுகலம் }
குதுகுலம் } குதூகலம்
குதுகலம் }
குதுகுலித்தல் - மிகுகளி கொள்ளல்
குதுகுலிப்பு - மயிர்ச்சிலிர்ப்பு, மிகுமகிழ்ச்சி
குதுபம் - தினத்தி னெட்டாவது முகூர்த்தகாலம், வாசற்படி
குதும்பகர் - தும்பை
குதுவை - அடைவு, ஈடு
குதூகலம் - விருப்பம், சந்தோஷம்
குதூகலித்தல் - சந்தோஷித்தல்
குதூணகம் - கண்ணோயி னொன்று
குதை - பசி, பணிப்பூட்டு, பாசி, மூலை, விற்குதை, அம்பின் குதை
குதைமணி - சட்டைத்தெறி
குத்தகை - மதித்துக்கொள்ளல், மதியத்துக்கு விற்றல்
குத்தகைகாரன் - மதியத்துக்கு வாங்கின [வன்
குத்தகைவேலை - பெருத்தவேலை
குத்தம் - இரட்சித்தல்
குத்தரசம் - பெருங்காயம்
குத்தல்-அடித்தல், உரோசம்வரப்பேசல், உறைக்கச்சொல்லல், ஒருவர் சொன்ன சொற்றைத்தல், குத்துதல், இஃது நால்வகை யூறுபாட்டினொன்று, மெய்ப் பரிச மெட்டினுமொன்று, சிறுகவார்த்தல், நெரித்தல், புதைத்தல், வாயுமுதலிய வடைதல்
குத்தலம் - முக்குருந்து
குத்தாலம் - காட்டாத்தி
குத்தாலா - கடுகுரோகணி
குத்தி-அடக்கம், குற்றி, சிறுகுடுவைமண்
குத்திக்கொல்லர் - பண அஞ்சற்காரர்
குத்திடுதல்-குத்தியள்ளுதல், நிறுதிட்டம்
குத்திப்பேசல் - உரோசம்வரப் பேசல், உறைக்கப்பேசல்
குத்திரம் - குரூரம், சணல், சீக்கிரம், சுடுசொல், பொய், மலை, வஞ்சகம்
குத்திரன் - வஞ்சகன்
குத்து - உலக்கைமுதலியவற்றாற் குற்றல், குத்தென்னேவல், கையைப் புதைத் தள்ளல், சணல், தைத்தல், நிறுதிட்டமானது, நேர், வாயுக்குத்து
குத்துகோல் } முட்கோல்
குத்துக்கோல் }
குத்துக்கரணம் - ஓர் விளையாட்டு
குத்துக்கரந்தை - ஓர் கரந்தை
குத்துக்கல் -நிறுட்டமாய்
குத்துக்காரை - ஓர்காரை
குத்துக்கால் - தேரினிறுத்துங் கால்கள், நிறுதிட்டமாய் நிற்குங்கால்
குத்துக்காற்சம்மட்டி - ஓர் மரம்
குத்துக்காற்பயறு - ஓர் பயறு
குத்துக்குளம்பு-குத்தெனநிற்கு[ங்குளம்பு]
குத்துக்கோரை - ஓர் கோரை
குத்துச்செடி-நிலம்பற்றிப் படராத செடி
குத்துணி - ஓர் புடவை, தழுக்குணி
குத்துதல் - குத்தல்
குத்துத்திராய் - ஓர் கீரை
குத்துப்பகன்றை - ஓர் செடி
குத்துப்பயளி - ஓர் கீரை
குத்துப்பன்னீர் - ஓர் மரம்
குத்துப்புள் - புள்ளடித்தலிலோர்வகை
குத்துப்போர் - நிறுதிட்டமாய்வைக்குஞ்சூடு
குத்துவாய் - கடிவாய்
குத்துவாள் - சுரிகை
குத்துவிளக்கு - ஓர் விளக்கு
குத்தூசி - ஓர் கருவி
குத்தென - நேரே
குநீதி - துன்னீதி, நீதிகேடன்

குந்தகம் / குந்தக்கம் } குழப்பம், கோள், தடை
குந்தமம் - பூனை
குந்தம் - ஈட்டி, ஓர்நிதி, பாஷாணம், கண்ணோய், குதிரை, குபேரன், நவநிதியிலொன்று, குருந்தமரம், கைவேல், சிறுசவளம், சூலம், நான்கு பலம், நோய், பெருஞ்சவளம், அலரிமரம்
குந்தரைத்தல் - வீணுயிருத்தல்
குந்தலிக்கம் - வெள்ளைப்போளம்
குந்தளம் - தேயமைம்பத்தாறினொன்று, பெண்மயிர், மயிர்க்குழற்சி, மயிர்ப்பொது
குந்தளை-தைலபாத்திரம்வைக்குங் கருவி
குந்தனம் - மணியழுத்தல்
குந்தா - கப்பலின் பிற்பக்கம், துப்பாக்கியின் அடி
குந்தாணி - குந்தநோய், பருவுரல், நெற்குத்துங் கருவி
குந்தாணிப்பீரங்கி - ஓர் பீரங்கி
குந்தாலம் - ஓர் புள்
குந்தாலி - கொந்தாலி, கணிச்சி, கிணறு தோண்டுங் கருவி
குந்தாலித்தல் - களித்துக் குதித்தல்
குந்தாளம் - மண்வாருங் கருவி
குந்தாளித்தல் / குந்தாளிப்பு } குந்தாலித்தல்
குந்தாள் - குந்தாளம்
குந்தி - ஓர் சீட்டு, கள், பாண்டவர் தாய், ஒரு சிட்டுக்குருவி
குந்திக்குந்திநடத்தல்-இருநிலைவாய் நடத்தல், குந்துகால் வைத்து வைத்து நடத்தல்
குந்திநடத்தல் - காலை மெல்ல தூக்கிவைத்து நடத்தல்
குந்திநிற்றல் - குஞ்சித்தல்
குந்தியடித்தல் - ஓர் விளையாட்டு
குந்திரம் - ஓர் புள்
குந்திரிகம் / குந்திருக்கம் } குங்கிலியம்
குந்து - ஒட்டுத்திண்ணை, குந்துதல், குந்தென்னேவல், திண்ணையருகு, தும்பு
குந்துகாலி - அடிப்பலமற்றமரம், கிந்தி நடப்பவள்
குந்துகாலினிற்றல் - படங்குந்தி நிற்றல், விரைவைக் காட்டி நிற்றல்
குந்துதல் - கிந்துதல், குந்தியிருத்தல்
குந்துத்தடி - குந்தெடுக்கு, மலக்குத்தடி
குந்துரு / குந்துருக்கம் } ஓர் சரக்கு, ஓர் மரம், குங்கிலியம்
குந்தெடுத்தல் - தும்பெடுத்தல்
குபங்கம் - அருவருத்த சோறு
குபசுபா - காஞ்சிரை
குபதம் - துன்னடை, பாழ்வழி, தீநடை
குபதர் - தீநெறியோர்
குபலம் - நட்டம், பலவீனம்
குபாணி - கோணற்கையன்
குபாதன் - செவ்வையாய் நடக்க வறியாதவன்
குபிதம் - கோத்தல், கோபம்
குபிதன் - கோபி
குபிதாந்தகம் - துன்மரணம்
குபிலன் - அரசன்
குபினர் - வலைஞர்
குபினி - வலை
குபீரிடுதல் - இரத்த முதலிய விரைந்து பாய்தற் குறிப்பு
குபீர்குபீரெனல்-ஈரடுக்கொலிக் குறிப்பு
குபுத்திரன் - இழிகுல புத்திரன், துற்புத்திரன்
குபுருஷன் - துட்டன்
குபேரகம் - சின்னி
குபேரசைலம் - கைலைமலை
குபேரன் - சந்திரன், தனதன், வடக்கு, வடதிசைப்பாலன்
குபேரிகை - வட்டத்திருப்பி
குபேராட்சி - கொடிப்புன்கு, பாதிரி
குபையம் - சிறுபுள்ளடி
குபோதகி - வசலை
குப்பக்காடு - காட்டிலுள்ள கிராமம்
குப்பம் - கிராமம், குப்பல், திடர், கடற்கரையூர்
குப்பலை - குப்பளை
குப்பல் - குவியல், கூட்டம்
குப்பளை - ஓர் செடி
குப்பக்காடு - நாட்டுப்புறம்
குப்பாமணி - குப்பைமேனி
குப்பாயசம் - சரீரம்
குப்பாயம் - சட்டை, மேற்போர்வை
குப்பி - ஓர் பாண்டம், மாதர் தலையணியினொன்று, வீணையின்முறுக்காணி, சீசா
குப்பிக்குட்சமைந்தகன்னி - பஞ்சபட்சி பாஷாணம்
குப்பிடுக்கடுக்கன் - ஓர் வகைக் கடுக்கன்
குப்பிசாரம் - காசிசாரம்

குப்பிச்சரக்கு - பதங்கவைப்பு
குப்பிமா - மாக்கல்லு
குப்பியசாலை-பித்தளைப் பாத்திரஞ் செய்யுமிடம்
குப்பியம் - பொன் வெள்ளி தவிர்ந்த லோகம்
குப்பிலவணம் - வளையலுப்பு
குப்பிவைப்பு - குப்பியில் வைத்துச் செய்யுஞ் சரக்கு
குப்புக்குப்பெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு
குப்புக்கிரதன் - ஒழுக்கங்குன்றிய பார்ப்பான்
குப்புஜம் - புங்காக்காய்
குப்புழாய் } ஓர் செடி
குப்புழை }
குப்புறக்கிடத்தல் - அதோமுகமாய்க்கிடத்தல், முகங் கீழாகக் கிடத்தல்
குப்புறல் - கடத்தல், குதித்தல், பாய்தல், மடிதல்
குப்புறவிழுதல்-முகந்தரை நோக்க விழுதல் [ப்பு
குப்பெனல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக் குறி
குப்பை-கஞ்சல், குவிவு, கூட்டம், மேடு, சதகுப்பை
குப்பைக்கீரை - முட்கீரை
குப்பைச்சி - குதலைக்கேடுள்ளவன்
குப்பைப்பருத்தி - உப்பம்பருத்தி
குப்பைமேனி - ஓர் பூடு
குப்பையன் - குதலைக்கேடுள்ளவன்
குப்பைவாரி - ஓர் கருவி, விளக்குமாறு
குமஞ்சம் } ஓர் சாம்பிராணி
குமஞ்சான் }
குமடு - கன்னம்
குமணன் - ஒரு கொடையாளி, ஒரு சிற்றரசன், அவன் ஒரு தமிழ்க் கலைவிநோதன்
குமட்டல் - தெவிட்டல், குமட்டுதல்
குமட்டி - ஓர் சுரைக்கொடி
குமட்டு - ஓக்காளம், நிறைவு, வயிற்றுப் புரட்டு
குமட்டுதல்-அருவருத்தல், குடலைப் புரட்டல், தேக்கெடுத்தல்
குமட்டூர்க்கண்ணனார் - பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தினைப் பாடிய புலவர்
குமண்டையிடுதல்-நிறைந்து தெவிட்டல்
* குமதி - துன்மதி, புத்திகேடன்
குமரகண்டம் - ஓர் வலி
குமரகண்டன்-ஒருபேய், குமரகண்டவலி
குமரகுருபரர் - வேளாண் குலத்துதித்த ஒரு புலவர்
குமரகோட்டம்-காஞ்சீபுரத்தில் ஒரு சுப்பிரமணிய ஸ்தலம்
குமரகம் - மாவிலிங்கு
குமரதானம் - எழுத்துத்தான மைந்தினுென்று
குமரம் - ஓரிலக்கணநூல், கொம்பிலா விலங்கு
குமரன் - ஆண்மகன், இளையோன், பதினறுவயசுமுதல் முப்பத்திரண்டு வயசுக்குட்பட்டவன், மகன், முருகன், வயிரவன்
குமரி - அழிவின்மை, அழுகண்ணி, ஓர் கண்டம், கற்றாழை, கன்னி, காணி, சத்த நதிகளி னொன்று, சத்தமாதர் களிலொருத்தி, சத்திசாரணை, பருவமுடையவள், புதல்வி, மகள், ஒருநதி, துர்க்கை, உமாதேவி
குமரிகண்டம் - நவகண்டத்தொன்று
குமரிக்கோடு - ஓர்மலை
குமரிச்சேர்ப்பன் - பாண்டியன்
குமரிஞாழல் - ஓர்பூடு
குமரியிருட்டு - விடியற்குமுன் உள்ள இருள்
குமர்-கன்னியழியாமை, விவாகமில்லாத பெண்
குமல் - அரிவாள்
குமளம்பாசு - சூரைமீன்
குமாரகன் - குமரன்
குமாரதந்திரம் - ஓர் நூல்
குமாரத்தி - இராசாவின் மகள், புத்திரி
குமாரபாலன் - சாலிவாகநன்
குமாரம் - ஓட்வைத்த பொன், இளமை
குமாரவாகனன் - மயில்
குமாரக்கடவுள் } முருகன்
குமாரசுவாமி }
குமாரசம்பவம் - காளிதாசரியற்றிய ஒரு நூல்
குமாரவிருத்தியை - பிள்ளைப் பரிகாரம் பண்ணும்பெண், மருத்துவிச்சி
குமாரன்-இராசபுத்திரன், குமரன், மகன், முருகன், வாலிபன்
குமாரி - குமாரிகை, சுவர்ணபேதி, துர்க்கை, மகள், ஒரு நதி
குமாரிகை - பத்துவயசுதுவக்கிப் பன்னிரண்டு வயசுப்பெண்
குமாரை - ஓர்நதி

குமாலகம் - சவ்வீரதேசம்
குமிகை-இளவெள், எள்ளு, வெள்ளெள்
குமிடக்கல் - கிட்டகல்
குமிட்கல்லு - கற்கிட்டம்
குமிட்டித்தல் - திரளுதல்
குமிட்டிப்பு - திரட்சி
குமிட்டில் - ஓர்கீரை
குமிட்டு - குவியல்
குமிதம் } தேக்கமரம்
குமிதிகம் }
குமித்தல் - குவித்தல், மிகக்குத்தல்
குமிலம் - பேரொலி
குமிழாணி - வட்டவடிவான தலையை யுடைய ஆணி
குமிழி-குமிழ்ப்புவடிவுள்ளது, நீர்க்குமிழி
குமிழிக்கொள்ளுதல் - கொப்புள் வடிவு படக்கிளர்தல்
குமிழித்தல் - குமிழிக்கொள்ளுதல், கொப்பளித்தல்
குமிழ் - உள்ளங்காற்கட்டி, எருத்துத்திமில், ஓர்மரம், குமிழி, குமிழ்ப்பு, நாணல், திரண்டவடிவம்
குமிழ்ப்பு - புடைப்பு, புளகம்
குமிழ்வண்டு - குடைவண்டு
குமிள - ஓர்மரம், குமிழ்
குமிளம் - அரும்பு
குமிளி - குமிழி
குமிறல் - குமுறல்
குமீர்குமீரெனல்-ஈரடுக்கொலிக் குறிப்பு
குமுகம் - பன்றி
குமுகுமுத்தல் } மிகுமணக்குறிப்பு
குமுகுமெனல் }
குமுக்கு - உதவி, திரட்சி, தொகை
குமுங்கல் - மசிதல்
குமுணன்-முதலெழு வள்ளலிலொருவன்
குமுதகம் - ஓர் சித்திரக்கம்பி
குமுதசகாயன் }
குமுதநண்பன் } சந்திரன்
குமுதபதி }
குமுதபாந்தவம் - கர்ப்பூரம்
குமுதபாந்தவன் - சந்திரன்
குமுதம் - அடுப்பு, ஆம்பல், கருப்பூரம், கற்பாஷாணம், குமுதகம், கூட்டம், செவ்வாம்பல், தருப்பை, தென்மேற்றிசையானை, படையிலோர் தொகை அஃது சேனுமுகம் மூன்று கொண்டது, பேரொலி, வக்கிராந்த பாஷாணம், வெள்ளாம்பல், வெள்ளி, வெள்ளைப்பாஷாணம்

குமுதன் - குரங்குப் படைத்தலைவரிலொருவன்
குமுதாட்சன் - ஓர் பிதிர்தேவதை
குமுதாதாரம் - வாயுலோகம்
குமுதிகை - பூசினி
குமுதிசை - ஓர் வாசனைமரம்
குமுதிரி-குவளைத்தடாகம், குவளைப்பூத்திரள்
குமுதேசன் - சந்திரன்
குமுதை - ஓர்பூடு, ஓர்மரம்
குமுந்தம் - கற்பாஷாணம்
குமுரம் - சித்திரக்கம்பி
குமுலி - துளசி
குமுறல் } அதிர்த்தல், ஒலித்தல், கிளர்தல், கொதித்தல், பேசலாலெழுமொலி, பேரொலி, முழக்கம்
குமுறுதல் }
குமேரு - தென்முனை
குமைஞ்சான் - குமஞ்சான்
குமைதல்-அழிதல், குழைதல், புழுங்கல்
குமைத்தல் - அழித்தல், குழையப்பண்ணல், துவைத்தல்
குமையல் - குழைவானது, குழைவு
குமைவு - அழிவு, குழைவு
குமோதகன் - விட்டுணு
கும்பகம் - கற்றுழை, சாலாங்கபாஷாணம், தொட்டிபாஷாணம், பிராணயாமத்தொன்று, அஃது கும்பித்தல்
கும்பகலசம்-சடங்குஸ்தாபன குடகலசம்
கும்பகன்னன் - இராவணன் றம்பி
கும்பகாமாலை - பித்தகாமாலை
கும்பகாம்போதி - ஓர்பண்
கும்பகாரகன் } குயவன்
கும்பகாரன் }
கும்பகாரி - கண்ணிடுமை, குசத்தி, செம்பாஷாணம்
கும்பகாரிகை-கண்ணிடுமருந்து, குசத்தி
கும்பகோணம் - ஓர் பட்டினம், மோசம்
கும்பசந்தி - யானைக் கும்பத்தலத்திடையுள்ளவிடம்
கும்பசம்பவன் - அகத்தியன், துரோணசாரியன், வசிட்டன்
கும்பசரம்-சிவதை
கும்பசலம் - பூசாகும்பநீர்
கும்பசன்-அகத்தியன், துரோணசாரியன்
கும்பசாலை - குசக்கலம் வனையுமிடம்
கும்பஞ்சரிதல் - கழுத்துமடிதல்
கும்பஞ்சான் - சிவதை
கும்பஞ்செய்தல்-குவித்தல், பிரேத மடக்கல்

கும்பதாசி - சங்கஞதி, வேசி
கும்பதாபனம் } தேவர்க்குத் தாபன
கும்பஸ்தாபனம் } மாகக் கும்பம்வைத்தல் [சு
கும்பதெட்சணை - கும்பத்திற் போடுங்கா
கும்பநிறுத்தல்-கும்பஸ்தானம் பண்ணல்
கும்பப்பிளவை-கும்பத்திற் பிளவைக்கட்
கும்பமுனி - அகத்தியன் [டு
கும்பம்-ஓரிராசி, ஓர் பாஷாணம், குடம், குவியல், சிவதை, தோண்மேல், நெற்றி, யானைமத்தகம்
கும்பம்வைத்தல் - கும்பதானம் பண்ணல்
கும்பயோனி-அகத்தியன், துரோணுசாரியன், வசிட்டன்
கும்பல் - கும்புதல், குவியல், கூட்டம்
கும்பவத்திரம் - கும்பத்துக்குச் சாத்தும் வத்திரம்
கும்பவாதம் - ஓர் வாதநோய்
கும்பவிம்மம் - தொட்டி பாஷாணம்
கும்பளமோசு - சூரைமீன்
கும்பளம் - பூசுணி
கும்பளா - ஓர்மீன்
கும்பன் - ஓரிராக்கதன், தூர்த்தன், அகஸ்தியன்
கும்பா - ஓர் பாத்திரம்
கும்பாகுடம் - கும்பம் வைக்கிறகுடம்
கும்பாபிஷேகம்-தூபிவைத்தல், விக்கிரகதாபனம்
கும்பாரம் - அம்பாரம், கும்பம்
கும்பி - கும்பராசி, கும்பியென்னேவல், குவியல், சிவதை, சுடுசோம்பல், சேறு, தாலம்பபாஷாணம், நகரம், நெருப்பு, நெற்றி, பலண்டுறுகம், மண்பாத்திரம், யானை, வயிறு
கும்பிடரி-கமக்காரனிடத்து வெளிப்பாடு கொண்டுபோகு மரிவி
கும்பிடல் - கைகூப்பல், வணங்கல்
கும்பிடு - வணங்குகை
கும்பிடுகிளிஞ்சல் - ஓர் சிளிஞ்சல்
கும்பிடுசெட்டி - தீச்சட்டி
கும்பிடுதல் - கும்பிடல்
கும்பிடுபூச்சி - ஓர் பூச்சி
கும்பிட்டுக்கட்டுதல்-தழுவிக்கொள்ளுதல்
கும்பித்தல் - பிராணவாயுவைச் சமப்படுத்தி யடக்கல்
கும்பியாகம் - ஓர் நகரம்
கும்பிமதம் - யானைமதம்

கும்பியழித்தல் - ஓர் விளையாட்டு
கும்பிலன் - திருடன், மைத்துனன்
கும்பீடு - வணக்கம்
கும்பீநசம் - பெரும்பாம்பு
கும்பீநசி - இராவணன் சிற்றுய்
கும்பீரம் } முதலை
கும்பீலம் }
கும்பு - கூட்டம்
கும்புதல் - அடிப்பற்றுதல்
கும்பை - ஓர்வாழை, குடம், கும்பகோணம், பூசாவேதிகை, வேசி
கும்மட்டம் - ஓர் வாத்தியம், கோவிலின் தூபி, வளைவு, விளக்கேற்றக் காகிதமுதலியவற்றுற் கட்டுங்கூடு
கும்மட்டி - ஓர்கூத்து, ஓர் வாத்தியம், கும்பிடுசட்டி
கும்மட்டிக்காய்-ஆற்றுத் தும்மட்டிக்காய்
கும்மலி - தடித்தவள்
கும்மல் - அடித்தல், அரிவாள், கும்முதல்
கும்மாயம் - குழம்பு, சுண்ணும்பு, ஒருவகைச் சிற்றுண்டி
கும்மாளங்கொட்டுதல் - குதித்துகையொடுகை தட்டல்
கும்மாளம் } குதியன், மகிழ்ச்சியாற் குதித்தல்
கும்மாளி }
கும்மி - ஓர் பிரபந்தம், மகளிர்கூத்து
கும்மிப்பாட்டு - மகளிர் பாடலிஞென்று
கும்முதல் - கும்புதல், அடித்தல்
கும்மெனல் - இருட்குறிப்பு
குயக்கலம் - மண்பாண்டம்
குயவன் - குசவன்
குயக்காலம் - நிலக்கடம்பு
குயத்தினலகை - நிலவாகை
குயபீசகம் - எட்டிமரம்
குயமயக்கு - குழம்பு
குயம் - இளமை, கொடுவாள், தருப்பை, [முலை
குயவரி - புலி
குயவர் - கும்பக்காரர்
குயவிரிவு - மண்பாண்டங்களின்பொரிவு
குயவு - தேர்
குயா - கோங்குமரம்
குயித்தல் - செய்தல்
குயிலல்-இழைத்தல், செய்தல், சொல்லல்
குயிலன் - தேவேந்திரன்
குயிலாயம் - சுவரறை, பறவைக்கூடு, மட்கலம் வனையுங்கூடம்

குயிலுதல் - அழுத்துதல், அழைக்குதல், உண்டாக்கல், உயருதல், ஊடுருவுதல், ஒலித்தல், கட்டுதல், கூப்பிடுதல்,செய்தல், சொல்லுதல், துளைத்தல், தைத்தல், நெருங்குதல், பின்னல்
குயிலுவம்-சூத்திரராறுதொழிலினொன்று, இது தோற்கருவிகளைக் கொட்டலும் துளைக்கருவிகளை யூதலும் நரம்புக்கருவியை யிசைத்தலும்
குயிலுவர் - தோல்வினைஞர், நரம்புக்கருவிக்குரியோர்
குயில் - இசைக்குழல்,ஓர்புள், குயிலென்னேவல், சொல், துளை, துளையுடைப்பொருள், முகில்
குயில்மொழி - குயின்மொழி
குயிறல் - அழைத்தல், செய்தல்,சொல்லுதல், துளைத்தல், நெருங்கல் [கம்
குயிற்கண்மணி-சௌகாந்திரப் பதுமராகம்
குயிற்றல் - செய்தல், சொல்லுதல், பதித்தல்
குயினர் - துளையிடுவார்
குயின் - மேகம்
குயின்மொழி-அதிமதுரம், குயிலின்குரல்
குயுத்தி - நிந்தை, பரிகாசச்சொல், மனநிமிர்ச்சி, துர்ப்புத்தி
குய் - சாம்பிராணிப்புகை, தாளித்தகறி, நறும்புகை
குய்யகர் - தேவசாதியினோர்பேதம்
குய்யதீபகம் - மின்மினி
குய்யபாஷிதம் - மந்திரம்
குய்யபீசகம் - எட்டிமரம்
குய்யம்-அபானவாயில், ஆண்குறி, பெண்குறி, பொய், மறைவு, வஞ்சகம்
குரகதம் - குதிரை, குதிரைப்பற் பாஷாணம்
குரகம்-நாகணவாய்ப்புள், நீர்வாழ்பறவை
குரகர் - சாகதீவார்
குரக்கன் - கேழ்வரகு
குரக்கு - குரங்கு
குரங்ககம் - மான்
குரங்கநாபி - கஸ்தூரி
குரங்கம் - எட்டிமரம், மான், விலங்கின்பொது, வாடாகுறிஞ்சி
குரங்கல் - தாழ்தல்
குரங்கன்சுறா - ஓர்மீன்
குரங்கி - சந்திரன்
குரங்கு - குரங்கென்னேவல்,கொளுக்கி, தொடை, மந்தி, முசுமுசுக்கை, விலங்கின்பொது
குரங்குகடியன்-பழுதுற்றதேங்காய், முகிழ்முடி சுருங்கினகாய் [கை
குரங்குச்சேட்டை - குணங்கெட்ட செய்கை
குரங்குதல்-இணங்குதல்,குரங்கல்,வணங்குதல், வளைதல், தாழ்தல்
குரங்குப்பிடி - விடாது பிடித்தல்
குரங்குமுடி - ஓர்வகைமுடி
குரங்குவலி - ஓர்நோய்
குரங்குவாற்பூட்டு - கதவின் பூட்டுகளிளொன்று
குரங்குகளை - சுருண்ட பிடர்மயிர்
குரச்சை - குதிரைக்குளம்பு
குரஞ்சி - ஓர்பண்
குரடன் - சக்கிலியன்
குரணம் - முயற்சி
குரண்டகம்-பச்சைப்பூவுள மருதோன்றிமரம், பொன்மை கலந்த சிவப்பு
குரண்டநாசி } பருத்திச்செடி
குரண்டநாசிநி } பருத்திச்செடி
குரண்டகம் - கொக்கு
குரத்தம் - ஆரவாரம்
குரத்தி - ஐயை, குருவின்மனைவி, தலைவி
குரப்பம் - குதிரைமயிர் கோதுஞ்சீப்பு
குரமடம் - பெருங்காயம்
குரம் - ஒலி,குதிரைக்குளம்பு, தருப்பை, பசு, பாகல், விலங்கின்குளம்பு
குரம்பு - செய்கரை, வரம்பு
குரம்பை - உடல், சிறுகுடில், பறவைக்கூடு, முட்டை, நெறிகூடு, வீடு
குரரி - பெண்ணாடு
குரலம் - நெற்றியிலசையுஞ் சுரிமயிர்
குரலீனம் - கழுதை
குரலெடுத்தல் - பெருங்குரலெடுத்தல்
குரல் - இரகு,இன்னிசை, ஏழிசையினொன்று, ஒலி, ஓசை, கதிர், தினை,பாதிரிமரம்,பெண்மயிர், மயிர்ச்சுருள்,மிடறு, மிடற்றுற் பிறக்குமிசை, யாழ்நரம்பினோசை, யாழ்நரம்பு,பூங்கொத்து,கூந்தல், தோகை
குரல்கொடுத்தல் - சத்தங்காட்டுதல்
குரல்வளை - மிடறு
குரவகம் - செம்பூவுள்ள மருதோன்றிமரம், வாடாக்குறிஞ்சி
குரவம் - ஓர்மரம், கோட்டம்,நறுமணம்,
குரவாம் - குறிஞ்சா [பேரீந்து
குரவர் - அரசர், உவாத்தி, குரு,தந்தை, மூத்தோர்

குரவளை - குரல்வளை
குரவன்-அரசன், உவாத்தி, குரு, தந்தை, பிரமன், மந்திரி, முற்பிதா, மூத்தோன், இறைவன்
குரவு-குராமரம், நறுமணம், குருத்தன்மை
குரவுநிறவணி - கோவரங்கப்பதுமராகம்
குரவை-ஒளி, ஓர்மீன், கடல், கூத்து, கைகோத்தாடல், பெருஞ்சத்தம்
குரவையிடுதல் - கூப்பிடுதல், சத்தஞ்செய்தல்
குரண்டம் - பச்சைப்பூவுள்ள மருதோன்றி, குறிஞ்சி
குரற்காட்டுதல் - அழைத்தல், சத்தங்காட்டல்
குரா - குரவுமரம்
குராசானி - ஓர்பூடு
குரால் - கபிலநிறம், கோட்டான், பசு
குரிகிற்ருளி - ஓர்கிழங்கு
குரிசில் - ஆண்மகன், இராசா, பெருமையிற் சிறந்தோன், தலைவன்
குரீஇ - புள்
குரு - அங்கீதிரன் புதல்வரி லொருவன், ஆசான், இருமாத்திரை, இரும்பு, செம்பு ஈயமுதலிய வுலோகங்களைப் பொன் வெள்ளியாகப்பேதிக்குஞ் சிந்தூரம், உவாத்தி, ஓரரசன், காத்திரம், காலதசப்பிரமாணத்தொன்று, அஃது இலகு இரண்டு கொண்டது, சுத்தசலம், சோறு, துருசி, தேசமைம்பத்தாறினொன்று, நிமிடமறுபத்துநான்கு கொண்டது, நிறம், பாரம், பிதா, பிரகாசம், பெருமை, மேன்மை, வகுரி, வருத்தம், வியாழம், வேர்க்குரு
குருகடாட்சம் - குருவின் கிருபை
குருகு-இளமை, உலைமூக்கு, குருக்கத்தி, கொய்யடிநாரை, கைவளை, கோழி, தேசமைம்பத்தாறி னொன்று, நாரை, நீர்ப்பறவை, பறவைப் பொது, மூலநாள், யானையின்மூளை, வட்டுக்குட் குருத்து, வெண்மை, வலைத்துருத்தி, கோழி, சேவல், அன்னம், கொக்கு, முருக்கு
குருகுமணல், குருகுமண் - வெண்மணல்
குருகுலம் - பலண்டுறுகப் பாஷாணம், பாரதர்குலம், குருவிடம்
குருகுலவேந்தர் - கௌரவர்
குருகூர், குருகை - ஆழ்வார்திருநகரி
குருமல்லி - குடசப்பாலை
குருக்கண் - குருட்டுக்கண், மூலை
குருக்கத்தி - ஓர்மரம்
குருக்கன் - உருக்கன்
குருக்கிரமம் - கன்ன பாரம்பரியமாய் வழங்குவது
குருக்கு - இக்கிரி, பிரமதண்டுச் செடி, வடலிமுதலியன நெருங்கியதோப்பு
குருக்குத்தி - ஓர் முட்செடி, நெல்லைச் சடைவிக்கும் வியாதி
குருக்கேத்திரம் - ஓர்தலம்
குருக்கொடுத்தல் - ஊவிடல், கொடுமை செய்யத்தூண்டல், புத்தி சொல்லுதல்
குருக்கொள்ளுதல் - புத்திமுதிர்ச்சி காட்டல்
குருசம் - வெங்தோன்றி
குருசந்தானம் - குருவமிசம்
குருசந்திரயோகம் - வியாழனுஞ் சந்திரனுங் கூடியிருக்கும் யோகம்
குருசாரபலன் - வியாழகெதியின்பலம்
குருசூரியன் - வயிரமணி
குருசேடம் - குருப்பிரசாதம்
குருசேவை - குருவுக்குப்பணிசெய்தல்
குருச்சனன் - சங்கைமான், தலைவன்
குருச்சந்திரயோகம் - கடகம், மகரம் இலக்கினமாக இருந்து வியாழனுஞ்சந்திரனுங்கூடி இலக்கினத்திலாவது யேழிலாவது இருக்கும் யோகம்
குருச்சி - சீனக்காரம்
குருடன் - கண்ணில்லாதவன், சுக்கிரன், திருதராட்டிரன்
குருடி - குருட்டுப் பெண்
குருடு-அறிவின்மை, உறுப்புக்குறை யெட்டினொன்று, அஃது பார்வையின்மை, விளக்கமற்றது
குருட்டடி - எழுந்தமானம்
குருட்டாட்டம் - அறியாமை, குருட்டுத்தனம்
குருட்டை - ஓரிலையான்
குருட்டுக்கல் - நிறமற்றகல்
குருட்டுச்சாயம் - நிறமற்றசாயம்
குருட்டுத்தனம் - குருட்டாட்டம்
குருட்டுப்பத்தி - அறியாமையானபத்தி
குருட்டுமை - எழுத்து விளங்காதமை
குருட்டுமுத்து - ஒளியற்ற முத்து
குருட்டுவாக்கு - அறியாதவிதமாய் வந்த செய்கை
குருட்டுவெளவால் - ஓர் வவ்வால்

குருட்டெழுத்து - அக்கர சுத்தமில்லாத வெழுத்து
குருணி - ஒரு மரக்காலளவுள்ளது
குருதக்கணை } குருவுக்குக் கொடுக்குந்
குருதக்கிணை } தட்சணை
குருதற்பகன் } குருவின் பன்னியைக்கற்
குருதற்பி } பழித்தோன்
குருதி - இரத்தம், சிவப்பு, செவ்வாய், மூளை
குருது - கிருதம், குதிர்
குருத்தல்-குருப்பித்தல், பெருங்கோபம்
குருத்து - இளமை, மர முதலியவற்றின் குருத்து, விலங்கின்கொம்புக்குருத்து, வெண்மை, மூளை
குருத்துக்கக்குதல்-குருத்துவருதல், பயிரின் குருத்துத்தெறித்தல்
குருத்துரோகம்-பஞ்சபாதகத்தொன்று
குருத்துவம் - குருதத்துவம், மகத்துவம், கனமுடைமை
குருத்துவிடுதல் } குருத்து வைத்தல்
குருத்துவீசுதல் }
குருத்தெறிதல் - குருத்து வீசுதல்
குருத்தோலை - இளவோலை
குருநாடி - ஓர் நாடிவிதி, ஒரு சோதிட நூல்
குருநாதன் - குமரன், துருசி, பரமகுரு
குருநாள் - பூசநாள்
குருநிந்தை - பஞ்சபாதகத்தொன்று
குருநிலம் - குருக்கேத்திரம்
குருநோய் - வைசூரி
குருந்தம் - குருவிந்தம், ஓர் மரம்
குருந்தக்கல் - வச்சிரக்கல்
குருந்தான் - காட்டெலுமிச்சை
குருந்து - காட்டுநாரத்தை, காட்டெலுமிச்சை, குருத்து, குருந்தக்கல், குழந்தை, வச்சிரக்கல்
குருபதம் - சிரசிலோராதாரம், மோட்சம்
குருபத்தி - குருவின்மேல் விசுவாசம்
குருபத்திரம் - துத்தநாகம், புளியமரம்
குருபத்தினி - குருவின் மனைவி
குருபரன் - குமரன், பரமகுரு
குருபரம்பரை - குரு வமிசவழி
குருபன்னி - குருபத்தினி
குருபாரம்பரை - குரு வம்சவழி
குருபாலப்பிரபோதிகை - ஓர் நூல்
குருபீடத்தாள் - குருவின் மனைவி
குருபுகர்சந்திரயோகம் - வியாழன், சுக்கிரன், சந்திரன் மூன்று மோரிராசியினிற்பது
குருப்புடம் - வியாழபுடம்
குருபுத்திரன் - குருவின்மகன், சீடன்
குருபூசை - இறந்த குருவைக் குறித்துச் செய்யும் அன்னதானம், குருமாருக்குப்போசனங்கொடுத்தல், குருவணக்கம்
குருப்பட்டம் - குருவபிஷேகம்
குருப்பித்தல் - பருக்கொள்ளுதல், முளைத்தல்
குருப்பிரசாதம் - குருவினால் வரப்பட்டது, குருவுண்டசேடம்
குருப்பிரமோதம்-குருவினாற் பெற்றசந்தோஷம்
குருப்பு - பரு
குருப்பூச்சி - குருவண்டு
குருமலை - சுவாமிமலை
குருமன் } குழந்தை, சிறுவுரு
குருமான் }
குருமித்தல் - ஒலித்தல், பேசலாவெழுமொலி, முழங்குதல்
குருமுடித்தல் - உலோகங்களை நீற்றத்தக்க மருந்தைப்புடனையிடுதல்
குருமுறை - கோடாசளி, சவுக்காரம்
குருமுன் } குருமுகதா
குருமுன்னிலை }
குருமூர்த்தம் - தேவன் குருவாகவருதல்
குருமூர்த்தி - பரமகுரு
குருமூலம் - குருவின் வாக்குமூலம்
குருமை - பெருமை, நிறம்
குரும்பட்டி - குரும்பை
குரும்பம் - வலை
குரும்பி - புற்றாஞ்சோறு
குரும்பை - காதுக்குரும்பை, பனை தெங்கினிளங்காய், புற்றாஞ்சோறு
குருவகம் - வெண்சிவப்பு, துரேகடாம்
குருவங்கனை - குருப்பன்னி
குருவசனம் - குருமொழி
குருவண்டு - துவரைச் செடியிலிருக்கிற வண்டு
குருவருடம் - நவகண்டத்தொன்று
குருவாக்கு - குருவசனம்
குருவாரம் - வியாழக்கிழமை
குருவால் - இத்திமரம்
குருவி-குன்றிமணி, சிறுபறவை, மூலநாள்
குருவிக்காரர்-குருவிபிடிக்கும் ஒரு சாதியார்
குருவிக்கார் - ஓர் நெல்
குருவிக்குடல் - சிற்றிரைப்பை
குருவிக்கூடு - குருவி வைக்குங்கூடு
குருவிச்சி } புல்லுருவி
குருவிச்சை }

குருவிஞ்சி - ஓர் பூண்டு
குருவித்தலைப்பாகல் - ஓர்வகைச் சிறுகாய்ப்பாகல் [கு
குருவித்தலைப்பாக்கு- ஓர்வகைச்சிறுபாக்
குருவிந்தம் - குன்றிக்கொடி, கோரைக்கிழங்கு, சாதிலிங்கம், செம்மணி, மாணிக்கத்தின் இரண்டாவதுசாதி, முத்தக்காசு, வாற்கோதும்பை
குருவிமீன் - ஓர் மீன்
குருவிவாலான் - ஓர் நெல்
குருவுக்காதி - பச்சைக்கருப்பூரம்
குருவுபதேசம்-ஓமம், குருப்பண்ணு முபதேசம்
குருவெனற்சாரம்-காசிசாரம் [தேசம்
குருவேர் - ஓர் செடி, வெட்டிவேர்
குருளை - ஆமை, இளமை, நரி, நாய், பன்றி, புலி, மான், முசு, முயல், யாளி இவற்றின் குட்டி
குருள் - பெண்மயிர், முன் கொண்டை, [குட்டி
குரூஉ - கனம், குரு
குரூபம் - அவலட்சணம்
குரூபி - அவலட்சணம், உருவிலி, அழகில்லாதவன்
குரூபின் - அவலட்சணம்
குரூப்பியம் - துத்தநாகம்
குரூரம் - கொடுமை
குரை - அசைச்சொல், ஒலி, குதிரை, குளம்பு, கஞ்சாங்கோரை
குரைத்தல் - எழுத்திலாவோசை, ஒலித்தல், குலைத்தல்
குரைப்பு - முழக்கம்
குரைமுகன் - நாய்
குரோசம் - கூப்பிடுதூரம்
குரோசானியோமம் - குராசானி ஓமம்
குரோட்டம் - நரி, பன்றி
குரோட்டன் - ஆண்நரி
குரோட்டு - பன்றி
குரோதம் - உட்பகை யாறினுென்று, சினம், விகாரமெட்டினுென்று
குரோதன - ஐம்பத்தென்பதாவது வரு
குரோதன் - வீரபத்திரன் [டம்
குரோதி-குரோதியென்னேவல், கோபி, பகைவன், முப்பத்தெட்டாவது வரு
குரோதித்தல் - பகைத்தல் [டம்
குர்ப்பரம் - முழந்தாள்
குர்வாணன் - சேவகன்
குலகண்டன்-குலத்தை வடுப்படுத்துவோ
குலகருவம் - குலாசாரம் [ன்

குலகன்னி - நல்லில்லாள், பதிவிரதை
குலகாயம்-குலவொழுக்கம், பேய்ப்புடல்
குலகாலம் - நிலக்கடம்பு
குலகிரி - அட்டகுலபருவதம்
குலகுரு - சாதிக்குரு
குலகூடஸ்தன் - உயர்குலத்தான்
குலக்காயம் - பிறவிச்சுபாவம்
குலக்கு - குணுக்கு, குலை
குலக்கொடி - குல ஸ்திரீ
குலக்கொழுந்து - குலத்துக்கு, முதலாயிருக்கும் அரியபிள்ளை
குலசம்பலம் - குள்ளம்
குலசம்பவன்-உயர்குலத்திற் பிறந்தோன்
குலசன் - ஒழுக்கங்குலம் வழுவாத பிதா மாதாவிடத்திற் பிறந்தோன்
குலசுவேதகன் - சவரிலோத்திரம்
குலச்சிரேட்டன் - குலத்திலு மொழுக்கத்திலுங் கல்வியிலுமதிகன்
குலடம் - மஞ்சனீர்ப்புத்திரன்
குலடாபதி - வசவிகணவன்
குலடி - செம்பாஷாணம்
குலடை - குலாசாரந்தவறினவள்
குலட்சயம் - குடியழிவு
குலட்டு - குலை
குலதருமம் - குலாசாரம்
குலதாரகன் - புத்திரன்
குலதிதி - நாலாமெட்டாம் பன்னிரண்டாந்திதி
குலதிலகன் - குலாதிபன்
குலதுருமம் - வெடியுப்பு
குலதெய்வம்-அவ்வக்குலத்தார் வழிபடுந் தெய்வம்
குலத்தம் - கொள்
குலத்திகை - காட்டுக்கொள்
குலத்திரி } கற்புள்ளவள்
குலஸ்திரீ }
குலத்தை - குலத்தை
குலநாசகம் - ஒட்டகம்
குலநிந்தை - குடிப்பழுது
குலந்தெரித்தல் - குலப்பழிகூறல்
குலபதி - குலாதிபன்
குலபத்தினி - கற்புடையாள்
குலபருவதம் - குலமலை
குலபாலகம் - ஓர் தேன் தொடை
குலபாலகன் - குலபுத்திரன்
குலபாலிகை - கற்புடையாள்
குலப்பம் - கக்குவான், செம்புமணல்

குலப்பகை-சாதித்தொடர்ச்சியான பகை
குலபௌ - கணுக்கால்
குலமகள் - குலஸ்திரீ
குலமகன் - நற்குடியிலுள்ளவன்
குலமசாதி - நீலக்கல்
குலமரியாதை - வமிசத்துக்கடுத்தசங்கை
குலமலை - அட்டமலை
குலமித்திரன் - குலானுசாரி
குலமிலான் - குலவீனன்
குலமுளோன் - நற்குலத்தோன்
குலம் - அரண்மனை, இரேவதி, இனம், கற்கண்டு, கூட்டம், சாதி, மனை, விலங்கின் கூட்டம், வமிசம், குடி
குலம்பா - பேய்ச்சுரை
குலம்பெயர்தல் - சாதிமாறுதல்
குலரி - குலை
குலவரைதுத்தநாகம் - மந்தாரக்கல்
குலவலி - இலந்தை
குலவல் - குலாவுதல்
குலவாரம் - அங்காரசுக்ரவாரங்கள்
குலவித்தை - சாதிவித்தை
குலவிருது - குலத்துக்குரியது
குலவிருத்தியை - மருத்துவிச்சி
குலவீனன் - கீழ்மகன்
குலவுகாசம் - நாணல்
குலவுதல் - உலாவுதல், கொண்டாடல், நட்புறல், பிரகாசித்தல், பொருந்தல், வளைதல், அளவளாவுதல்
குலவுரி - சந்தனமரம், செஞ்சந்தனம்
குலவை - குரவை
குலன் - கலைவல்லோன், குலம்
குலா - ஆடம்பரம், குலாவென்னேவல், கொண்டாடல், பட்சம், வளைவு
குலாகுலதிதி - ஆருந்திதி
குலாகுலவாரம் - புதவாரம்
குலாங்கனை - உயர்குலத்தவள்
குலாங்குலி - காவட்டம்புல்
குலாசம் - குலமலை
குலாசாரம் - குலநடை
குலாசாரியன் - குலக்குரு
குலாதனி - கடுகுரோகிணி
குலாதாரகன் - புத்திரன்
குலாதிக்கம் - குலவிசேடம்
குலாதினி - கடுகரோகிணி
குலாத்திரி - குலபர்வதம்
குலாமல்லி - காவட்டம் புல்
குலாபிமானம் - குலச்சங்கை, சாதியபிமானம்
குலாபு - மூட்செவ்வந்தி
குலாயம் - பறவைக்கூடு, வலை
குலாரி - ஓர்வகைப் பண்டி
குலாலம் - வரத்தொளை
குலாலன் - குயவன்
குலாலி - குயத்தி
குலால் - செவ்வை
குலாவல்-கொண்டாடல், சிநேகம், பாராட்டல், பொழுதுபோக்கல், வளைவு, வியத்தல்
குலாவு - குலாவென்னேவல், கொண்டாட்டம்
குலாவுதல் - சஞ்சரித்தல், சந்தோஷித்தல், பிரகாசித்தல், வளைதல்
குலி - மனைவி, யாக்கை
குலிகம்-இலுப்பை, சாதிலிங்கம், சிவப்பு, பந்து
குலிகன் - மூங்கில் வேலைசெய்வோன்
குலிகாக்கிரீடை - பந்தடித்தல்
குலிங்கம் - ஊர்க்குருவி, ஓர்தேசம், காக்கை, குதிரை, சாதிலிங்கம்
குலிங்கர் - ஓர் சாதி
குலிசபாணி - கந்தன், தெய்வேந்திரன்
குலிசம் - இடியேறு, இலுப்பை, கற்பரி பாஷாணம், வச்சிரச்சோடு, வச்சிராயுதம், வன்னிமரம்
குலிசல் - நாகபாஷாணம்
குலிசன்-கற்பரிபாஷாணம், குலிசபாணி
குலிசாசனன் - சாக்கியமுனி
குலிஞன் } குலமுள்ளோன்
குலிஞ்சன் } குலமுள்ளோன்
குலிந்தம் - தேயமைம்பத்தாறி ெனன்று
குலிரம் - நண்டு
குலிலி - வீராவேசவொலி
குலீநசம் - நீர்
குலீரம் - நண்டு
குலீனன் - குலமுள்ளோன்
குலுகுலுத்தல் - இரைதல், ஊருதல், சொறிதல்
குலுகுலுப்பு - தினவு
குலுகுலெனல் - ஒலிக்குறிப்பு
குலுக்கம் - அசைவு, ஓர்புள்
குலுக்கல்-அசைத்தல், கெருவங்காட்டல்
குலுக்கி - பிலுக்கி
குலுக்கு - அசைப்பு,குலுக்கென்னேவல், பிலுக்கு
குலுக்குதல் - அசைத்தல், கெருவங்காட்டுதல்

குலுக்கெனல்-ஒலிக்குறிப்பு, குலுங்குதல்
குலுக்கை - குதிர், கோரிக்கை
குலுங்கல் - நடுங்கல்
குலுங்குதல் - அசைதல், நடுங்கல்
குலுசம், குலுஞ்சம் } பூஞ்செண்டு
குலுத்தம் - கணுக்கால், கொள்
குலுமமூலம் - இஞ்சி
குலுமம் - அணியுநடத்தல், ஓர்செடி, கோட்டை,படைத்தொகை,புற்கற்றை
குலுமி - பாசறை
குலேசன், குலேச்சுரன் } குலநாயகன்
குலை - அம்பின்குதை, ஈரற்குலை, குதை குலை யென்னேவல், கொத்து, செய் கரை, நடுக்கம், பூங்கொத்து, மரம், முதலியவற்றின் குலை, விற்குதை
குலைகட்டுதல் - குலை பிடித்தல்
குலைகுலைத்தல் - அச்சத்தானடுங்குதல்
குலைக்கல் - ஆட்டுக்கல், கோரோசனம்
குலைச்சல் - அழித்தல், ஒழுங்குத்தப்பு
குலைதல் - குலைத்தல், வெறுத்துப்பேசல், அச்சக்குறிப்பு, அவிழ்தல், அழிதல், ஒழுங்குகெடுதல், கலைதல், குன்றல், நடுங்கல், பதறுதல்
குலைதள்ளுதல் - குலைபோடுதல்
குலைத்தம்-அவிழ்த்தல், கலையச்செய்தல், குரைத்தல், பிரித்தல்
குலைத்தல்-அழித்தல், ஒழுங்கறச்செய்தல்
குலைநோய் - குலைமுட்டி
குலைபடுவன் - ஓர்நோய்
குலைப்பன் - க்க்குவான், சீதநோய்
குலைப்பு - குலைத்தல், நடுக்கம்
குலைமுட்டி - நெஞ்சிற்குத்து
குலையல் - அச்சக்குறிப்பு, குலைதல்
குலையெரிவு - ஓர்நோய்
குலைவயிறு - ஈரலடி
குலைவிலை - குலைமதிப்புத்தகை
குலைவு - குலைதல்
குலோத்துங்கன்-குலசிரேஷ்டன், சோழன்
குலோமி - வெள்ளறுகு
குலோமிசை - வசம்பு
குல்மம் - குன்மம்
குல்மலம் - பாவம்
குல்மாஷம் - கழுநீர்
குல்லயம் - என்பு, புட்டம், மாமிசம்
குல்லயன் - மந்திரி
குல்லரம் - முறம்
குல்லரி - இலந்தை
குல்லா - தலைக்கோலம், படவிற் கட்டுங் குல்லா
குல்லாய் - தலைவாரை
குல்லான் - சலாகைப்பாரை
குல்லி - ஓர்பூண்டு
குல்லியம் - ஆலோசனை, இனிமை
குல்லியன் - ஆலோசனைக்காரன்
குல்லிரி - குலிலி
குல்லை - கஞ்சா, துளசி, வெட்சி
குல்வலி - இலந்தை
குவங்கம் - ஈயம்
குவசம் - இழந்தது
குவடு-சங்கபாஷாணம், சிறுமலை, திரட்சி, மரக்கொம்பு, மலை, மலையுச்சி
குலைவட்டம் - அம்பிற்குதை
குவட்டிலுதித்தோன் - சொன்னபேதி
குவட்டிற்புளிதம் - சங்கபாஷாணம்
குவட்டினீயம் - நீலாஞ்சனக்கல்
குவட்டுக்கல் - ஆட்டுக்கல்
குவட்டுக்கூர்மை - தொட்டிபாஷாணம்
குவட்டுநுண்முலைச்சி - குவட்டி லுதித்தோன்
குவட்டுமுலைச்சி - சொன்னபேதி
குவம் - ஆம்பல்
குவரிகுண்டல் - வாலுளுவை
குவலம் - அவுபலபாஷாணம்
குவலயப்பிரியன் - சந்திரன்
குவலயம் - குவளை, நெய்தல், பூமி
குவலயாநந்தம் - ஓர் அலங்கார நூல்
குவலயாபீடம் - ஓர் யானை
குவலி - இலந்தை மரம்
குவலிடம் - ஊர்
குவலை - கஞ்சா, துளசி
குவலையன் - துருசி
குவவு-குவிதல், கூட்டம், திரட்சி, பருத்தது, பூமி, பெருமை
குவளச்சி - புற்றும்பழம்
குவளை - ஓர் நீர்ப்பூக்கொடி, ஓர்வகைப் பாத்திரம், கடுக்கனில் வைக்குமிதழ், கண், கண்ணிற்கோளை, கண்மடல், கோளை, பாண்டங்களின் கழுத்து, பொக்கணி, மன்மதன்கணையிளென்று
குவளையச்சு - தட்டாரினோர் கருவி
குவா - ஓர் கிழங்கு
குவாகம் - கமுகு
குவாகுலம் - ஒட்டகம்

குவாட்டி - ஓர் மட்டி
குவாதம் - கஷாயம்
குவாது - குதர்க்கம்
குவால் - குவிதல், கூட்டம், மேடு
குவிதல்-ஒடுங்குதல், கூட்டம், சேருதல், திரளுதல், நெருங்குதல்
குவித்தல் - ஒடுங்குவித்தல், ஒளித்தல், கூட்டுவித்தல், கூப்பல்
குவிந்தன் - சேணியன்
குவிப்பு - குவியல்,செய்தல், கைகுவிப்பு, [சேர்க்கை
குவியல் - கும்பல்
குவிரம் - காடு
குவில் - அறுத்தல், கைபிடியரி, சத்தம்
குவிவு - குப்பை, குவிதல்
குவேணி - மீன் புட்டில்
குவேராசலம், குவேராத்திரி } கைலாய பர்வதம்
குவேலம் - ஆம்பல்
குவை - குப்பை, கூட்டம், திரட்சி, மேடு
குழ - இளமை
குழகம் - அழகு, சிறுவர்க்குரிய ஓர் நூல்
குழகன் - சிவன், முருகன் [தை
குழகு - குழகம், இளமை, அழகு, குழந்
குழகுழத்தல் - கொளுகொளுத்தல்
குழக்கன் - சிவன்
குழங்கல் - ஓர் மாலை
குழந்தை - சிறுபிள்ளை, இளமை
குழந்தைநீர் - இளநீர்
குழப்படி, குழப்பம் } கலகம், கலக்கம், கொந்தளிப்பு, தாறுமாறு
குழப்பல் - கலத்தல், குழப்பம் பண்ணல்
குழப்பன் - குழப்பக்காரன்
குழப்பு - கலக்குகை, குழப்புகை [தல்
குழப்புதல் - கலத்தல், குழப்பம்பண்ணு
குழமகன்-ஓர் பிரபந்தம், அஃது கலிவெண்பாவான் மாதர்கடங்கையிற் கண்ட இளமைத் தன்மையுடைய குழமகனைப் புகழ்ந்து கூறுவது, பாலன்
குழம்பல் - அடிதலைமாறுதல், கலங்கல், நீராளமானது
குழம்பு-ஓர்விதக்கறி, கஞ்சி, குழம்பென்னேவல், குழைசேறு, சந்தனக்குழம்பு முதலியன, நீராள்மானது
குழம்புதல் - கலங்குதல், தத்தளித்தல், தலைதடுமாறல் [பால்
குழம்புப்பால் - குழம்பாய்க் காச்சப்படும்
குழலப்பம் - ஓர் தின்பண்டம்
குழலல் - குழற்சி
குழலளகம் - குழற்சியையுடைய அளகம்
குழல் - இசைப்பாட்டு, ஊதிடுகுழல், ஐம்பாலினொன்று, அஃது சுருட்டி முடித்தல், ஓர்மீன், கொண்டை, துளையுடைப்பொருள், பெண்மயிர், யோனி
குழவி - அம்மிக்குழவி, இளமை, ஒட்டகம், கடமை, காட்டா, பன்றி, மான், முசு, யாளி, யானை இவைகளுமன்றி மரக்கோட்டின் வாழ்விலங்கின்பிள்ளைகளுமாம், குழந்தை, பாலசந்திரன், பெருமை, மரக்கன்று
குழவு - இளமை
குழறல் - குழறுதல்
குழறுதல் - கலத்தல், கூகைகத்தல், குழற்சியாதல், சுருட்டி முடித்தல்
குழற்கொத்து - மயிர்க்குழற்சி
குழற்சி - குழன்றிருத்தல்
குழற்சிகை - ஒருவகை மயிர் முடி
குழற்பிட்டு - குழலிலவிக்கும் பிட்டு
குழற்றிறப்பு - ஓர் வகைத்திறவுகோல்
குழாம் - கூட்டம், திரள்
குழாம்பல் - குழைவு, நீராளமானது
குழாய்-துளை, துளையுடைப்பொருள்
குழி - ஒருகோல்நீளமு மொருகோலகலமுங் கொண்டதரை, கிடங்கு,கிணறு, குழியென்னேவல், குளம், பள்ளம், வயிறு
குழிகண் - குழிந்தகண், ஆழ்ந்தகண்
குழிகை - குளிகை
குழிக்கணக்கு - குழிமதிப்புக்கணக்கு
குழிக்கிட்டி - ஓர்விளையாட்டு
குழிங்கை - அகங்கை
குழிசி - பானை, மிடா, வண்டியின் குடம்
குழிசிகாரகன், குழிசிகாரன் } குசவன்
குழிசீலை - கௌபீனம்
குழிச்சட்டி - ஓர்பணிகாரச் சட்டி
குழிதல் - குழியாதல்
குழித்தல் - குழியாக்கல், நீராடல்
குழித்தாமரை - ஆகாசத்தாமரை, கொட்டைப்பாசி
குழிநரி - ஓர்நரி
குழிநாவல் - ஓர்மரம்
குழிபறிதல் - குடங்குவிழுதல்
குழிப்பு - குழிசெய்கை, தாழ்வு, பிரபந்த வுறுப்பினொன்று

குழிமாறுதல் } குழியைப் பரப்பாக்கல்
குழிமாற்று
குழிமி - பாத்திரத்தின் மூக்கு, மதகு
குழிமிட்டான் - நத்தைச்சூரி
குழிமுயல் - ஓர்முயல்
குழியச்சு-தகட்டைக் குழியாக்குங்கருவி
குழியம்-திரட்சி, திரண்டவட்டம், பாரா வலையம், வலையம்
குழியம்மி - மருந்தரைக்குங் குழியுள்ள வம்மி
குழியானை - ஓர்செந்து
குழிவு - குழித்தன்மை
குழிவெட்டி - சவக்கிடங்குவெட்டுவோன்
குழு - அடங்காமை, குழுவென்னேவல், கூட்டம், மகளிர்கூட்டம்
குழுக்காலி - கட்டுக்கடங்காத மாடு
குழுப்பற்றுதல் } அடங்காமைத்திரிதல்
குழுப்பாய்தல்
குழுமல் - கூட்டம், கூட்டல், முழங்கல்
குழுமாடு - குழுக்காலி
குழுமுதல் - கூடுதல்
குழுமுரல் - ஓர்மீன்
குழும்பு - குழி, திரள்
குழுவல் - கூடல், கூட்டம்
குழுவன்-சொற்கேளாதவன், பாம்பாட்டி
குழுவுதல் - கூடுதல்
குழூஉ - கூட்டம்
குழூஉக்குறி - அவ்வக்கூட்டத்தார் வழங்குஞ்சொல்
குழூஉப்பெயர்-கூட்டத்தான் வரும்பெயர்
குழை - காடு, காது, குண்டலம், குழை சேறு, குழையென்னேவல், சேறு, தளிர், துளையுடைப்பொருள், நெய்தல்
குழைகறி - நீராளமானகறி
குழைக்காடித்தல் - மந்திரோச் சாரணத்துடன் குழையடித்துப் பார்த்தல்
குழைக்காடு - காட்டுத்தேசம்
குழைசாந்து } கலந்தசுண்ணம்பு
குழைசுண்ணம்
குழைசேறு - குழைந்தசேறு
குழைச்சி - புற்றுஞ்சோறு
குழைச்சு - ஆயுதங்களின்கழுத்து, ஆயுத முதலியவற்றின் சுரை, கழுத்து, கை கால் முதலியவற்றின் பொருத்து, முடிச்சு
குழைஞ்சான் - குழப்பம்
குழைதல்-கலங்குதல், நெகிழ்ந்தொன்றுதல், வளைதல், வாடல்
குழைத்தல் - இளகுவித்தல், ஒன்றாய்க் கலத்தல், தளிர்த்தல், வளைத்தல்
குழைநாற்றம் - குழைமணம்
குழைபிடித்தல் - ஒன்றைவிலக்கத் தழை பிடித்தல்
குழைப்பு - குழைத்தல்
குழைமறைவு - ஒளிப்பு
குழையடி } குழையடித்து மந்திரோச் சாரணத்துடன் பார்க்கும்பார்வை, போதிப்பு
குழையடித்தல்
குழையல் - இளகியொன்றுபட் டிருப்பது
குழைவு - அணைதல், இளக்கம் உருக்கம், களப்பு, சேர்மானம், வளைவு, வாடல்
குளகச்செய்யுள் - ஓர்பிரபந்தம், அஃது பலபாட்டா யொருவினை கொண்டு முடிவது
குளகம்-ஆழாக்கு, குற்றெழுத்துத்தொடர்ந்தசெய்யுள், பலபாக்கூடிப்பொருண் முடியுஞ்செய்யுள், மரக்கால், புற்று
குளகன் - குமரன்
குளகு-இலைக்கறி, இலையுணும்விலங்குணவு, தழை
குளகுளத்தல் } ஈரடுக் கொலிக் குறிப்பு
குளகுளெனல்
குளக்கட்டு - குளத்தருகு
குளக்கரை - தடாகக்கரை
குளக்கால் - குளத்தின் வாய்க்கால்
குளக்கீழ் - குளம்பார்த்த வயல்
குளக்குருவி - நண்டு
குளக்கொட்டி - ஓர் கொட்டி
குளக்கோடு - குளக்கரை
குளக்கோட்டன் - குளம் வெட்டுவதிலும் கோயிற்பணி செய்வதிலும் சிறந்த இலங்காபுரியிலிருந்த ஓரரசன்
குளக்கோரை - ஓர் புல்
குளசு - குழைச்சு
குளஞ்சி-ஓர்தோடைமரம், கிச்சிலி, சருக்கரை
குளத்தேபோதல் - வாகியத்துக்குபோதல்
குளநண்டு - ஓர் நண்டு
குளநெல்-குளக்கரையிலும் சதுப்பு நிலங்களிலும் சுயமாய்ப் பயிராகும் ஓர்நெல், நீர்வாரம்
குளபாகம் - இலளிதபாகம்
குளப்பயறு - ஓர் பயறு
குளப்பாடு - குளமடுத்த நிலம்
குளமீன் - குளத்துமீன்

குளம்-எரி, சருக்கரை, தடாகம், நெற்றி, வெல்லம்
குளம்பு - குரம், விலங்கின் காற் குளம்பு
குளவஞ்சி - குளாஞ்சி
குளவடம்பு - ஓர் கொடி
குளவட்டை - நீரட்டை
குளவரகு - ஓர் வரகு
குளவாழை - ஓர் நெல்
குளவி-ஓர்வண்டு, காட்டுமல்லிகை, தேனீ, மலைப்பச்சை
குளவிகொட்டுதல் - குளவிகுற்றுதல்
குளவிக்கூடு - குளவியிருக்குங்கூடு
குளவிந்தம் - ஓர் மஞ்சள்
குளந்தை - குளத்தூர்
குளறல் } உளறுதல், குளிறுதல்
குளறுதல்
குளறுபடை } குழப்பம்
குளறுபிடி
குளன் - குளம்
குளாஞ்சி - ஓர் தோடை, கிச்சிலி
குளாபாகம் - குடாபாகம்
குளி - குளித்தல், குளியென்னேவல்
குளிகசித்தி - குளிகாசித்தி [ளை
குளிகம்-மருந்தின்பொது, சனியின் பிள்
குளிகன் - அட்டநாகத் தொன்று, கரந்துறைகோளி ெனன்று
குளிகாசித்தி - இரசகுளிகையினல்வருஞ் சித்தி, அஃது அட்டசித்தியினுமொன்று
குளிகாரன் - சங்கு முத்து முதலியன குளித்தெடுப்போன்
குளிகை - மாத்திரை
குளிக்கை - குளித்தல்
குளிசமாடுதல் - வளையமிடுதல்
குளிசம்-சக்கரம் வரைந்த தகடு, வளையம்
குளிசீலை - கௌபீனம்
குளித்தல் - சுழியோடல், நீராடல், படி
குளிப்பச்சை - ஆற்றுப்பச்சை [தல்
குளிப்பாட்டல் - குளிக்கச் செய்தல்
குளிப்பாட்டு - பிரேதமுழுக்காட்டு
குளிப்பாட்டுதல் - குளிக்கச் செய்தல், பிரேதாலங்காரத் தொன்று
குளிப்பித்தல் - நீராட்டல்
குளிப்பு - குளித்தல்
குளியமாடுதல் - குளிசமாடுதல்
குளியம்-உண்டை, புலி, மருந்தின்பொது, வளையம், குளிசம்

குளியோடல் } சுழியோடுதல்
குளியோடுதல்
குளிரக்கொடுத்தல் - மனரம்மியப்படக் கொடுத்தல்
குளிரம் - நண்டு
குளிரி - கல்லாரம், பீலிக்குஞ்சம், வெற்றிலை மூக்கரி கத்தி
குளிர்-அச்சக்குறிப்பு, இலைமூக்கரிகத்தி, கவண், கற்கடகவிராசி, குளிர்ச்சி, கூதல், சூலம், நண்டு, பனிக்காற்று, மழு, மீனெழுங்கு, முழவு, வெண்குடை, வெற்றிலை மூக்கரிகத்தி
குளிர்காய்ச்சல் - சீதசுரம்
குளிர்காய்தல் - கூதிர்காய்தல்
குளிர்காலம் - கூதல்காலம்
குளிர்காற்று - குளிரானகாற்று
குளிர்குளிர்தல் } சீதள மடைதல், தோஷமேறுதல், விரைத்தல்
குளிர்கொள்ளல்
குளிர்சுரம் - சீதசுரம்
குளிர்ச்சி - குளிர்மை, திருத்திகரம்
குளிர்ச்சேர்க்கை - கடகவிராசி
குளிர்தல் - குளிருதல், சாதல், விரைத்தல், தங்கல்
குளிர்த்தி - ஓராராதனை, குளிர்மை
குளிர்த்திபண்ணுதல்-குளிர்மை செய்தல்
குளிர்த்திபோடுதல் - சீதளாதேவிக்குச் செய்யுமோராராதனை
குளிர்ந்தகுரல் - இனியவோசை
குளிர்ந்தகொள்ளி - குளிர்ந்த கொல்லி
குளிர்ந்தநிறம் - நன்னிறம் [லொளி
குளிர்ந்தநீர் - இளவெந்நீர், மணியினல்லொளி
குளிர்ந்தபரிமளம் - சீதரங்கபாஷாணம்
குளிர்ந்தபாட்டு - செவிக்கினிய பாட்டு
குளிர்ந்தபார்வை - தயைநோக்கு
குளிர்ந்தபேச்சு - மதுரவசனம்
குளிர்ந்தமணம் - நறுநாற்றம்
குளிர்ந்தமனம் - நல்லவிருதயம்
குளிர்ந்தமுகம் - அலங்காரமுகம், நன்மு
குளிர்ந்தமொழி - இனிய வசனம் [கம்
குளிர்ந்தவாசனை - நறுமணம்
குளிர்ந்தவாயு - வாதவாயு
குளிர்ந்தவேளை - சாயந்திரம்
குளிர்ந்தவொளி - மணிகளினல்லொளி
குளிர்ந்துகொல்லி - கொவ்வைக் கொடி, வஞ்சகன்
குளிர்ந்துபற்றுதல் - வாயுவிட்ட முதலிய பற்றியேறுதல்

குளிர்ந்துபோதல் - இறத்தல்
குளிர்ந்தேகுதல் - குளிர்ந்துபற்றுதல்
குளிர்ப்பித்தல் - குளிர்ச்சிசெய்தல்
குளிர்ப்பு - குளிர்மை
குளிர்மை - அன்பு, சீதளம்
குளிர்மைக்கட்டு - கூகைக்கட்டு
குளிறல் - எழுத்திலாவோசை, ஒலித்தல், பேசலாவெலுமொலி [லி
குளிறு-ஒலி, குளிறென்னேவல், பேரொ
குளிறுதல் - அலறுதல், சத்தமிடுதல்
குளீரம் - நண்டு
குளுகுளுத்தல் - ஒலிக்குறிப்பு, காமாலை கொள்ளுதல், செவ்வியழிதல், மெது மெதுத்தல்
குளுகுளுப்பை - காமாலை
குளுகுளெனல் - ஒலிக்குறிப்பு
குளுத்தி - குளிர்மை
குளுப்பை - குளுகுளுப்பை
குளுமை - குளிர்மை
குளுவன் - கோழிக்காரரிற்றலைவன்
குளைச்சு - காற்பங்கு, குழைச்சு
குளைமான் - ஓர்வித மான்
குள்ளக்கொண்டை - ஓர் மீன்
குள்ளத்தாரா - குள்ளவாத்து
குள்ளநரி - ஓர் நரி
குள்ளம் - குறுமை, கொடுமை, வஞ்சகம்
குள்ளன் - கட்டையன், வஞ்சகன்
குள்ளி - கட்டைச்சி, குள்ளன்
குறங்கு - கொளுவி, தொடை
குறங்குசெறி - தொடையாபரணம்
குறங்கொட்டி - துலாவோடே யடுக்கும்
குறங்கொள்ளி - குறைக்கொள்ளி [மரம்
குறஞ்சனம் - வெண்காரம்
குறஞ்சால் - உழுதுகுறைந்த நிலம்
குறஞ்சி - செம்முள்ளி
குறடு - அடைகல், ஒட்டுத்திண்ணை, ஓர் கருவி, செரும்பிளேருறப்பு, திண்ணை, நண்டு, பலகை, புடைப்பு, மரத்துண்டு, மிதியடி, அச்சுக்கோக்குமிடம்
குறட்டரியம் - குறைகூறல்
குறட்டாழிசை - நாற்சீரின்மிக்க பலசீரான் வருமடியிரண்டாய் ஈற்றடிகுறைந்து வருவதும் விழுமியபொருளும் ஒழுகிய ஓசையுமின்றிக் குறள்வெண்செந்துறையிற் சிதைந்து வருவதும் வேற்றுத்தளைவிரவிய குறள் வெண்பாவாய் வருவதுமாகிய விம்மூன்றுவகையுமாம்
குறட்டுச்செருப்பு - ஓர் செருப்பு
குறட்டுப்பாக்குவெட்டி - ஓர் பாக்குவெட்டி
குறட்டுவாதம் - ஓர் தவிப்பு [டி
குறட்டை - காக்கணங்கொவ்வை, குறுகுறுப்பு, நித்திரையில்விடும் ஒலிமூச்சு
குறண்டல் - குறண்டுதல், சுருண்டது, சுருண்டு வளைந்தது
குறண்டல்வாதம் - வலிவாதம்
குறண்டவாங்குதல் - சுருட்டியிழுத்தல்
குறண்டி - ஓர் பண், ஓர் முட்செடி
குறண்டுதல் - சுருண்டு கூனுதல்
குறத்தி-குறிஞ்சி நிலப்பெண், நிலப்பனை
குறத்திப்பாட்டு - ஓர் பிரபந்தம், அஃது தலைவன் பவனிவரக்கண்ட தலைவி மயங்கித் திங்கள் முதலிய உவாலம் பனப்பட்டுக்குறிகேட்டல் முதலிய அகப்பொருளு மடங்க அகவல் முதலிய செய்யுளிடையிடை விரவிவரச் சிந்து முதலிய நாடகத்தமிழ் பாடுவது
குறம் - ஓர்சாதி, குறி, குறத்திப்பாட்டு
குறம்பார்த்தல் - குறிபார்த்தல்
குறம்விடுத்தல் - குறட்டுசொல்லுதல்
குறவஞ்சி - ஓர்பிரபந்தம், குறத்தலைவி
குறவணவன் - ஓர்புழு
குறவம் - கோட்டம்
குறவர் - குறிஞ்சி நிலமாக்கள், வேடர்
குறவன் - இரதம், ஓர் சாதியான், குறிஞ்சி நிலத்தான்
குறவை - ஓர்மீன்
குறழ்தல் - குனிதல்
குறளடி - இருசீரடி
குறளடிவஞ்சிப்பா-இருசீரடியான் வரும் வஞ்சி
குறளன் - குள்ளன்
குறளி - ஓர் பிசாசு, வசலி, குறியவள்
குறளிக்கூத்து - பேய்த்தனம்
குறளிவிடுதல் - கோளாறுபண்ணல் [கம்
குறளை-குள்ளம், கோட்சொல்லல், சுருக்
குறள்-இருசீரடி, உறுப்புக்குறை யெட்டினென்று, ஓர்பா, குறுமை, சிறுமை, திருவள்ளுவர்செய்த ஓர் நூல், பூத கணம்
குறள்வெண்செந்துறை-விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையு முடைத்தாய் எனைத்துச்சீரானும் அளபொத்த இரண்டடியாய் வருவது
குறள்வெண்பா - இரண்டடியா யொருவிகற்பத்தானேனு மிருவிகற்பத்தானேனும் வருவது

குருசாணி - ஓர் மருந்து
குருவுதல் - ஒடுங்குதல், மெலிதல்
குருள் - மறிக்குட்டி
குறி - அடையாளம், ஆண்பெண் குறி, எண்ணம், ஓர்வகைச்சாத்திரஞ் சொல்லுதல், குணம், குறிப்பு, குறியென்னேவல், சகுனம், தோற்றம், நன்னடத்தை, நிமித்தம், பயில், புடவை, மாடுமுதலியவற்றினிடுங்குறி, முறை
குறிகாணல், குறிகாணுதல் } அடையாளந் தோன்றல்
குறிக்கொள்வோர்-கருமமுடிக்குந் துணிவுள்ளோர், பராயணர்
குறிக்கோள்-ஒற்றுமை, கணித்தல், கருமமுடிக்குந் துணிவு
குறிசொல்லுதல் - குறியிடம் பார்த்துச் சாத்திரஞ் சொல்லல்
குறிச்சி - கிராமம், குறிஞ்சி நிலத்தூர், சிற்றூர்
குறிச்சூத்திரம் - பெயரீடு சூத்திரம்
குறிஞ்சா - ஓர்கொடி
குறிஞ்சி - ஈந்து, ஐந்நிலத்தொன்று, அஃது மலைச்சார்பு, ஓரிசை, ஓர்கொடி, ஓர்சிமிள், ஓர்பண், குறிஞ்சி நிலத்திராகம், குறிஞ்சிமரம், செம்முள்ளி, மருதயாழ்த்திறம், மருதோன்றி மரம்
குறிஞ்சிக்கருப்பொருள் - குறிஞ்சி நிலத்துப் பத்திப்பொருள், அவை சேய்முதற் சுனையாடலீருயவாம்
குறிஞ்சித்தலைவன் - கானகநாடன்
குறிஞ்சித்திணை - குறிஞ்சி நிலத்திற் குரியன, அவை மலை, கூதிர், முன்பனி, இருள், ஐவனம், தினை, வெதிர், களவுப்புணர்ச்சி, சிலம்பன், வெற்பன், பொருப்பன், சேய், கானவர், குறவர், தேன், வெறி, சிறுகுடி, குறிச்சி, அருவி, சுனை, யானை, வேங்கை, மயில்
குறிஞ்சித்திணைப்பொருள் - குறிஞ்சிக் கருப்பொருள்
குறிஞ்சித்தெய்வம் - சுப்பிரமணியன்
குறிஞ்சிப்பறை - துடி, தொண்டகம்
குறிஞ்சிப்பொருள் - குறிஞ்சி நிலத்திற் குரியபொருள்
குறிஞ்சிப்பாட்டு - ஒரு தமிழ்நூல்
குறிஞ்சிமுதற்பொருள் - வரையும் வரை சார்ந்த விடமுமென்னு நிலப்பொருளும், கூதிர், யாமம், முன்பனியென்னும் பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுகளுமாம்

குறிஞ்சியாழ் - குறிஞ்சி நிலத்தியாழ்
குறிஞ்சிலைக்கல் - ஈரற்கல்
குறிஞ்சில் - தொட்டிபாஷாணம்
குறிஞ்சிவேந்தன் - குமரன்
குறிது - குறுமையுடையது
குறித்தகள்வன் - பெயர்போன கள்வன்
குறித்தபொருள் - நினைத்தபொருள்
குறித்தல்-அடையாளப்படுத்தல், கருதல், சுட்டுதல், நியமித்தல், மதித்தல், வரைதல்
குறிநிலையணி - புகழ்பொருளை யுணர்த்துஞ் சொற்களாற் குறித்தறிதற்குத் தகுதியாயபொருளைச் சொல்லுதல்
குறிபார்த்தல்-சகுனம் பார்த்தல், சாமுத்திரிகா லக்கணம் பார்த்தல்
குறிப்பறிதல் - குறிப்பினாலறிதல்
குறிப்பாளி - குறிப்பறிவோன்
குறிப்பானவன் - கணிசவான், மதிக்கத்தக்கவன்
குறிப்பிசை - எழுத்திலாவோசை
குறிப்பிடம் - சுருக்கம்
குறிப்பு - அடையாளம், எழுத்துப் பழக்குங்குறிப்பு, ஒருமை, கருத்து, சைகை, நினைப்புக்கெழுதினவெழுத்து, பிறந்நாளெழுதிவைக்குமோலை, விருப்பம்
குறிப்புக்காரணவகத்திணை - குறிப்புக்காட்டல் [உ-ம்] பேருலகாளயான் பிறந்தாயின பாருலகிழிநலம்பற்றிநக்கவோ
குறிப்புச்செயல்-செஞ் செயலினுமாக்கச் செயலினுநின்று அவைக்கு வேறாய பொருளையுணர்த்துவது
குறிப்புச்சொல் - குறிப்பினாற் பொருளுணர்த்துஞ்சொல்
குறிப்புநவிற்சியணி - ஒரு பொருளைக் குறித்துச் சொல்ல வேண்டியதற்கு மற்றொரு பொருளைக்குறித்துச் சொல்லுதலாம்
குறிப்புப்பண்பு - மனதாற் குறித்துணரப் படும் பண்பு
குறிப்புப்பொருள் - குறிப்புச் சொல்லாலுணர்த்தப்படும் பொருள்
குறிப்புமறிநிலை - ஓரலங்காரம், அதுசொல்வேறுணர்த்த குறிப்பு வேறாகத் தோன்றவுரைத்தல்
குறிப்புரிச்சொல் - மனத்தாற் குறித்தறியப்படு முரிச்சொல் [உ-ம்] நுண்மை

குறிப்புவினை - பொருளிடங்காலஞ் சினை குணந்தொழிலடியாகத் தோற்றிக்கருத்தாவை மாத்திரம் விளக்குஞ் சொல்
குறிப்புவினைப்பகுபதம் - பொருளாதியாறுங் காரணமாகக் கருத்தாவொன்றையே விளக்கி நிற்பது
குறிப்பெஞ்சணி - ஓரணி, அது குறிப்பெச்சம்
குறிப்போலை - காரியங் குறித்திருக்குமோலை, சாதகவோலை
குறியர் - குள்ளர்
குறியவன் - குள்ளன்
குறியானவன் - நிதார்த்தன்
குறியிடம் - அடையாளம், அடையாளமுமிடமும்
குறியிடையீடு - குறியிடத் தொழுகாது தடைப்படல்
குறியீடு - நாமதாரணை, பெயரிடுதல்
குறில் - குற்றெழுத்து, நீட்டற்றது
குறுகலர் - பகைவர்
குறுகல் - அணுகல், குறைதல்
குறுகித்தல்-கோப முதலியவற்றாற் பார்க்குங் குறும்பார்வை
குறுகுதல் - கிட்டுதல், குறுத்தல், குறைதல், சுருங்குதல்
குறுகுத்தாளி - சிறுதாளி
குறுகுறுத்தல் - ஒலிக்குறிப்பு
குறுகுறுப்பு-குறட்டை, அஃதுயாக்கைக் குற்ற மைந் தினொன்று, சினக்குறிப்பு
குறுகுறுப்பை - குறட்டை
குறுகுறெனல் - ஒலிக்குறிப்பு
குறுக்கடி - குறுக்குநியாயம், குறுக்கு வழி
குறுக்கம் - குறுக்கினது, கௌரி பாஷாணம், சுருக்கம்
குறுக்கல் - குறைத்தல்
குறுக்கல்விகாரம் - நெடில்குறிலாதல்
குறுக்களவு - நடு அளவு [தல்
குறுக்கிடுதல் - இடையேசெல்லல், கிட்டு
குறுக்கு-ஊடு, குறுக்கென்னேவல், குறுமை, சுருக்கம், தடை, விட்டத்தளவு
குறுக்குக்கட்டு - மார்க்கட்டு
குறுக்குக்கேள்வி - மடிப்பான கேள்வி
குறுக்குச்சட்டம் - குறுக்குவளை
குறுக்குச்சார் - குறுஞ்சார் [திரம்
குறுக்குச்சூத்திரம்-சுருக்கமாயறியுஞ் சூத்
குறுக்குதல் - குறுகப்பண்ணுதல்
குறுக்குநோய் - சந்துப்பிடிப்பு
குறுக்குப்பாடு - குறுக்குவிட்ட அளவு
குறுக்குப்பாதை - குறுக்குவழி
குறுக்குப்புத்தி - எண்ணிக்கையற்றபுத்தி
குறுக்குமறுக்கு-இடைக்கிடை, தாறுமாறு
குறுக்குவிட்டம் - கைவிட்டம்
குறுக்குவிழுதல் - ஊடுவிழுதல்
குறுக்குவெட்டி - குறுக்குவழி
குறுக்கையர் - ஓர் வேளாளர், திருநாவுக்கரையர்
குறுங்கணக்கு - தனியட்சரங்கள்
குறுங்கண் - பலகணி
குறுங்கயிறு - சிறுகயிறு
குறுங்கலி - ஓர்பிரபந்தம், பாலையாழ்த்திறம், மருதப்புறம், அதுதலைமகன்முன்னின்று மாதர்பழிகூறல்
குறுங்கற்றலை - ஓர்மீன்
குறுங்காசு - ஓர்காசு
குறுங்காடு - சிறுகாடு
குறுங்கால் - குள்ளங்கால்
குறுங்கிண்ணி - வெண்கலம்
குறுங்குடியாள் - தாள்கம்
குறுங்கோல் - இரண்டுமுழத்தடி
குறுஞ்சாலி - இளமரம்
குறுஞ்சிரிப்பு - புன்னகை
குறுஞ்சீர்வண்ணம் - குற்றெழுத்துப்பயின்றுவருவது
குறுஞ்சுனை - சிறுபொய்கை
குறுணல் - சிறியது
குறுணி - ஓரளவு, சிறியது
குறுணை - குறுநொய்
குறுதல் - குத்தல், தரித்தல்
குறுத்தல் - குறுகுதல்
குறுத்தாள் - சிற்றடி
குறுநகை - புன்சிரிப்பு
குறுநடை - தளர்நடை
குறுநர் - பறிப்பார்
குறுநறுங்கண்ணி - குன்றிப்பூ
குறுநிலமன்னர் - குறும்பர், சிற்றரசர்
குறுநெளிப்பு - ஆங்காரம்,இறுமாப்பான அசைப்பு
குறுநொய் - குறுணை, சிறுநொய்
குறுந்தடி - குதிரைசெலுத்துங் கருவியினொன்று, குறுத்ததடி, பறைமுதலிய வடிக்குந்தடி [கை
குறுந்தறி - குறுந்தடி,சுவர்த்தறி, பொதி
குறுந்தாட்டு - குறுகியதாளையுடையது
குறுந்தாள் - சிற்றடி

குறுந்துணி - சீலைத்துணி
குறுந்துளசி - சிறுதுளசி
குறுந்தெரு - சிறுதெரு
குறுந்தொகை - ஒரு தமிழ்நூல்
குறுந்தொட்டி - காஞ்சொறி, சிற்றமட்டி, தோட்டி
குறுப்பி - பொன்னிமிளை
குறுமணல் - இரசதமணல்
குறுமகள் - இளையன்
குறுமாக்கள் - சிறுவர், பிள்ளைகள்
குறுமீன் - ஓர்மீன்
குறுமுட்டு - கிட்டுமானம், முட்டுத்தனம்
குறுமுழி - குறுவிழி, வெறித்தபார்வை
குறுமுனி - அகத்தியன்
குறுமை-அழகு, சிறுமை, சுருக்கம், பாவம்
குறும்பச்சி - இடைச்சி
குறும்பயிர் - இளம்பயிர்
குறும்பர் - குருநிலமன்னர், துற்சனர்
குறும்பன் - துற்சனன்
குறும்பாடு - பள்ளையாடு
குறும்பாட்டம் - குறும்புத்தனம்
குறும்பார்வை - குறுகித்தபார்வை, கொடியபார்வை
குறும்பி - காதழுக்கு
குறும்பிடி - உடைவாள், முட்டுப்பிடி
குறும்பிடையர் - பள்ளையாட்டிடையர்
குறும்பிவாங்கி - காதழுக்குவாருங் கருவி
குறும்பு - அரணிருக்கை, குறும்பர்சாதி, சிறுமை, பாலைநிலத்தார், பொல்லாங்கு, போர்
குறும்புத்தனம் - துட்டத்தனம்
குறும்புவன்னி - ஓர் புட்சாதி
குறும்புவன்னியன் - ஓர் சாதியான்
குறும்புள் } காடை
குறும்பூழ் }
குறும்பொறி - உதரபந்தம்
குறும்பொறை - காடு, குறுஞ்சிநிலத்தூர், சிறுமலை, மலை
குறும்பொறைநாடன் - முல்லைநிலத்தலைவன்
குறுவாழ்க்கை - அற்பவாழ்வு, வறுமை
குறுவாள் - சிறுவாள்
குறுவிசாரம் - கவலை
குறுவித்தல் - குறுகித்தல்
குறுவித்துப்பார்த்தல் - குரூரமாயுற்றுப் பார்த்தல்
குறுவிலை - ஒறுப்பு
குறுவிழி - கோபத்தாற் பயத்தாலுற்றுப் பார்த்தல்
குறுவிழிக்கொள்ளுதல் } வெறித்துப்பார்த்தல்
குறுவிழிவிழித்தல் }
குறுவேர்வை-அச்சத்தால்வேர்த்தல், சிறுவேர்வை
குறுணுத்தகடு } மலாம்பூசின்தகடு
குறுணுப்பட்டை }
குறூரம் - குரூரம்
குறை-அரசிறை, குறைந்திருப்பது, குறையென்னேவல், குற்றம், சேடம், தரித்திரம், தவறு, நிறைவற்றது, மன்றாட்டு, மிச்சம், வெறுப்பு
குறைசெய்தல் - வெட்டுதல்
குறைகூறல் - குறைசொல்லல்
குறைகோள் - இரத்தல்
குறைக்கண்ணுக்குறங்கல் - அரைக்கண்ணுக்கு நித்திரைசெய்தல்
குறைக்குதல் - குறைத்தல்
குறைச்சல் - ஒறுப்பு, தாழ்ச்சி
குறைஞ்சால் - உழுதகுறை
குறைதல் - கெடுதல், சிறுகல்
குறைத்தலைப்பிணம் - கவந்தம்
குறைத்தல் - குறுகுதல், சங்கரித்தல், சுருக்குதல், வெட்டுதல்
குறைந்தடைதல்-குறையிரந்துவேண்டல்
குறைநிறை - ஏற்றத்தாழ்ச்சி, குறைச்சல், நிறைச்சல்
குறைநேர்தல்-குறையைநீக்க உடன்படல்
குறைபாடு - ஈனம், குறைவு, குற்றத்திஞல் வந்தபாடு, தரித்திரம்
குறைப்பிராணன் - குற்றுயிர்
குறைப்பு - குறைத்தல்
குறையரவு - குக்குடசர்ப்பம்
குறையாற்றல் - குறைதீர்த்தல்
குறையிரத்தல் - பின்சென்று கேட்டல், குறையை நீக்கவேண்டுதல்
குறையுடல் - தலையற்றவுடல், கவந்தம்
குறையுயிர் - குற்றுயிர்
குறையொட்டி - உறையொட்டி
குறையொற்றுமையுருவகம் -உருவகத்திலோர் குறைதோன்றச் சொல்வது [உ-ம்] நெற்றிவிழியில்லாச் சங்கரன்
குறைவயிறு - குறைப்பசி
குறைவிலி - கடவுள், குறைவில்லாதவன்
குறைவு - ஈனம், வறுமை
குரேட்டை - காக்கணம், பீச்சுவிலாத்தி

குரேக்கை - குறட்டை
குற்குலு - குங்கிலியம்
குற்சலை - அவுரி
குற்சனம் - இகழ்ச்சி
குற்சிதம் - அசுத்தம், அருவருப்பு
குற்சித்தல் - அருவருத்தல்
குற்சிப்பு - அருவருப்பு.
குற்றை-இகழ்ச்சி,சுபாவகுணமொன்பதி ளொன்று, அஃது அருவருப்பு
குற்பகம் - நாணல்
குற்பம் - பரடு
குற்றமில்லான் - அருகன், கடவுள், மாசி [லான்
குற்றம்-அபராதம், குறை, தவறு,நோய், பழுது, பிழை,தீங்கு
குற்றம்பிடித்தல் - பிழைகாட்டல்
குற்றல்-இடித்தல்,குற்றுதல், நெரித்தல், பறித்தல்
குற்றவாளி-குற்ற முள்ளோன்
குற்றாலம் - ஒரு சிவஸ்தலம்
குற்றிசை - குறுஞ்சந்தம்
குற்றி - தறி
குற்றிகரம், குற்றியலிகரம் - மாத்திரை குறுகின விகரம்
குற்றியலுகரம், குற்றுகரம் - மாத்திரை குறுகின வுகரம்
குற்றுடைவாள் - சிறுவுடைவாள்
குற்றுதல் - குற்றல், இடித்தல், தறித்தல்
குற்றுயிர் - குறைப்பிராணன், குற்றுயி ரெழுத்து
குற்றேவல் - அடித்தொண்டு
குற்றெழுத்து - ஓர்மாத்திரையா யுச்சரிக் கப் படுமெழுத்து
குற்றுவாய் - ஓர்மீன், கடிவாய்
குற்றொற்று - குற்றெழுத்தின் கீழொற்று
குனட்டம் - அதிவிடையம்
குனட்டு - சேட்டை
குனட்டை, குனஷ்டை - துடுக்கு
குனைகம் - சிறுகாஞ்சொறி
குனைசம் - குன்றி
குனைபி - சுழிக்காற்று
குனி - குனியென்னேவல், வில்
குனிதல் - இரங்குதல், தலை தாழ்த்தல், துக்கப்படுதல், வளைதல்
குனித்தல்-அசைத்தல், ஆடல்,வளைத்தல்
குனிப்பு - ஆடல், கூத்தியின் விகற்பம், வளைப்பு
குனிவு - வளைவு, தாழ்வு
குனுகல், குனுகுதல் - சிணுங்கிப்பேசல்
குனுக்கம்- குணுக்கம்
குனை - கூர்ப்பக்கம்
குன்மசூலை - ஓர்நோய்
குன்மபுரட்டு - ஓர்நோய்
குன்மம்-ஓர்நோய், குலுமம் அஃதுசேனை முகம் மூன்றுகொண்டது, தூறு
குன்மவலி - ஓர்நோய்
குன்மவாயு - ஓர்நோய்
குன்மவியாதி - குன்மநோய்
குன்றக்கூறல் - நூல்வழுவிலொன்று
குன்றத்துச்சித்தி - தாலம்பபாஷாணம்
குன்றம் - மலை
குன்றல் - குலைதல், குறைதல், கெடுதல்
குன்றவர், குன்றவாணர் - குறிஞ்சிநிலமாக்கள், வேடர்
குன்றவில்லி - சிவன், துருசி
குன்றாவாடை - வடகீழ்க்காற்று
குன்றாவாழ்வு - குறையாதசெல்வம்
குன்றி - ஓர்கொடி, மனோசிலை
குன்றிநிறக்கண்ணன் - காட்டுப்பன்றி
குன்றிநிறமணி - குருவிந்தம்பதுமராகம்
குன்றிமணி - குன்றிக்கொட்டை
குன்றியலுகரம் - குற்றியலுகரம்
குன்றிவேர் - அதிமதுரம்
குன்று - குன்றென்னேவல், சதயநாள், சிறுமலை, மலை
குன்றுகூப்பிடுதல் - எதிரொலி யெழக் கூப்பிடுதல்
குன்றுதல் - குறைதல், கெடுதல், மெலி தல், வாடல்
குன்றுவர் - வேடர்
குன்றுவாடை - வடமேல்காற்று
குன்றெடுத்தோன் - கண்ணன்
குன்றெறிந்தோன் - குமரன்
குன்றேந்தி - கிருஷ்ணன்

கூ ஓரெழுத்து, கூவென்னேவல், பூமி, மலங்கழித்தல், கூவுதல்
கூகமானம் - மறைவு
கூகம் - ஆந்தை, கூகை, மறைத்தசொல், எள்
கூகனம் - அசப்பியவார்த்தை, மறைத்த சொல்
கூகளம் - மாய்மாலம்
கூகாகம் - கழுகு
கூகாரி - காகம்
கூகு - எட்டுவயதுப்பெண்
கூகூ - அச்சப்பொருட்கு மோரிடைச் சொல்
கூகை - ஓர் பருந்து, கோட்டான், ஒரு கொடி
கூகைக்கட்டி } பொன்னுக்கு வீங்கி
கூகைநீர்க்கட்டி }
கூகைநீறு - ஓர்மருந்து, காட்டெருமைப் பால், கிழங்குநீர்
கூகைவீக்கம் - கூகைக்கட்டி
கூக்குரல் - கூப்பிடுமொலி, முறையீடு
கூசமாண்டம் - பூசணி
கூசம் - முலை
கூசல் - அச்சக்குறிப்பு, அச்சம், கூக்குரல், கூசுதல், நாணுதல்
கூசனம் - உதாசினம், மறைத்தசொல்
கூசா } மண், வெண்கல முதலியவற்றாற் செய்த ஒரு பாத்திரம்
கூஜா }
கூசி } எழுதுகோல்
கூசிகை }
கூசிதம் - புட்குரல்
கூசுதல் - கண் பல் முதலிய கூசுதல், நாணுதல், பயப்படல்
கூச்சக்காரன் - சங்கோசமுள்ளவன்
கூச்சத்தம் - கூக்குரல்
கூச்சந்தெளிதல் - சங்கோசந்தீர்தல்
கூச்சம் - அச்சம், கண் பல் முதலியவற்றின் கூச்சம், நாணம், வெட்கம்
கூச்சலிடல் - இரைதல், கூக்குரலிடுதல்
கூச்சல் - இரைச்சல், கூக்குரல்
கூச்சி - சவரிலோத்திரம்
கூச்சிதம் } கடம்பு
கூச்சிரம் }
கூச்சு - கூர்ச்சு
கூட - ஒருங்கு, சேர, தானும் [உ-ம்] எனக்குக்கூடப் பயம்

கூடகம்-கொழு, வஞ்சனை, உடம்பினுள்
கூடகாரகன் } கள்வன், பொய்யன், வஞ்சகன்
கூடகாரன் }
கூடகிருதன் - சிவன்
கூடசதுக்கம்-ஓர்பிரபந்தம்,மிறைக்கவியினொன்று, அஃது ஈற்றடி ஏனை மூன்றடியுள்ளுஞ் சொற்புகா வெழுத்துக் கரந்து நிற்கப் பாடுவது
கூடசன் - சோரபுத்திரன்
கூடசாசனம் - கள்ளத்தீர்வை
கூடசாட்சி - பொய்ச்சாட்சி
கூடசாரன் } அந்தரங்க தூதன்
கூடசாரி }
கூடசாலம் - ஓர் நரகு
கூடசான்மலி - பட்டுநூல் மரம்
கூடசுவணம் - கலப்புப்பொன்
கூடணை - மயிற்றோகைக்கண்
கூடத்தம் } நிருவிகாரம்
கூடஸ்தம் }
கூடத்தர்-ஆன்மாகத்தாவுட னயிக்கப்படு [தல்
கூடத்தன் } நிருவிகாரசைதந்நியன்,முதன்மையானவன்
கூடஸ்தன் }
கூடபதம் - பாம்புபுத்தி
கூடபலகம் - சூலை, யானைநோய்
கூடபாஷிதம் - அந்தரங்க சம்பாஷணை
கூடபாதரம் - பாம்பு
கூடபுருஷர் - ஒற்றர், சோரநாயகர்
கூடபூர்வம் - ஹஸ்திசுரம்
கூடமார்க்கம் - கள்ளவழி
கூடமைதுனம் - காகம்
கூடம் - அண்டம், அறை, இந்திரசாலம், இரகசியம், உறையறிகருவி, எள், ஏகாந்தம், கலப்பை, கூட்டம், கொழு, தானியக்குவியல், கொல்லன் சம்மட்டி, கோளகபாஷாணம், தீங்கு, புதையல், பொய், மலையினுச்சி, மறைவு, மாயம், யாழ்க்குற்றம், நான்கினொன்று, அது இசை நிரவாதது, தன் பகையாகிய ஆறூநரம்பினிசையிற்குன்றித் தன்னோசை மழுங்கல், யானைப்பந்தி, வஞ்சகம், வீடு, சாலை, நகரவாயில்
கூடம்பில் - சுரை
கூடயந்திரம் - பொறி, வலை
கூடலர் - பகைவர்
கூடலூர்கிழார்-எட்டுத்தொகையுளொன்றான ஐங்குறுநூறு தொகுத்தவர்;முதுமொழிக்காஞ்சி யியற்றியவர்

கூடல் - அடுத்தல், இயலல், ஓர் விளையாட்டு, கழிமுகம், கூடுதல், சேர்தல், புணர்தல், மதுரை, மர முதலியவற்றின் செறிவு
கூடல்வளைத்தல் - மகளிர் விளையாட்டினென்று
கூடல்வாய் - ஒடுங்கிய கால்வாய்
கூடவற்சை - தவளை
கூடற்குறி-தலைமகன் பிரிந்துழித் தலைவி பார்க்குங் குறி
கூடற்கோ - பாண்டியன்
கூடற்பற்றை - காடு, வனம்
கூடாகாரம் - மேல்வீடு
கூடாக்கு - புகையிலை
கூடாங்கம் - ஆமை
கூடாதகூட்டம் - தீயோர் நட்பு
கூடாதது - இயலாதது, தகாதது, பொருந்தாதது
கூடாநட்பு - புறநட்பு.
கூடாமை - இயலாமை, பொருந்தாமை
கூடாமையணி - ஓரலங்காரம், அஃது, ஒரு காரியம்பெறத் தலையருமை யுடையதாய்ச் சொல்லுதல்
கூடாரக்கட்டில் - மூடுகட்டில்
கூடாரப்பல்லக்கு - மூடுசிவிகை
கூடாரமடித்தல் - கூடாரம்போடுதல்
கூடாரம் - படாம்வீடு, பெருங்காயம், வண்டிகௌசனை, வண்டிக்கூண்டு, நெற்கூடு
கூடாரவண்டி - மேல்மூடிய வண்டி
கூடார் - பகைவர்
கூடார்த்தபாஷிதம் - கட்டுக்கதை
கூடாவியற்கைவிலக்கு - ஓரலங்காரம் அது கூடாததனைக் கூடுவதாகக் கூறி விலக்கல் [உ-ம்]சீதசந்தனந்தீக்காலும்
கூடாவுவமை - ஒருபொருட்கு இயல்பா யில்லாதவற்றை யுள்ளதாகச் சொல்லியதனை ஒன்றற்குவமையாக்கி யுரைப்பது [உ-ம்]காமுகர்க்குத் தண்மதியந் தீக்கால்வபோலும்
கூடாவொழுக்கம் - கள்ளவேடம், தீய வொழுக்கம்
கூடியது - இயன்றது, ஏற்றது, கிடைத்தது, சேர்ந்தது
கூடிலி - தசைதின்போன், மன்மதன்
கூடு - அடைப்பு, உடம்பு, உறை, கூடென்னேவல், பறவைக்கூடு
கூடுங்கழுந்தும் - துளையுங்கழுந்தும்
கூடுதல்-இயலுதல், ஏற்றிருத்தல், கிடைத்தல், சேருதல், புணர்தல், அதிகமாதல்
கூடுமியற்கைவிலக்கு-ஓரலங்காரம், அது கூடுவதனைக் கூடுவதாகக்கூறிவிலக்குவது [உ-ம்]கைவளைசோர்ந்தாவிகரைந்துருகுவர், மெய்வெதும்பப் பூத்தகையுஞ் செங்காந்தள் பொங்கொலிநீர்ஞாலத்துத் தீர்த்தகையார்க் கீதேசெயல்
கூடுவிட்டுக்கூடுபாய்தல்-ஒருடம்பை விட்டான்மா மற்றோருடம்பிற் புகுதல், பரகாயப்பிரவேசம்
கூடுவிழுதல் - ஆணிச்சீ விழுதல், சாதல், வியாதியின்வேர் கழலுதல்
கூடுவைத்தல் - சிலந்தியினுணிச்சிதல், காய்ந்துசவ்வுபற்றல், பட்சிகள் கூடுகட்டுதல், வியாதிவேர்வைத்துப் பலத்தல்
கூடை - கூத்தின்விகற்பம், கோரியை பூக்கூடை முதலியன
கூடைப்பாடல் - சொற்செறிவும் இசைச் செறிவுமுடையது, இயக்கம் நான்கினுளொன்று
கூடையன் - பருத்தவன்
கூடோற்பன்னன் - சோரபுத்திரன்
கூட்டம்-இனம்,சங்கம், சிநேகம், திரள், தொகுதி,பிண்ணாக்கு,புணர்ச்சி,போர், மிகுதி, மேவினர்
கூஷ்டரம்-வண்டில்
கூட்டுரவு - கூட்டம்
கூட்டரிசி - கரிக்கரைக்குமரிசி
கூட்டல் - அதிகப்படுத்தல், சேர்த்தல், சேர்த்துண்டபண்ணல், பலவினத்தை யொன்றாக்கல்
கூட்டவணி - ஓரலங்காரம், அது பகையில்லாமையாலொரு காலத்துக் கூடத்தக்க பொருளுக்குக் கூட்டத்தைச் சொல்லுதல், பலகாரணங்கள் கூடுதலோர் காரியம் பிறத்தலுமாம்
கூட்டற்றவன் - ஆசாரங் குலைந்தவன், கூடாதவன்
கூட்டாகுழப்பம் - தாறுமாறு
கூட்டாமை சேர்க்காமை
கூட்டாளி - கூடி நடக்கிறவன், தோழன், பங்காளி

கூட்டிமுடித்தல் - தெய்வங் கூட்டி நிறை வேற்றல்
கூட்டியம் - சுவர்
கூட்டு - உறவு, கலப்பு, கறிக்கூட்டு, கூட் டென்னேவல், சம்பந்தம், சேர்மானம், கொள்ளே, சகாயம், மட்டிரள்
கூட்டுக்கச்சவடம் - கூட்டுவியாபாரம்
கூட்டுக்கணக்கு - எண் கூட்டுதல்
கூட்டுக்கறி - குழம்புக்கறி
கூட்டுக்கால் - இருகாலேயு மோரடியில் மிதித்து நிற்றல்
கூட்டுணல் - கூட்டியுண்ணல்
கூட்டுண்ணல் - கொள்ளேகொண் டுண் ணல், கவர்தல்
கூட்டுதல் - அதிகப்படுத்தல், சேர்த்தல், சேர்த்துண்டுபண்ணல், பலவினத்தை யொன்ருக்கல்
கூட்டுத்தட்டு - ஓர் பாத்திரம்
கூட்டுத்தொழில் - கூடித்தொழி னடத் துதல், வசியவித்தை
கூட்டுப்பயிர் - கூடிப்பயிரிடுதல்
கூட்டுப்பல்லக்கு - ஓர்விதப் பல்லக்கு
கூட்டுமூட்டு - ஒன்றுபடுத்தல், கோள், சேர்மானமாக்கல்
கூட்டுமொழி - கூட்டுச்சொல்
கூட்டுவர்த்தகம் - கூட்டு வியாபாரம்
கூட்டுறவு - இணேந்த உறவு, சேர்க்கை
கூட்டெழுத்து - தொடரெழுத்து, பல வெழுத்தொலியொன்ருயிருப்பது
கூஷ்மாண்டம், கூஸ்மாண்டம் } நீற்றுப்பூசுணி
கூணி - கூனி
கூணிகை - வீணேயிஞேருறுப்பு
கூண்டல் - கூடல்
கூண்டு - கூடு, பறவைக்கூடு
கூண்டுதல் - கூடுதல்
கூண்மாண்டம் - நீற்றுப்பூசுணி
கூதம் - குதம், கூகாளி, தூதுளே, வெள் ளரி
கூதரன் - தூரஸ்திரீ முயங்கிப் பெற்ற [பிள்ளே
கூதலோடுதல் - குளிர்தல்
கூதல் - குளிர்
கூதல்விறைத்தல் - கூதலோடுதல்
கூதளம் - கூதாளிச்செடி, தூதளே, வெள் ளரி
கூதறை - இழிந்தது, கிழியல், கூட்டற் [றது
கூதற்காய்தல் - குளிர்காய்தல்
கூதனம் - மறைத்த சொல்
கூதாரி - வெள்ளரி
கூதாளம், கூதாளி } கூதளம்
கூதிர் - ஐப்பசி கார்த்திகையின் பருவம், காற்று, கூதல், பனிக்காற்று
கூதிர்காலம் - குளிர்காலம்
கூதிர்காலவுரிமை-கூதிர்காற்று வீசலும், குருகு, அன்னம், கொக்கு, சகோரம், சங்கு, நண்டு, நத்தை, இவை மகிழ்த லும், நீர்தெளிதலும், மீனினஞ்செனித் தலும், மேகஞ்சூல் கொள்ளலும், பாரி சாதம், சிறுசண்பகம், செம்பரத்தை, சந்தனம், நாணல் இவை மலர்தலும், பல பறவை விலங்கு மக்கள் வருந்தலு மாகும்
கூதிர்காற்று - குளிர்காற்று
கூதிர்ப்பருவம் - குளிர்காலம்
கூதுளம் - கூதாளி
கூதை - காற்று, குளிர்காற்று
கூத்தரிசி - குத்தி விற்கு மரிசி
கூத்தநூல்-தாளவகையொத்து என்னும் நாடகநூலோடியைந்தவை, மதிவாண ஞரியற்றிய ஒருநாடகத் தமிழ் நூல்
கூத்தர் - நாடகர்
கூத்தன் - உயிர், கடவுள், சிவன், துருசி, நாடகன்
கூத்தன்கவிச்சக்கிரவர்த்தி - தக்கயாகப் பரணியியற்றிய ஆசிரியர்
கூத்தன்குதம்பை - மூக்கொற்றிப்பூண்டு, காட்டுச் செவந்தி
கூத்தாடி - கூத்தாடுவான்
கூத்தாடுதல் - தோரத்தமாடுதல், நடனம் பண்ணுதல், பெருமை காட்டல்
கூத்தாட்டு - தோரத்தம், நடனம்
கூத்தி, கூத்திச்சி } நாடகக் கன்னிகை, வேசி, வைப்பாட்டி
கூத்து - ஆரம்பரம், நடனம், நாடகம், விளேயாட்டு
கூத்துகந்தோன் - சிவன்
கூத்துக்களரி - நடனசாலே
கூத்துப்பாட்டு - நாடகக்கவி
கூத்துவிடுதல் - ஏவிவிடுதல், கூத்தாடு வோனேக்களரியில் விடல்
கூந்தலறுகு - ஓாறுகு
கூந்தலாற்றுதல் - மயிராற்றுதல்

கூந்தல் - கமுகோலை, குதிரைமயிர், கூந்தற்கமுகு, கூந்தற்பனை, கூந்தற்றெங்கு, பனையோலை, பெண்மயிர், மயிர், மயிற்றோகை, யானைக்கழுத்தடி மயிர், தலை
கூந்தற்கமுகு - ஓர் கமுகு
கூந்தற்பனை - ஓர் மரம்
கூந்தற்பாசி - ஓர் நீர்ப்பூடு
கூந்தற்பூகம் - கூந்தற்கமுகு
கூந்தாலம், கூந்தாலி } குந்தாலி, கற்பாறை வெட்டி யுடைக்குங் கருவி
கூபகம் - எண்ணெய்த்துருத்தி, கிணறு, சிற்றூற்றுக்குழி, பாடை, பாய்மரம்
கூபம் - கிணறு, குழி
கூபரங்கம் - உரோமப் பொடிப்பு
கூபரம் - முழங்கை
கூபரி - தேர்
கூபாரம் - கடல்
கூபிகை - நீரிடைப்பட்ட மலை முதலியன
கூப்பரம் - முழங்கை
கூப்பல் - கூப்புதல்
கூப்பாடு - கூப்பீடு
கூப்பிடல், கூப்பிடுதல் } அழைத்தல்
கூப்பீடு - குரோசம், கூப்பிடல்
கூப்பீடுதூரம் - கூப்பிட்ட சத்தங்கேட்கு மெல்லை, குரோசம்
கூப்புதல்-குவியச் செய்தல், சுருக்குதல், கைகுவித்தல்
கூமம் - நீர்நிலை
கூமரை - கோங்குமரம்
கூமா - ஓர் மரம்
கூம்பல் - ஒடுங்கல், குமிழமரம், குவிதல்
கூம்பு - கூம்பென்னேவல், சேறு, தேர்க்கொடிஞ்சி, பாய்மரம், முகை
கூம்புதல் - குவிதல், குறுவுதல், சுருங்குதல், ஒடுங்குதல்
கூரணம் - உத்தியோகம், கொடுமை, கோட்டகசாலை, பாகல், பொறுமை
கூரம் - கொடுமை, கோட்டகசாலை, பாகல், பொறுமை, முயற்சி
கூரரம் - முழங்கை
கூரல் - ஓர் மீன், புள்ளிறகு, பெண்மயிர்
கூரன் - கூர்நெல், நாய்
கூராம்பாய்ச்சி, கூராம்பிளாச்சு } சலாகைப்பாரை
கூரான் - ஓர் பூடு, குல்லான்
கூரியது - கூர்மையுள்ளது
கூரியம் - கூர்மை
கூரியன் - கூர்மையுள்ளவன், புதன்
கூரிலவணம் - அமரியுப்பு
கூருதல் - கூர்தல்
கூரை - சிற்றில், வீட்டின்மேற்புறம், இறப்பு, வீடு
கூரைதட்டல் - ஆண்பிள்ளைப் பிறப்புக்குச் செய்யுமோர் மகிழ்ச்சிக் குறி
கூர் - இலைக்காம்பு, காரம், கூரென்னேவல், கூர்மை, நுனி, மிகுதி, சிறப்பு
கூர்கேவு - வெண்கடுகு
கூர்க்கதிர் - ஓர் கருவி
கூர்க்கறுப்பன் - ஓர் நெல்
கூர்ங்கோடு - கூரிய கொம்பு
கூர்ச்சகம் - தந்தவானக்குச்சி
கூர்ச்சகன் - தையற்காரன்
கூர்ச்சசேகரம் - தெங்கு
கூர்ச்சம் - எத்து, தருப்பை, தலை, தாடி, புருவமத்தி, மாய்மாலம், வயிரிப்பு, வீண்புகழ்ச்சி
கூர்ச்சரம் - தேயமைம்பத்தாறினொன்று
கூர்ச்சரி - ஓரிராகம்
கூர்ச்சிகை-ஊசி, எழுதுகோல், பூவரும்பு
கூர்ச்சு - கூருள்ளதடி
கூர்ச்சை ஆசநம், குலஸ்திரீ, தருப்பை
கூர்தல் - ஆராய்தல், கூறுதல், நுணுகுதல், மிகுதல், விரும்புதல், செய்தல்
கூர்த்தம் - விளையாட்டு
கூர்த்தல் - உவர்த்தல், மிகுத்தல், கோபமிகுதல்
கூர்த்தவி - சித்திரைமாத பௌர்ணிமை
கூர்த்தனம் - பொழுதுபோக்கு
கூர்த்திகை - ஆயுதப்பொது
கூர்ந்தபுத்தி கூரிய விவேகம்
கூர்ப்பது - உள்ளது சிறத்தல், உறைப்பு, கூர்மை, மிகுதி
கூர்ப்பம் - புருவமத்தி
கூர்ப்பரம் - முழங்கை
கூர்ப்பருவம் - முழங்கை, முழந்தாள்
கூர்ப்பாசகம் - முலைக்கச்சு
கூர்ப்பாசம் - இரவிக்கை
கூர்ப்பு - உள்ளத்தின் மிகுதல், உப்புறைத்தல், மிகுதி, கூர்மை
கூர்மபிரிட்டகம், கூர்மபிரிட்டம் } ஆமையோடு

கூர்மபுராணம்-பதினெண் புராணங்களி லொன்று
கூர்மம் - ஆமை, திருமா லவதாரத்தொ ன்று, பதினெண் புராணத்தொன்று
கூர்மராசன் - ஆதிகூர்மம்
கூர்மன் - உரோமம் புளகிப்பித் திமைப் பிக்கும் வாயு
கூர்மாண்டர் - ஒருருத்திரர்
கூர்மாவதாரம் - திருப்பாற்கடலைக்கடை ய நட்டமத்தாகிய மந்தரமலையைத் தாங்கத்திருமால்கொண்ட கூர்ம வடி வம்
கூர்முள் - குதிரை செலுத்துங்கருவி
கூர்மை - அறிவு, கல்லுப்பு, கூர், நுண் மை, நுனி, புத்திநுட்பம்
கூர்மைக்கரிவாள் - சவுக்காரம்
கூர்மைபார்த்தல் - நுண்மைபார்த்தல்
கூலகம் - கறையான்புற்று, குவியல்
கூலங்கஷம் - கடல், உளவு, முழுவிவரம்
கூலங்கஷை - நதி
கூலம் - அதிட்டம், ஆற்றங்கரை, கடற் கரை, கடைவீதி, கரை, காராமணி, குவியல், சிறுவரம்பு, நீர்நிலை, பசு, படையணி, பலபண்டம், பாகல், மந்தி, மரை, முசு, விலங்கின்வால், வரம்பு
கூலவதி - யாறு
கூலவாணிகன்சாத்தனார் - மணிமேகலை நூலாசிரியர்
கூலி - சம்பளம், வேலைகண்டு கொடுப் பது, கூலிக்காரன்
கூலிக்காரன் - வேலையாள்
கூலிப்பாடு - கூலிப்பிழைப்பு
கூவநூல் - கீழ்நீர்க்குறியறிசாத்திரம்
கூவம் - கிணறு, கூகைநீறு, சிவ ஸ்தலங் களிலொன்று
கூவரம் - ஏர்க்கால்
கூவரன் - கூனன்
கூவரி - பண்டி
கூவலம் - பலநிறமுள்ள ஆம்பற்பூ
கூவலர் - கூவநூல் வல்லோர்
கூவல் - அழைத்தல், கிணறு, சொல்லு தல், பள்ளம்
கூவியர் - மடையர், அப்பவாணிகர்
கூவிரம் - தேரிடக்கியம், தேர், தேர்க் கொடுஞ்சி, வில்வமரம்
கூவிரி - தேர்
கூவிளங்கனி - நேர்நிரை, நிரையசைச் சீர்க்குவாய்பாடு, வில்வப்பழம்
கூவிளங்காய் - நேர்நிரை நேரசைச்சீர்க் குவாய்பாடு
கூவிளநறுநிழல் - நேர்நிரை நிரைநிரைய சைச்சீர்க்குவாய்பாடு
கூவிளநறும்பூ - நேர்நிரை நிரைநேரசை ச்சீர்க்குவாய்பாடு
கூவிளந்தண்ணிழல்-நேர்நிரை நேர்நிரை யசைச்சீர்க்குவாய்பாடு
கூவிளந்தண்பூ-நேர்நிரைநேர் நேரசைச் சீர்க்குவாய்பாடு
கூவிளம் - கோளக பாஷாணம், நேர்நி ரையசைச்சீர்க்குவாய்பாடு, வில்வம்
கூவிளி-அழைப்பு, கூச்சல், கூப்பிடுதூரம்
கூவிளித்தல் - சாப்பிடல்
கூவிளை-கோளகபாஷாணம், வில்வமரம்
கூவுதல் - அழைத்தல், சேவல் முதலிய கூவுதல், ஓலமிடுதல், வீரகோஷஞ் செய்தல்
கூவுவான் - சேவல்
கூவெனல் - அழைத்தல், ஆரம்பித்தல், கூவென்குதல்
கூவை - கூகை, ஓர் கிழங்கு
கூழங்கை - குறட்கை, குறைந்தகை
கூழம் - எள்ளு
கூழன் - ஓர் பலா
கூழா - நறுவிலி மரம்
கூழாங்கல் - ஓர் கல், பரற்கல்
கூழாமட்டி - மந்தையன்
கூழாமணி - கூழ்முன்னை
கூழாம்பாணி - கரையல்
கூழான் - கண்டகிக்கல்
கூழுக்குப்பாடி - அங்கிடுதத்தி, ஔவை
கூழை - இறகு, கடையின்மை, கவியுறு ப்பிலொன்று, சேறு, நடு, நீளங்குறைந் தது, படைவகுப்பு, பாம்பு, பிற்படை, பெண்மயிர், பொன், மந்தம், மயிற் றோகை, நெல்
கூழைக்கடா - ஓர் கொக்கு
கூழைத்தொடை - செய்யுளிலோருறுப்பு
கூழைமுரண் - கடைச்சீரொழிந்த மற் றெல்லாச்சீர்க்கண்ணும் முரண் வரத் தொடுப்பது
கூழைமோனை - இறுதிச் சீர்க்கணின்றி யொழிந்த சீர்க்கண் மோனை வரத் தொடுப்பது
கூழையளபெடை - கடைச்சொல்லொ ழிந்த மற்றெல்லாவற்றின் கண்ணுமள பெடைவரத்தொடுப்பது

கூழையன் - மடயசாம்பிராணி
கூழையியைபு-முதற்சீரொழிந்தமற்றைச் சீர்க்கணியைபு வரத்தொடுப்பது
கூழையெதுகை-கடைச்சீரொழிந்த மற் றெல்லாச்சீர்க்கண்ணு மெதுகை வரத் தொடுப்பது
கூழ் - உணவு, கஷாயம், சோறு, நறு விலி, பயிர், பொன், பொருள்
கூழ்ப்பாண்டம் - சாம்பற்பூசுணை
கூழ்முட்டை - கருக்கெட்டமுட்டை
கூழ்முன்னை - ஓர் கீரை
கூழ்வரகு - கேழ்வரகு
கூளம் - கஞ்சல், குப்பை, திப்பி
கூளி - உறவு, எருது, குறள், குற்றம், சுற் றம், தொகுதி, பூதம், பெருங்கழுகு, பேய், பொலியெருது, வலிமை
கூளியர் - படைவீரர், வேடர், ஆறலைக் கள்வர், சேவித்து நிற்பார்
கூறல்-கூறுதல், நாகபாஷாணம், ஆமை
கூறிடல் - கூறுசெய்தல், கூறுதல்
கூறியதுகூறல் - நூற்குற்றம்பத்தினுன்
கூறியான் - சிவியார் தலைவன் [று
கூறு-அறிவிக்கை, எள்ளு, காரணம், கூ றென்னேவல், தன்மை, பங்கு, பிரிவு, பாதி, வகை, கூறுபாடு
கூறுகொள்ளுதல் - அமர்த்துதல்
கூறுதல் - சொல்லுதல், விளக்கிச் சொல் லுதல், விற்றல்
கூறுபடுத்தல் - பிரித்தல்
கூறுபாடு - கூறு, பகுதி, வகை
கூறை - சீலை, மணவாட்டியுடுக்கும் புதுப் புடவை
கூறைப்பாய் - தோணிப்பாய்
கூரோலை - கூற்ரோலை
கூற்சரம் - கூர்ச்சரம்
கூற்றம் - கொடியசத்துரு, சொல், நமன்
கூற்றன் - கொடியசத்துரு, நமன்
கூற்று - காலன், சொல், நமன்
கூற்றுதைத்தோன் - சிவன்
கூற்றுவன் - கொடியசத்துரு, நமன்
கூற்ரோலை-பங்குபிரித்தெழுதின வோலை
கூனத்தை - ஏலம்
கூனலங்காய் - புளியங்காய்
கூனல் - கோணல், சங்கு, நத்தை, பி றைச்சந்திரன், வளைதல், வளைவு
கூனன் - ஆமை, கூனுள்ளோன், சங்கு, நத்தை, நாரை
கூனன்முதுகு - ஆமையோடு
கூனி - குசினி, கூனுள்ளோன், கோணி யது, சிற்றிறால், மந்தரை, வசவி
கூனிக்குயம், கூனிரும்பு } அரிவாள்
கூனுதல் - ஒடுங்குதல், வளைதல்
கூனை - கருப்பஞ்சாறடுகூன், கொடிப்பட் டை, வேள்விக்குண்டம்
கூன் - ஆந்தை, உறுப்புக்குறை யெட்டி னொன்று, கூனன், கூனென்னேவல், நத்தை, வளைவு, வெண்பா முதலிய செய்யுட்களின் முதலடியி னொரோவி டத்துப்பொருள்படத் தனித்து நிற் பது
கூன்கிடை - யாக்கைக்குற்ற மைந்தினொ ன்று, அஃது வளைந்துகொண்டு கிடத் தல்
கூன்பாண்டியன்-ஓர் பாண்டியராசன்
கூன்முதுகு - ஆமையோடு

---

**கெ** ககர வர்க்கத்து ஏழாமெழுத்து

கெகராசி - பூலா
கெக்கட்டம்-அட்டகாசம், மிகச்சிரித்தல்
கெக்கரித்தல்-கடினிப்பு, கொக்கரித்தல்
கெக்கலி - மகிழ்வு
கெக்கலிகொட்டல் - மகிழ்ச்சியாற் கை கொட்டல்
கெக்கலித்தல் - மகிழ்தல்
கெக்களம் - கெக்கட்டம்
கெக்களித்தல் - தோல்விகாட்டல், நெளி தல், வளைதல்
கெக்களிப்பு - நெளிவு
கெசகன்னம் - யானை செவியை யசைப் பதுபோற் காதையசைக்கும் வித்தை
கெசகன்னி - வெருகு
கெசமாமுட்டி - எட்டி
கெசம் - இரண்டுமுழ அளவு, யானை
கெசாசனை - அரசு
கெசாசைநா - கையாந்தகரை
கெச்சக்காய் - கழற்சிக்காய்
கெச்சங்கெட்டவன் - நாணமில்லோன்
கெச்சம் - சிறுசதங்கை, முல்லை, கொவ் வை
கெச்சிதநடை - உல்லாசநடை

கெச்சிதம் - கெற்சிதம்
கெச்சுக்கெச்செனல்-ஒலிக்குறிப்பு, வருத்தல்
கெச்சை - சிறுசதங்கை
கெச்சைநடை } உச்சாகமான நடை
கெச்சைமிதி }
கெஞ்சல் - கெஞ்சுதல்
கெஞ்சுதல் - மன்றாடுதல், வருந்திக்கேட்டல்
கெடகம் - புருமுட்டி
கெடலணங்கு - மூதேவி
கெடவரல் - மகளிர் விளையாட்டு
கெடாரம் - கடாரம், கடியாரம்
கெடி - அதிபத்தியம், ஊர், கீர்த்தி, கெடியென்னேவல், துருக்கம், பயம்
கெடிஸ்தலம்-அதிகார விசாரணைகதித்த விடம், இராஜதானி
கெடித்தல் - பயப்படல்
கெடிமண்டுதல் - அஞ்சுதல்
கெடியன் - அஞ்சப்பண்ணுவோன், அஞ்சாதவன், சமர்த்தன், சுறுக்கன், வீரன்
கெடிலம் - ஆழமான ஓடை, ஒடுங்கியபாதை, குகை, கூடலூருக்கருகிலோர் நதி
கெடிறு - ஓர் மீன்
கெடு-கெடுவென்னேவல், கேடு, தவணை, தறுவாய்
கெடுகுடி - கெடுதலையான சமுசாரம்
கெடுதலை - அழிவு, இழிவு, கேடு
கெடுதல் - சாதல், சாய்தல், பதனழிதல், பழுதாதல்
கெடுதல்விகாரம் - எழுத்துக்கெடும் விகாரம்
கெடுதி - அழிவு, ஆபத்து, கெட்டுப்போன பொருள், கேடு, நட்டம்
கெடுத்தல் - அழித்தல், கெடச்செய்தல்
கெடுநினைவு } கெடத்தக்க புத்தி
கெடுபுத்தி }
கெடுப்பினை - வங்கமணல்
கெடுமதி - கேடான புத்தி
கெடும்பு - அருந்தல், கெடுதலை
கெடுவைத்தல் - கெடுக்கச் சொல்லுதல்
கெட்டகேடு - அதிகக்கேடு
கெட்டம் - தாடி
கெட்டாகெட்டி } மகா கெட்டி
கெட்டாரகெட்டி }
கெட்டி - உச்சிதம், உலோபகுணம், உறுதி, கெட்டியென்னேவல், சாமர்த்தியம், நேர்த்தி
கெட்டிக்காரன் - சமர்த்தன்
கெட்டித்தல் - கெட்டிபண்ணுதல்
கெட்டித்தனம்-சமர்த்து, திறம், திராணி
கெட்டிபண்ணுதல் - பலப்படுத்தல்
கெட்டிபத்திரம் - சாக்கிரதையான விசாரணை
கெட்டு - பக்கக்கிளை
கெட்டுவிடுதல் } கவர் விடுதல்
கெட்டுவைத்தல் }
கெணம் - சமூலம்
கெண்டம் - கண்டம், தத்து, அதுகால், அரை, முக்கால், முழுக்கெண்டம் என நான்குவகை
கெண்டல் - கெண்டுதல்
கெண்டன் - மிண்டன்
கெண்டி - கெண்டிகை, கெண்டியென்னேவல், தறித்தல், தறிவாய்
கெண்டிகை - கமண்டலம்
கெண்டித்தல் - கண்டித்தல்
கெண்டு - கெண்டை
கெண்டுதல்-அறுத்தல், வெட்டுதல், கிண்டுதல்
கெண்டூரம் - ஓர் மருந்து
கெண்டை-கயல், சரிகைத்தலைப்பு, சேல், முழந்தாளின் கீழ்க்கால்
கெண்டைக்கால் - முழந்தாளின்கீழ்
கெண்டைப்பீலி - மாதர் காலணியிலொன்று
கெண்டையேறல் } ஓர்வித வாயுநோய்
கெண்டைவாதம் }
கெதம் - கதம்
கெதி - கதி
கெத்திடல் } சில்லபொல்லமாய் வெட்டல்
கெத்திடுதல் }
கெத்து - உபாயம், பலகொத்து
கெத்துக்கெத்தெனல் - அச்சக் குறிப்பு, பலகத்துக் கத்துதல்
கெத்துதல் - கண்டம்போடுதல்
கெத்துவம் - பக்கல், போதல்
கெந்தகபூமி - காங்கையான பூமி
கெந்தகம் - கந்தகம், சேரகண்ட பாஷாணம், நாய்வேளை
கெந்தபந்தம் - கெவுரி பாஷாணம்
கெந்தம் - கந்தம்
கெந்தல் - நெளிதல்
கெந்தனம் - கோடகசாலை
கெந்தி - கந்தகம், பொன்னிமிளை, நெல்லிக்காய்
கெந்திகம் - பாம்புகொல்லி
கெந்தியரம் - ஆடுதின்னாப்பாளை
கெந்தியுப்பு - கெந்தகலவணம்
கெந்திவாருணி - பேய்த்தும்மட்டி

கெந்துதல் - புழு முதலிய நெளிதல்
கெபத்தம் - கிரணம்
கெபி - குகை, குழி, வளை
கெப்பிதம் - நிந்தை
கெமனம் - கமனம்
கெமிளித்தல் - கெம்பளித்தல்
கெமிளிப்பு - சந்தோஷம்
கெம்பத்து - இடம்பம்
கெம்பரை - கூடை, நெற்கூடை
கெம்பல் - ஆரவாரம், எழும்பல்
கெம்பளித்தல் - சந்தோஷித்தல்
கெம்பளிப்பு - ஆடம்பரம், சந்தோஷம்
கெம்பீரம்-ஆழம், பரிமளிப்பு, மேன்மை, வீரம், கம்பீரம்
கெம்பீரித்தல் - வீரங்காட்டுதல்
கெம்பு - ஓரிரத்தினக்கல், கெம்பென்னேவல்
கெம்புதல் - கிளர்தல், கொந்தளித்தல், ஆரவாரஞ்செய்தல்
கெய் - ஓர் மீன்
கெரடி - சிலம்பம்
கெரிட்டம் - கோவம்
கெரித்தல் - கரித்தல்
கெருடக்கொடி - தலைச்சுருள்வள்ளி
கெருடன் - கருடன்
கெருடி - கருடி, சிலம்பக்கூடம்
கெருமத்தம் - பறவை
கெருவம், கெர்வம் } கர்வம்
கெலத்தம் - பட்சித்தல்
கெலி, கெலிசு } ஆசை, கெலியென்னேவல், பயம், பெருவயிறு
கெலிகெட்டவன் - அங்கலாய்த்தவன்
கெலித்தல் - அஞ்சுதல், ஆசைப்படல், வெல்லல்
கெலிப்பு - அச்சம், ஆசை, வெற்றி
கெல்லல் - கிண்டல், தோண்டல்
கெல்லிக்கம்பு - கூராம்பாய்ச்சி
கெல்லுதல் - கிண்டல், தோண்டல்
கெவ்ரி - வெள்ளைக்காக்கணம்
கெவுடு - அட்சரக்கூடு
கெவுரா - துளசி
கெவுரிசங்கம் - இரட்டையுருத்திராட்சம்
கெவுரிபாஷாணம் - ஓர் மருந்து
கெவுளி - சிவந்தசங்கு, சிவந்தமுகிழுள்ள தேங்காய், பல்லி
கெவுளிச்செவ்விளை - ஓர்வகைத்தெங்கு
கெவுனி - பட்டணவாசல்
கெவ்வியம் - நாய்வேளை
கெழி - நட்பு
கெழீஇய - பொருந்தின
கெழு-இடைச்சொல் [உ-ம்] வேல்கெழுதடக்கை, சேர்த்திக்கை, நிறம், பிரகாசம்
கெழுதகை, கெழுதகைமை } உரிமை, நட்பு
கெழுதல் - கெழுமுதல்
கெழுமல் - அமைதல், சுற்றல், நிறைதல், முளைத்தல்
கெழுமுதல் - கற்றல், கூடுதல், நிறைதல், பொருந்துதல், முளைத்தல்
கெழுமை - கெழுமுதல், நிறம், பிரகாசம், வளமை
கெழுவல் - நிறைதல்
கெழுவுதல் - நிறைதல், பெற்றுக்கொள்ளுதல், பொருந்தல்
கெளிசு - காமாலை வீக்கம்
கெளிசுபற்றுதல் - பருவயிறு பற்றல்
கெளிதம் - கீழ்விழல், பட்சித்தல், பெருகல்
கெளித்தல் - நெளிதல்
கெளிப்பு - நெளிவு
கெளிர்ச்சல்லியம் - மீனெலும்பு
கெளிறு - ஓர் மீன்
கெறு, கெறுவம் } ஆங்காரம்
கெறுவி - ஆங்காரி, கெட்டிக்காரன்
கெறுவித்தல் - கறுவித்தல்
கெற்சிதம் - உக்கிராரம்பம், முழக்கம்
கெற்சித்தல் - உக்கிரமாயார்த்தல்
கெற்சிப்பு - முழக்கம்
கெற்பக்குவளை - கருப்பை
கெற்பத்தலைவன் - வீரம்
கெற்பத்தி - சாலக்கிராமம்
கெற்பம் - கருப்பம்
கெற்பவாயு - கருப்ப முண்டாகாமற்பண்ணும் வாயு
கெற்பவிப்புருதி - ஓர்விப்புருதி
கெற்பனி - கருப்பந்தரித்தவள்
கெற்பாதானம் - கருப்பந்தரித்த நாலாமாதஞ் செய்யுமோர் சடங்கு
கெற்பித்தல் - கருப்பந் தரித்தல்
கெற்பிரித்தல் - சுவாவித்தல்
கெற்பு - தத்துவம், திராணி
கெற்போட்டம் - மார்கழி மாதத்தி லவ்வம்மாதத்தைப்பற்றி முகிலோடுதல்

கே ககர வர்க்கத்தில் எட்டா மெழுத்து
கேகம் - மயிற்குரல், வீடு
கேகயம் - கெவுரி பாஷாணம், கேகயப் புள், தேசமைம்பத்தாறி னென்று, ம யில், அவுணமா
கேகயன் - கைகேயன்
கேகயி - தசரதன் மனைவி
கேகரம் - கடைக்கண்பார்வை
கேகரன் - ஓரக்கண்ணன்
கேகலன் - கூத்தாடி
கேகா - மயிற்குரல்
கேகாபலம் - மயில்
கேகி - மயில்
கேகுந்தகம் } கொழுக்கட்டை
கேகுந்தம் }
கேகை - மயிற்குரல்
கேகையி - கைகேயி
கேசகலாபம் - மயிர்முடி
கேசகன் - நாவிதன்
கேசகாரம் - ஓர்வகைக் கரும்பு, குதிரை தேய்க்குமோரிருப்புக்கருவி
கேசசிதன் - நாவிதன்
கேசதம் - கையாந்தகரை
கேசபத்ததி - மயிர்வகிர்
கேசபந்தம் - பூ முடித்த கொண்டை
கேசபந்தி - மயிரொழுங்கு, மயிர்முடி
கேசபாசி - குடுமி
கேசபாரம் - பெண்மயிர்
கேசமார்ச்சகம் } சீப்பு
கேசமார்ச்சனம் }
கேசமுட்டி - வேம்பு
கேசம் - குதிரைமயிர், துவக்கம், மயிர்ப் பொது, வேர், அவுரி
கேசரம்-அப்பிரகம், சிங்கம், பூங்கூந்தல், பூந்தாது, பெருங்காயம், மகிழமரம், மயிர், வண்டு
கேசரர் - வித்தியாதரர்
கேசரவரம் - குங்குமம்
கேசரி - அங்கயோகாதனத் தொன்று, அது பீசத்தின்கீழ்ச் சீவனியிடத்துப் பரட்டை வைத்திட முழங்கையை முழந்தாளில் வைத்தங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல், ஆகாய கம னம், குதிரை, சிங்கம், பெருங்காயம், புன்னை
கேசரிகம் - நாயுருவி
கேசரிஜன் - அநுமான்
கேசரியாதனம் - பீசத்தின்கீழ்ச் சீவனி யிடத்துப் பரட்டை வைத்திட முழங் கையை முழந்தாளிலங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல்
கேசரியோகம் - உதயத்துக்கு நாலில் ஏழிற் சந்திரன்நிற்பது, வியாழனுஞ் சந்திரனுங் கூடிநிற்பது
கேசரீகம் - நாயுருவி
கேசரை - பருத்திச்செடி
கேசவம் - அட்டாதசதருமநூலிலொன்று, நறுமணம், நிறைமயிர், பெண்வண்டு, பைசாசம், வண்டு
கேசவற்குத்தோழன் } அருச்சுனன்
கேசவற்றோழன் }
கேசவன்-சோழன்,நிறைமயிருள்ளோன், விட்டுணு
கேசவேசம் - கொண்டை
கேசாதிபாதம்-ஓர்பிரபந்தம் அஃது,கலி வெண்பாவான் முடிமுதலடி யளவுங் கூறுவது, சருவாங்கம் [சடங்கு
கேசாந்தம் - மயிர்களைந்து செய்யுமோர்
கேசாரசம் - ஓர் நாரத்தை
கேசாவாதனம் - இரண்டு முழந்தாளும் மாறி முடித்தூன்றி யிருமுழங்கையு முழந்தாளிற் படக் கைநீட்டி யிருப்பது
கேசி - கிருட்டிணன், சிங்கம், நிறைமயி ருள்ளோன்
கேசிகன் - நிறைமயிருள்ளோன்
கேசிசூதனன் } கண்ணன்
தேசிசூதனன் }
கேசிநி - நிறைகுழலுள்ளவள்
கேசிநிசூதனன் - விட்டுணு
கேசியா - தாழை [ழி
கேசினி - சங்கங்குப்பி,தமயந்தியின்தோ
கேசுகம் } ஓர்கிழங்கு
கேஞ்சலிகை }
கேடகம்-ஓர்யாறு, ஓர்வகை, ஊர்தி, பரி சை, பாசறை, புரூமுட்டி, மலைசெறி ந்தவூர், பலகை
கேடம் - கிளியாறு, மலைசெறிந்தவூர்
கேடயம் - பரிசை
கேடன் - கெட்டவன்
கேடிக்கை - கேளிக்கை
கேடிலுவகை - மோட்சம்
கேடு-அந்தக்கேடு, அழிவு, குறைவு,கெடு தல், சிதைவு, பொல்லாங்கு

கேடுகோலம் - கெடுகோலம்
கேடுபாடு - அழிவு, துன்பம், நட்டம்
கேடையம் - கேடயம்
கேட்குதல் - ஆராய்தல், கேட்டல், தரச் சொல்லுதல், வினவல்
கேட்கும்விடை - வினவும் விடை[உ-ம்] என்னாலாகுமோ
கேட்கை - கேள்வி
கேட்டல் - இரத்தல், செவிகொடுத்தல், வினவல், வேண்டுதல், செய்தல்
கேட்டவாய்க்கேட்டல் - பலராலுங்கேட்டல்
கேட்டி - மிலாறு
கேட்டுமுட்டு - கேட்டதனால் உண்டாகும் வழு
கேட்டை - ஓர்நாள், மூதேவி
கேட்பு - கேள்வி
கேணம் - கொழிப்பு
கேணி - அகழி, கிணறு, குளம், துரவு
கேண்டு, கேண்டுகம் - பந்து
கேண்மை - உறவு, கண்ணோட்டம், நட்பு
கேதகம் - தாழை
கேதகாரியம் - இழவு
கேதகி, கேதகை - தாழை
கேதந்தி - அநிருத்தன்
கேதம் - குற்றம், துக்கம், துன்பம், வீடு
கேதல் - அழைத்தல்
கேதனம் - இடம், படர்கொடி, பெருங்கொடி, விருதுக்கொடி, வீடு, வேலை
கேதாரகவுளம் - ஓர்பண்
கேதாரம் - ஓர்நகரம், மயில், மலை
கேதாரவிரதம் - ஓர்விரதம்
கேதாரன் - சிவன்
கேது - அடையாளம், ஓர்கோள், நோய், விருதுக்கொடி, வெளிச்சம், செம்பாம்பு, மோக்ஷகாரகன்
கேதுச்சிலாங்கணம் - புருடராகம்
கேதுதரம் - வாயு
கேதுதரன் - கொடிபிடிப்போன்
கேதுதல் - அழைத்தல்
கேதுதாரை - வால்வெள்ளி
கேதுபம் - மேகம்
கேதுப்பிரியம் - வைடூரியம்
கேதுமாலம் - நவகண்டத்தொன்று
கேதுமாலன் - அங்கீதிரன்புதல்வரிலொருவன்
கேதுரத்திநம் - வைடூரியம்
கேதுரு - ஓர்வாசனைமரம்
கேதுவசனம் - கொடி
கேத்திரகணிதம், க்ஷேத்திரகணிதம் - இரேகாகணிதம்
கேத்திரபாலன் - வயிரவன்
கேத்திரம் - கெடித்தலம், க்ஷேத்திரம், பூமி, விலைநிலம்
கேத்திரி - விஷ்ணு
கேநாரம் - ஓர்நரகம், கவுள், சந்தி
கேநிபாதகம், கேநிபாதநம், கேநிபாதம் - நாவாய்த்துடுப்பு
கேந்தகம் - கோடகசாலை
கேந்திரம் - உதயம், ஏழாமிடம், நான்காமிடம், பத்தாமிடம், வட்டத்தின்மத்தி
கேந்திரித்தல் - கேந்திரம்பெற்றுநிற்றல்
கேந்துகம் - ஓர்மரம், தவளை
கேந்துமுறியம் - நாய்வேளை
கேபம் - அசைவு
கேப்பை - குரக்கன், கேழ்வரகு
கேமாச்சி - வெண்காக்கணம்
கேயம் - அகழ், இசைப்பாட்டு
கேயன் - பாடுவோன்
கேயிகம் - செங்கல்
கேயூரம் - தோளணி
கேரண்டம் - காகம்
கேரலம் - கேரளம்
கேரலி - ஓர்நெல், வானசாத்திரம்
கேரல் - கேருதல்
கேரளம் - ஓர்பாஷை, சோதிடசாஸ்திரத்தி னொன்று, தேயமைம்பத்தாறினொன்று, வாய்விளங்கம்
கேரளன் - சேரன்
கேரளை - இசைப்பாட்டு
கேருதல் - குரல்கம்முதல், கோழிகத்துதல், பயப்படுதல்
கேலகன் - கூத்தாடி, வாள்மேல்நடனஞ்செய்வோன்
கேலம் - மகளிர்விளையாட்டு, விளையாட்டு
கேலளம் - கேளி
கேலாசம் - பளிங்கு
கேலி - இகழ்ச்சி, பரிகாசம், விகடம்
கேலிகம் - அசோகமரம், கேளி
கேலிகலை - சரச்சுவதிகையில் வீணை பகிடிப் பேச்சு
கேலிக்கிரகம் - வசந்தமண்டபம்
கேலிசீலன் - பரிகாசக்காரன்
கேலிமாலி - கேலி

கேலிமுகம் - பரிஹாசம்
கேலிவிருட்சம் - ஓர்கடம்பு
கேலே - நெருப்புச்சுவாலே,முழங்கையிடி
கேவணம் - மணிப்திக்குங்குழி
கேவர்த்தன் - கரையான்
கேவலஞானம் - திரிகால உணர்ச்சி
கேவலதிரவியம் - மிளகு
கேவலப்படுதல் - இளேத்தல், மயங்கல், மெலிதல்
கேவலமானது - பெலனற்றது
கேவலம் - அற்பம், இட்டம், இன்மை, உறுதி,ஒருங்கு, ஓரவத்தை, தனிமை, துன்பம்,பெருக்கம், மரணத்தறுவாய், முடிவிடம்,மெலிவு, மோக்கம்,விடுதல், ஆணவமலம், இரண்டன்மை
கேவலன் - த்ற்பிரியன்
கேவலான்னுவயானு மானம் - உபநயம் ஏது திருட்டாந்தம் நிகமனம் பட்சம் என ஐந்து
கேவலி - வள்ளிக்கொடி, கேவலஞானி
கேவு - வெண்கடுகு
கேவுதல் - மூச்சுத்திணறல்
கேவேடன் - மீன் வலேஞன்
கேழல் - பன்றி, குளநெல்
கேழ் - உவமை, ஒளி, நிறம்
கேழ்வரகு - குரக்கன்
கேளன் - தோழன்
கேளா - அமைதி, விருதா, மௌனம்
கேளாதகேள்வி - நிந்தை, வசை
கேளாமை - கீழ்ப்படியாமை
கேளார் - பகைவர், செவிடர்
கேளி - தெங்கு, மகளிர்விளேயாட்டு
கேளிக்கை - மகளிர் விளேயாட்டு, சதிர்
கேளிவிலாசம் - விளேயாடிப் பொழுது கழித்தல், விநோதம்
கேளிர் - கணவர், சிநேகிதர், சுற்றம்
கேள் - அன்பு, உறவு, கேளென்னேவல், சிநேகம், சுற்றம், மதிப்பு
கேள்மை - கேண்மை
கேள்வன் - தலேவன், அன்பன், கணவன்
கேள்வி - கல்வி, அஃது இராசதகுணத் தொன்று, காது, பாரம்பரியம், பேச்சு யாழ், கேட்டல், விஞ, தோணிக்கூலி
கேள்விக்காரன் - வழக்கில்மன்ருடிக் கேட்போன், விலேகேட்பவன்
கேள்விகொடுத்தல் - செவிகொடுத்தல்
கேள்விச்செவியன் - கெட்டதை நம்புவோன்
கேள்விப்படுதல் - கேள்வியாதல்
கேள்விப்பத்திரம் - மன்ருட்டுக் கடுதாசி
கேள்விமூலம் - காதடி, செவி
கேள்வு - கூலி, தோணிக்கூலி
கேள்வுத்தோணி- கூலிக்குப்பொருந்தின தோணி

---

# ஐ

**ஐ** இடம், உடனே, ஒப்பனே, ஒழுக்கம், ஓரெழுத்து, ஓர் விகுதி [உ-ம்] கடுக்கை, கரம், கை கொண்டவளவு, கையென்னேவல், சாமர்த்தியம், சிறுமை, தங்கை, தொனி, பக்கம், பங்கு, படைவகுப்பு, யானேத் துதிக்கை, வரிசை, படை, கைம்மரம் காம்பு, கைத்தொழில், சந்திரன், செய்கை
கைகடத்தல் - கையைவிட்டுப் போதல்
கைகடன் - ஈடுறுதியில்லாக் கடன்
கைகட்டுதல்-மரியாதைக்காகக் கைகட்டி நிற்றல்
கைகண்டசாரம் - கைகண்டபலன், நவசாரம்
கைகண்டது - சித்தியுள்ளது, தேறினது
கைகம் - வக்கிராந்திபாஷாணம்
கைகலத்தல் - ஒன்ருய்க்கூடுதல், யுத்தங் கலத்தல்
கைகழுவுதல் - குற்றத்துக்குவிலகுமோர் குறிப்பு, தீர்த்துத்தள்ளல்
கைகாட்டு - கையினலபிநயங் காட்டல், சைகைகாட்டல்
கைகாட்டுதல் - அபிநயங்காட்டல், கையாற்குறிப்புக்காட்டல்
கைகாணுதல் - அத்தாட்சிப்படுதல், நம்பிக்கையாயறிதல், நிறைவேறுதல்
கைகாவல் - கையுதவி
கைகீழ் - கையமைச்சல்
கைகுவித்தல்-கும்பிடல், கொம்மைகொட்டல், வணங்கல்
கைகுளிர்தல் - திருத்தியாதல்
கைகுறண்டுதல் - கைமுடங்கல்
கைகூடுதல் - சித்தியாதல்
கைகூப்பல் - கும்பிடல்,கொம்மைகொட்டல், வணங்கல்
கைகூப்பு-ஐந்து முழங்கொண்டவளவை, கைகுவிப்பு

கைகூப்புதல் - கும்பிடல்
கைகூம்புதல் - கை குவிதல்
கைகேசி-தசரதன் மனைவியி லொருத்தி, பரதன்றாய்
கைகேயன் - கேகயநாட்டரசன்
கைகேயி - கைகேசி
கைகொடுத்தல் - உதவிசெய்தல், எதிர் கொண்டுபோய்க்கைபிடித்தழைத்தல், கைகூடுதல், வாக்குப்பண்ணல்
கைகொட்டல் - கொம்மைகொட்டல்
கைகொட்டிக்குவித்தல் - குடந்தம்
கைகோத்தல் - கூடிக்கொள்ளுதல், கை யோடு கைபிடித்தல்
கைகோத்தாடல் - குரவையாடல்
கைகோவை - பொற்கொல்லர் தொழிலி லொன்று
கைகோளன் - ஓர் சாதியான்
கைகோள் - ஒழுக்கத்தின்றன்மை
கைக்கடனுற்றல் - உறுதியின்றி நம்பிக் கைக்குக்கொடுத்தல், அது வேளாண் மைமாந்த ரியல்பு ளொன்று
கைக்கட்டி - ஓராபரணம், கைக்கவசம்
கைக்கட்டு - ஓராபரணம்
கைக்கணக்கு - ஒருறுதி
கைக்கணிசம் - கைமதியம், கைமதிப்பு
கைக்கத்தி - ஓராயுதம்
கைக்கரணை - ஓர் சிலந்தி
கைக்கவசம் - கைச்சட்டை
கைக்காணிக்கை - வெளிப்பாடு
கைக்காச்சல் - கைக்காந்தி
கைக்காரன் - உதவியுள்ளவன், பணக்கா ரன், சமர்த்தன்
கைக்கிரியை-கையினாற் செய்யுங் கிரியை
கைக்கிளை - ஏழிசையிலொன்று, அது அண்ணத்தாற் பிறக்குமிசை, ஒருதலை க்காமம், ஓர்பிரபந்தம், அஃது ஒருத லைக்காமத்தினை ஐந்து விருத்தத்தாற் கூறுவது, வெண்பா முப்பத்திரண் டாற் கூறலுமாம், யாழினோர்நரம்பு
கைக்கிளைமணம் - ஆசுரமிராக்கதம் பை சாசமூன்றும்
கைக்கீறல் } கையெழுத்தின் குறி
கைக்கீறு } ப்பு
கைக்குடை - சிறுகுடை
கைக்குட்டை - கையிற்பிடிக்கும் புடை வைத்துண்டு, கையிற்பிடிக்கும் சிறு துணி
கைக்குத்து - கைபொத்திக் குத்தல்
கைக்குநீர்க்கொள்ளுதல் - சிறுநீர்விடுதல்
கைக்குழந்தை - இடுக்குப்பிள்ளை
கைக்குழலூதல் - கையிலே குழலூதல்
கைக்குழி - கமுக்கட்டு
கைக்குழித்தாமரை - ஓர் வியாதி
கைக்குளர் - கைகோளர்
கைக்குள் - உடனே, சடுதி
கைக்குறி-கைவரைபார்க்குஞ் சாத்திரம்
கைக்குற்றம் - கைமோசம்
கைக்குன்று - யானை
கைக்கூச்சம் - கைகூசுதல்
கைக்கூலி - பரிதானம், லஞ்சம்
கைக்கெளியது - இலேசானது, கீழமைச் சலானது
கைக்கை - கசப்பு
கைக்கொட்டை - நையணை
கைக்கொளவர் - கைகோளர்
கைக்கொள்ளுதல்-அங்கீகரித்தல், ஒப்புக் கொள்ளுதல், பேணிக்கொள்ளுதல்
கைக்கோடாலி - சிறுகோடாலி
கைக்கோரணி - கைச்சித்திரம்
கைக்கோல் - ஊன்றுகோல்
கைக்கோளன் - கைகோளன், செங்குந்த [ன்
கைங்கரன் - அடிமை
கைங்கரியம் } பணிவிடை, தொண்டு
கைங்கிரியம் }
கைசருவுதல் - எதிர்த்தல், கைகலத்தல், கைச்சரசம்
கைசலித்தல் - கைதளர்தல், தொய்ந்து போதல்
கைசிகநிஷாதம் - மாகணதாரம்
கைசிகம் - இச்சை, ஓரிராகம், மயிர்க்க னம், விகாரம்
கைசிகர் - பார்ப்பார்
கைசியம் - கேசம்
கைசெய்தல் - அலங்கரித்தல், கைவேலை செய்தல், பயிர்செய்தல்
கைசோரம் - பாலியம்
கைச்சங்கம் - நாகரவண்டு
கைச்சட்டம் - கம்பலை, கைவிட்டம்
கைச்சட்டை - கையிலிடுங்கவசம்
கைச்சரசம் - இலீலைவிளையாட்டு, கைச் சேட்டை
கைச்சரி - கைவளை [ப்பு
கைச்சல் - கைப்பானது, கைப்பு, வெறு
கைச்சற்றேடை - புளிநாரத்தை

கைச்சாத்து - கையெழுத்துத்துண்டு, நில விறையிறுத்த துண்டு
கைச்சாம்பிரதாயம் - கைச்சித்திரம்
கைச்சார்த்து - கைச்சாத்து
கைச்சார்ப்பு - சார்மானம்
கைச்சி - ஊமற்பாதி, கமுகு, சிரட்டை
கைச்சித்தி - கைவாசி
கைச்சித்திரம் - கைவிற்பன்னம்
கைச்சிமிட்டு - கைச்சித்திரம், செப்படி வித்தை, தந்திரம்
கைச்சிறை - கைவசம்
கைச்சீட்டு - கைநறுக்கு
கைச்சீப்பு - தோட்பட்டை [ல்
கைச்சுழி - விதைக்கிறவிதை கூடிவிழுத
கைச்சுறுக்கு - கைவிரைவு
கைச்சூடு - கைநிறைந்த அரிக்கட்டு
கைச்செட்டு- அன்றன்றுகொண்டுவிற்றல்
கைச்செட்டை-கைமூட்டு, தோட்பட்டை
கைச்சேட்டை - கைச்சரசம்
கைச்சைகை - கைச்சாடை
கைடபி, கைடபை - துர்க்கை
கைடவசிதன் - விட்டுணு
கைடவன் - ஓரரக்கன்
கைடவாரி - விட்டுணு
கைடவை - துர்க்கை
கைடிகம் - மலையெலுமிச்சை
கைதகம் - தாழம்பூ
கைதட்டல் - கையொடு கைதட்டல், கைவிடுதல், தப்புதல்
கைதப்புதல் - தவறுதல், நீங்கல்
கைதரல் - கைதருதல்
கைதருதல்-இடங்கொடுத்தல், உதவுதல், கைகூடுதல், மணஞ்செய்தல்
கைதவம் - சூது, துன்பம், பந்தயம், பொய், வஞ்சனை [யன்
கைதவன்-பாண்டியன், வஞ்சகன், பொய்
கைதளர்தல் - கைநெகிழ்தல், சோர்தல், தொய்தல்
கைதாங்கி - கைபிடி, நாற்காலியினேருறுப்பு
கைதாரம் - செந்நெல்
கைதி - மறியற்காரன்
கைதூக்கல் - இரட்சித்தல், விடுதலையாக் [கல்
கைதூவல் - கைமொழிதல்
கைதூவாமை - ஒழியாவொழுக்கம்
கைதை - தாழை, வயல்
கைதைச்சுரிகையன் - மன்மதன்
கைதொடல் - உண்ணல், கலியாணம், தொடங்கல்
கைதொழல் - கையினால் கும்பிடல்
கைத்தகோடரம் - எட்டி
கைத்தலம் - கை
கைத்தல் - அலங்கரித்தல், அலைத்தல், கசத்தல், கோபித்தல், வெறுத்தல்
கைத்தளை - கைவிலங்கு
கைத்தா - காட்டாமணக்கு
கைத்தாக்கு-கைக்குக்கனம், கைக்குத்து, கைவேகம்
கைத்தாய்-வளர்க்குந்தாய், செவிலித்தாய்
கைத்தாளம் - கைமணி
கைத்திட்டம் - கைமதியம், கைமதிப்பு
கைத்தீவத்தி - கையிற்பிடிக்குந் தீவட்டி
கைத்தீன் - கையில்வைத்துக் கொடுக்குந் [தீன்
கைத்து - பொன், வெறுப்பு
கைத்துடையான் - கையில் பொருளுள்ளவன்
கைத்துப்பாக்கி - கைத்துவக்கு
கைத்துருவுமணை-பிரயாணத்துருவுமணை
கைத்துவக்கு - சிறுதுவக்கு
கைத்தூக்கு - கைப்பற்றம், கையாற்றூக்கத்தக்க பாரம்
கைத்தேங்காய் - போரடிக்குந் தேங்காய்
கைத்தொண்டு - குற்றேவல்
கைத்தொழில் - கைவேலை
கைத்தொழும்பு - கைத்தொண்டு
கைநாட்டு, கைந்நாட்டு - கைக்கீறல்
கைந்நடுக்கம்-ஓர்வியாதி, கையிறுங்காமை
கைந்நட்டம் - முதல்கூட நட்டப்படுதல்
கைந்நலப்பால் - கன்றின்றிக் கைவல்லபத்தாற் கறக்கும் பால்
கைந்நலம் - கைப்பயன், கைவிசேஷம்
கைந்நறுக்கு - கையுறுதி
கைந்நனைத்தல் - கைகழுவல்
கைந்நன்றி - செய்ந்நன்றி [தல்
கைந்நாடிபார்த்தல்-நாடியோட்டம் பார்த்
கைந்நீட்டுதல் - அடிக்கமுந்துதல், இழவு வினவுதல், களவெடுத்தல்
கைந்நீளுதல் - அதிகமாய்க் கொடுத்தல், ஒன்றைச்செய்ய முந்துதல்
கைந்நெகிழ்தல் - விட்டுவிடுதல்
கைந்நொடி - மாத்திரைப்பொழுது
கைந்நொடித்தல் - விரலைநொடித்தல்

கைந்நொடுநொடுத்தல்-கண்டதெல்லாந் தொடுதல்
கைபடிதல் - கைதிருந்துதல்
கைபதறுதல் - கைந்நடுங்குதல்
கைபரிமாறுதல் - அடிபிடிப்படுதல்
கைபழகுதல் - கைப்பழக்கம் பழகுதல்
கைபறிதல்-கைவிட்டுப்போதல், ஒழுங்கு குலேதல்
கைபாகம் - கைப்பழக்கம்
கைபார்த்தல் - கைக்குறிபார்த்தல், சோதித்தல், நாடிபார்த்தல், மட்டறிதல்
கைபிடி-இரம்மியம், உறுதி, கைப்பிடிக்க வைத்திருப்பது, கைப்பொருள், கைவிடாமை, நம்பிக்கை, நாடியோட்டமறிதல்
கைபிடித்தல்-கலியாணம் முடித்தல், நாடியறிதல், மணத்தல்
கைபிடிபத்திரம்-உற்றசிநேகம், கைவிடாமற் பத்திரமாயிருத்தல்
கைபிடியானவன் - உற்ற சினேகிதன்
கைபிழைபாடு - கைமோசம்
கைபுகுந்தவழக்கு - கையில் வந்துவிட்டதென்றுடையவனுக்கு மில்லே யென்பது
கைபுனே } அலங்கரித்தல், பூத்தொடுத்தல்
கைபுனேதல் }
கைபோடுதல் - கையிடுதல், வாக்குப்பண்ணல்
கைபோதல் - சிறுமைபோதல், தேறுதல்
கைப்படுத்தல் - கைக்கொள்ளல்
கைப்பட்டை-கைப்பலகை, சிறுபட்டை, தோட்பட்டை
கைப்பணம் - கைம்மேற்பணம், கையிலிருக்கும் பணம்
கைப்பணி - கற்சிற்பர் கருவியிலொன்று, கைத்தொண்டு, மணியாசிப்பலகை
கைப்பண்டம் - கைப்பொருள்
கைப்பதட்டம் - கள்ளம், விரைவு
கைப்பந்தம் - பந்தவிளக்கு
கைப்பயில் - கைச்சயிக்கினே
கைப்பழக்கம் - கைப்பரிட்சை
கைப்பற்றம் - கைப்பிடி, கைவாறு
கைப்பற்றல் - கலியாணம், கைவசத்திலொடுக்கல், வாங்குதல், கைக்கொள்ளல்
கைப்பற்று - கைத்தூக்கு, கைப்பற்றென்னேவல், வாங்குதல்
கைப்பாடு - கைநஷ்டம், கைவசம், கைவேலே
கைப்பாதி-இரண்டாய்ப்பிளப்பதிற் சிறுபாதி
கைப்பாத்திரம் - கரபாத்திரம்
கைப்பிசகு - கைமோசம்
கைப்பிடி - உலக்கை, கலியாணம், கைபிடித்தபிடி
கைப்பிடித்தல்-கலியாணமுடித்தல், உறுதியாகக்கொள்ளல்
கைப்பிடிவாள் - கைவாள்
கைப்பிரட்டு - அஸ்தலாகவவித்தை
கைப்பு - அறுசுவையி லொன்று, அதுகசப்பு, ஆடுதின்ஞப்பாளே, ஒருசரக்கு, வெறுப்பு, வாதம், கைப்பான பதார்த்தம்
கைப்புடை - கைக்கவசம்
கைப்புட்டில் - விரலுறை
கைப்புலி - யானே
கைப்பூட்டு - கைப்பொருத்து, கையினுற் பூட்டும் பூட்டு
கைப்பெட்டகம் } சிறுபெட்டகம்
கைப்பெட்டி }
கைப்பொருள் - கைவசத்தி லிருக்கும் பொருள்
கைப்பொலி - கையாலள்ளும் பொலி
கைப்பொல்லம் - சிறு துண்டு
கைப்பொறுப்பு - தன் பொறுப்பு
கைமடிப்பு - அணுப்பு
கைமுனி - மணிக்கட்டு
கைமை } அமங்கலி
கைம்பெண் }
கைம்பெண்வஸ்திரம்-அமங்கலி யுடுக்கத்தக்க புடைவை
கைம்மடல் - கைச்சீப்பு
கைம்மட்டம் } கைமதியம்
கைம்மட்டு }
கைம்மணி - கைத்தாளம், கையாலசைக்குஞ் சிறுமணி, சேமக்கலம்
கைம்மண்டை - கையாகிய பாத்திரம்
கைம்மதியம் - கைம்மட்டு
கைம்மயக்கு - ஓர் வசிய மருந்து
கைம்மரம் - வீட்டின் பாய்ச்சுரமரம்
கைம்மருந்து - வைத்தியனின்றித்தாமே செய்துகொடுக்கும் மருந்து
கைம்மலே - யானே
கைம்மறதி - அயர்த்தி
கைம்மறித்தல் - தடுத்தல்

கைம்மறுத்தல் - கொடுப்போருங் கொடாதுவிடல்
கைம்மறை - உடன்மறை
கைம்மா - யானை
கைம்மாயம் - கைம்மயக்கு
கைம்மாய்ச்சி - கைவிலங்கு
கைம்மாறு - பிரதியுபகாரம்
கைம்மாறுதல் - விற்றல்
கைம்மாற்று - உடன்மாற்று
கைம்மிகம் } அதிகப்படல், கைகடத்
கைம்மிகுதல் } தல், ஒழுக்கக்கேடு
கைம்மிடிப்பு-கையிலொன்று மில்லாமை
கைம்மீன் - அத்தநாள்
கைம்முடக்கம் - பொருள்முட்டு, வினைக் [கேடு
கைம்முடிப்பு - முடிப்புப்பணம்
கைம்முட்டிசெய்தல் - கையைப் பொத்துதல்
கைம்முட்டு - கைம்மிடிப்பு
கைம்முறை - கைம்மாறுமுறை
கைம்மூட்டு - தோட்பொருத்து
கைம்மூலம் - அக்குள், கன்றுசெத்தபின் கறக்கும்பால், கையினடி, முகாந்திரம்
கைம்மெய்காட்டல் - அபிநயங் காட்டல்
கைம்மேலே - உடனே
கைம்மேற்பணம் - உடனே கையிற்கொடுக்கும் பணம்
கைம்மை - கைம்பெண், சிறுமை
கைம்மோசம் - செய்கைப்பிழை
கையகப்படுதல் - கைக்குட்சேருதல்
கையகப்படுத்தல்-ஒப்புக்கொடுத்தல், சிக்கப்பண்ணுதல், பிடித்தல்
கையடக்கம் - கைக்கு இலேசானது
கையடம் - ஓர் நூல்
கையடர் - ஓர் நூலாசிரியர்
கையடிப்படுதல் - கைக்குட்படுதல்
கையடிப்படுத்துதல் - ஆட்சிக்குட் படுத்துதல்
கையடை - அடைக்கலம்
கையமர்த்தல் } அபயார்த்தஞ் செய்தல்,
கையமைத்தல் } அமைந்திருக்கக் குறிப்புக் காட்டல்
கையம்பு - உறுதி, நம்பிக்கை
கையயர்தல் - கைசோர்தல்
கையரிக்கொளல்-சேர்த்துக்கொள்ளல், தேடல்
கையரித்தல் - சேர்த்துக்கொள்ளல்
கையரியம் - இரும்பு
கையர் - கீழ்மக்கள், சண்டாளர், திருடர்
கையலுத்தல் - கைசலித்தல்
கையளித்தல் - ஒப்புக்கொடுத்தல், கொடுத்தல் [க்கவி
கையறம்-கெடும்படி பாடும்பாட்டு, வசை
கையறல் - ஒழுக்கமின்மை, செயலறல்
கையறல்விலக்கு - ஓரலங்காரம், அது கையறுதலைக்காட்டி விலக்குவது
கையறவு - உதவியின்மை, செயலறுதல், வருத்தம், வறுமை
கையறிதல் - பழகுதல்
கையறுதல் - அந்தரிக்குதல், சாதல், செயலறல் [வறுதி
கையறுதி - கையுறுதியிலே விற்கப்பட்ட
கையறுநிலை-ஓர்பிரபந்தம், அஃது கணவனோடு மனைவிகழிந்துளியவர்கட்பட்ட அழிவுப்பொருளெல்லா வற்றையும் பிறர்க்கறி வுறுத்தி யிறந்து படாதொழிந்த ஆயத்தாரும்பரிசில் பெறும்விறலியருந் தனிப்படருழந்த செயலறுநிலையைக் கூறுவது
கையறை-ஒழுக்கமின்மை, செயலின்மை, உதவியின்மை
கையன் - கயவன் [ட்டு
கையாடுதல்-எடுத்துவழங்குதல், கைகண்
கையாந்தகரை-ஓர்பூடு, கரிசலாங்கண்ணி
கையாயிரத்தன் - வாணசுரன்
கையாளல் - எடுத்துவழங்கல்
கையாளி - துட்டன், மாய்மாலன்
கையாளித்தல் - ஒப்படைத்தல்
கையாளுதல் - எடுத்து வழங்குதல்
கையாள் - குற்றேவலாள்
கையாறு - ஒழுக்கம், சரித்திரம், துன்பம்
கையாறுதல் - இளைப்பாறுதல்
கையாற்றி - ஆறுதல், உதவி
கையாற்றுதல் - அடையல், மாற்றுதல், இளைப்பாற்றுதல்
கையான் - கையாந்தகரை
கையிகத்தல் - அகன்றுநிற்றல், இழத்தல், ஒழுங்குதப்புதல், கடத்தல், மிகுதல்.
கையிடுதல் - தலையிட்டுக்கொள்ளுதல், நேர்ப்படுதல்
கையிணக்கம் - கூத்திவைக்குதல், போர்செய்கை
கையிருப்பு - கை ரொக்கம்
கையில் - தேங்காய்ப்பாதி

கையிழத்தல் - காணாமற்போதல்
கையிளகுதல்-கைநெகிழ்தல், கொடுக்கச் சம்மதித்தல்
கையிளைத்தல் - கைசலித்தல்
கையிறக்கம் - கையைவிட் டிறங்குதல், கொடை
கையிறக்குதல்-கையிலிருந் திறங்கச்செய் [தல்
கையிறங்காமை - பிசுனித்தனம்
கையிறங்குதல் - கொடுக்க விணங்குதல்
கையிறுக்கம்-கையிறங்காமை, உலோபத் [தன்மை
கையிறை - கைரேகை
கையுங்கணக்கும்-இருந்ததுஞ் சென்றது [ம்
கையுடனே - உடனே
கையுடை - கைக்கவசம்
கையுதவி - ஆளுதவி
கையுபகாரம் - ஒத்தாசை, கைக்கூலி
கையுமெய்யும் - அத்தாட்சி, உறுதி
கையுரொக்கம் - கைவசத்திலிருக்கும் பணம்
கையுழைப்பு - வேலை
கையுறல் - கைவசப்படல், அகப்படல்
கையுறுதி - அட்டவணை,சேர்க்கப்படாத வுறுதி
கையுறை-கைக்கவசம், தலைமகன்றலைவிக் குத் தரும்பொருள், காணிக்கை
கையெடுத்தல் - கும்பிடல்,சத்தியம்பண் ணல், சம்மதித்தற்குறியாய்க் கையு யர்த்தல்
கையெழுத்து-கையாலெழுது மெழுத்து, கைரேகை, தன்பேரெழுத்து
கையேந்தல் } இரந்துவாங்குதல்
கையேந்துதல் }
கையேறல் - நடுத்தரமானமுத்து
கையேறுதல் - கையிலேசேர்தல்
கையேற்குதல் - ஏற்றுக்கொள்ளுதல்
கையேற்பு - கைப்பிச்சை
கையை - தங்கை
கையொப்பம் - கையெழுத்து
கையொலி } ஐந்துமுழப்புடைவை
கையொலியல் }
கையொழியாமை - ஒழியா வொழுக்கம்
கையொழுக்கம் - ஒழுக்கம் [தல்
கையொறுப்பு - குறைத்துச் செலவழித்
கையொற்றி - கையுறுதியில் வைக்கப் பட்ட காணியீடு
கையோங்குதல் - கை நீட்டுதல், செழித் தோங்குதல்
கையோடே - உடனே, கைவிடாமல்
கையோலை - கையுறுதி
கைரம் - மலை [பல்
கைரவம் - குமுதம், வஞ்சகம்,வெள்ளாம்
கைரவி - சந்திரன், நிலவு, வெந்தயம்
கைராதம் - நிலவேம்பு
கைரிகம் - காவிக்கல், பொன்
கைரியம் - நரி, பொன்
கைரேயம் - மலை
கைலஞ்சம் - கைக்கூலி
கைலம் - கேடி
கைலாகு } கைகொடுத்தல
கைலாகை }
கைலாசநாதன் - குபேரன்
கைலாசநிகேதநன் } சிவன்
கைலாசமந்திரன் }
கைலாசம் }
கைலாயம் } கயிலைமலை
கைலை }
கைலையாளி - சிவன்
கைவசம் - கைக்குட்படல், வசமாதல்
கைவண்டில் - சிறுவண்டில்
கைவந்தவன் - தொழிலிற் கைபழகித் தேர்ந்தவன்
கைவரல் - கைப்பழக்கம், கைவருதல்
கைவருதல் - கைகூடுதல், பழக்கம்
கைவரை - கையிறை
கைவலம் - கைந்நலம், மோக்கம்
கைவலிப்பு - கைக்கடுப்பு
கைவல்லபம் - கைச்சாமர்த்தியம்
கைவல்லியம் - உபநிடதமுப்பத்திரண்டி ஞொன்று, சித்தி, தனிமை, மோட்சம்
கைவல்லோர் - கைப்பழக்க முள்ளோர்
கைவழக்கம் - இழவுக்குக் கொடுக்கும் பணம், கைவழங்குதல்
கைவழங்குதல் - இழவுக்குக்கொடுத்தல், கையேவுதல்
கைவழம் - வழங்குங் கைப்பக்கம்
கைவளசசம்பா - ஓர் நெல்
கைவளம் - கைப்பொருள்,கைவிசேஷம்
கைவளை - கடகம், சிறுவளை, மருதணி, தொடி
கைவாக்கு - கைவழக்கம்
கைவாசி - கைச்சித்தி
கைவாட்சம்பா - ஓர் நெல்
கைவாய்க்கால் - சிறுவாய்க்கால்
கைவாய்ச்சி - சிறுவாய்ச்சி

கைவாரம்-செய்கைப்பங்கு,வாழ்த்து,கை யையெடுத்து உயர வீசுதல்
கைவாளை - ஓர் புடவை
கைவாள் - சிறுவாள்
கைவாறு - கைக்கும்வாய்ப்பு, கைதூக்கு
கைவிசேஷம் - கைவாசி
கைவிசை - கைக்கதி, கைமுறை
கைவிடுதல் - கைவிட்டுவிடுதல், தள்ளிப் போடுதல்
கைவிட்டம் - குறுக்குவிட்டம்
கைவிதை - வெந்தயச்செடி
கைவிஸ்தாரம் - கைவிற்பன்னம்
கைவிரித்தல் - கொடுத்தல், மறுத்தல்
கைவிரை - வெந்தயம்
கைவிலக்கம் - மகளிர்சூதகம்
கைவிலக்கு - கைம்மறைப்பு
கைவிலக்குவைத்துப்பார்த்தல் - கிரணத் தைக்கையால் மறைத்துப் பார்த்தல்
கைவிலங்கு - கைக்கிடும்விலங்கு, யானை
கைவிலை - கைப்பணத்துக்கு விற்றல்
கைவிளக்கு - ஓர் விளக்கு
கைவினை - கைத்தொழில்
கைவினைஞர்-கம்மாளர்,செய்கைவல்லோர்
கைவீச்சன் - ஓர் பணிகாரம்
கைவீச்சு - அடி, கையின்வீச்சு, மிகுதொகை
கைவேகம் - கைவிசை
கைவேலை - கைச்செய்கை
கைவேல் - கைவிடாவேல், வேல்
கைவைத்தல் - ஏற்படுதல், தொடுதல்
கைனி - அத்தநாள், கைம்பெண்

# கொ

ககர வர்க்கத்துப்பத்தா மெழுத்து,ஒலிக்குறிப்பு
கொக்கட்டி - ஓர்செடி, குரண்டறப்பனங் கிழங்கு
கொக்கரி - கொக்கரித்தல்
கொக்கரித்தல் - கெற்சித்தல், கோழி முதலிய பறவை கத்தல்
கொக்கரிப்பு - கெற்சிப்பு,பறவை கொக் கொக்கென வொலித்தல்
கொக்கரை - கொக்கறை, சங்கு, பாம்பு, வலம்புரிச்சங்கு, வலை, வில்
கொக்கலகு - கொக்குமூக்கு
கொக்கறை - பனை, தெங்கு முதலியவற் றின் பிள்ளைமடல்
கொக்கறையுடும்பு - ஒருடும்பு
கொக்காட்டல் - கோதாட்டு
கொக்காம்பாளை - ஓர் செடி
கொக்கான் - ஓர் மரம், ஓர் விளையாட்டு
கொக்கான்வெட்டுதல்-கொக்கான் விளை யாடுதல்
கொக்கி } கொழுவி
கொக்கில் }
கொக்கிறகுமந்தாரை - ஓர் பூமரம்
கொக்கு - ஓர்புள், குதிரை, செந்நாய், மாமரம், மூலநாள், எட்டி
கொக்குக்கல் - மாந்தளிர்க்கல்
கொக்குமட்டி - ஓர் இப்பி
கொக்குமாந்தரை - காட்டத்திமரம்
கொக்குமீன் - ஓர் மீன்
கொக்குமுத்து-கொக்கிற்பிறந்தவெள்ளை நிற முத்து
கொக்குவம் - கொக்கோகம்
கொக்கேறி - ஓர் பூண்டு, நெட்டிப்புல்
கொக்கை - கொழுவி, கொழுவுதடி
கொக்கைச்சத்தகம் - ஓர் சிறுகத்தி
கொக்கைச்சால் - வளைந்த உழவுசால்
கொக்கோகம் - ஓர் காமநூல்
கொக்கோவெனல் - ஓர் ஒலிக்குறிப்பு
கொங்கணம் - தேசமைம்பத்தாறி னொன் று, பதினெண்பாடையி னொன்று
கொங்கணன் - ஓர் சித்தன்
கொங்கணி - ஓர் தென்னோலைக்கூடு, சம் பங்கூடு, ஒரு பாஷை
கொங்கணியர் - கொங்கண தேசத்தார்
கொங்கணியான் - ஓர் மீன்
கொங்கம் - ஓர்நாடு, கோளகபாஷாணம்
கொங்கரி - ஏலரிசி
கொங்கர் - கொங்கதேசத்தார்
கொங்கன் - சேரன்
கொங்காணி - கொங்கணி
கொங்காரம் - குங்குமமரம்
கொங்காளம் - பதினெண்பாடையி னொன்று
கொங்கு - கருஞ்சுரை, கள், சருக்கரை, தேன், பூந்தாது, மலையாளக்கரையில் சேர ராசனாண்ட தேசம், வாசனை
கொங்குவெள்ளாளர்-கொங்குதேசவெள் ளாளர்
கொங்கை - கம்புமி, மரக்கணு, முலை
கொசமசக்கு - குழப்பம்
கொசு - கொசுகு, கொடுக்கு, தாறு
கொசிகாந்தேன் - கொசுகுகள் வைக்குந் தேன்

கொசுகு - ஈ, தேனிலையான், நுளம்பு
கொசுக்கட்டை - நுண்ணிச்சிறை
கொசுவம் - கொய்சுவனம்
கொசுறு - பிசுக்கு
கொச்சகக்கலிப்பா } ஓர்கவி, கொச்சை
கொச்சகம்
கொச்சம் - பீர்க்கு
கொச்சாளை - ஓர் மீன்
கொச்சி - ஓர் தேசம், சவரிலோத்திரம், நெருப்பு, மிளகாய்ச் செடி
கொச்சிக்காய் - கொச்சி, மிளகாய்
கொச்சிக்குழந்தை - வைப்பரிதாரம்
கொச்சித்தமரத்தை - ஓர் தமரத்தை
கொச்சிமஞ்சள் - ஓர் மஞ்சள்
கொச்சியேலம் - ஓரேலம்
கொச்சிலித்தி - ஓர் புல்
கொச்சை - ஆட்டின்பொது, இளப்பம், இளைத்தல், கீழ்மை, திருந்தாதபேச்சு, வெள்ளாடு, இழிவு, சீகாழி
கொச்சைத்தனம் } கீழ்மையான பரிட்சை
கொச்சைப்பழக்கம்
கொச்சைப்பேச்சு } திருந்தாத சொல்
கொச்சைமொழி
கொச்சைவார்த்தை
கொஞ்சத்தனம் - சின்னத்தனம்
கொஞ்சப்படுதல் - சின்னத்தனப்படுதல்
கொஞ்சம்-அற்பம், எளிமை, சிறு அளவு
கொஞ்சல் - கொஞ்சுதல், செல்வமாய்ப் பேசுதல், மழலைச்சொல், முத்தமிடல்
கொஞ்சி - ஓர் செடி, கிஞ்ஞா
கொஞ்சுகிளி - குதலை பேசுங் கிளி
கொஞ்சுதல்-மழலைபேசுதல், முத்தமிடல்
கொடாலகம் - வெந்தோன்றி
கொடி - அவிட்டநாள், உச்சம், கண்வரி கயிறு, காக்கை, காற்றூடிப்பட்டம், கீழ்த்திசைப்பாலன்குறி, குமரனுடல், துகிற்கொடி, இஃது அட்டமங்கலத் தொன்று, இராசசின்னத்துளொன்று, நீளம், படர்கொடி, புடைவையசைவு, சித்திரமூலம், வள்ளி, ஒழுங்கு, நூழிற்கொடி, படர்புல், வாசனை
கொடிகட்டிநிற்றல் - அவசரப்படுதல்
கொடிகட்டுதல்-இயலாதொன்றை விடாமல் முயன்று நிற்றல், சயக்குறிப்பு
கொடிக்கம்பம் - கொடித்தம்பம்
கொடிக்கவி - சித்தாந்த சாத்திரம் பதினன்கனு ளொன்று
கொடிக்கழல் } கழற்சிக்கொடி
கொடிக்கழற்சி
கொடிக்கள்ளி - ஓர்கள்ளி
கொடிக்கால் - வெற்றிலைக்கொடி
கொடிக்கையான் - ஓர் கையாந்தகரை
கொடிக்கொற்றான் - ஓர் செடி
கொடிசை - கன்னம்
கொடிச்சண்பகம் - ஓர் செண்பகம்
கொடிச்சி-இடைச்சி, காவட்டம்புல், சித்திரைமூலம், புற்றாஞ்சோறு
கொடிச்சியர் - குறிஞ்சிநிலப் பெண்கள்
கொடிச்சிவாலி - வெள்ளைவால் பசு
கொடிச்சிவால் - வெள்ளைவால்
கொடிச்சீலை-சித்திரப்படாம், துகிற்கொடி
கொடிச்சூரை - ஓர் சூரை
கொடிஞாழன்மணிப்பூதனார் - திருவள்ளுவமாலை சொல்லிய கடைச்சங்கப் புலவரு ளொருவர்
கொடிஞ்சி - தேர், தேர்மொட்டு
கொடிது - கொடியது
கொடித்தக்காளி - ஓர் தக்காளி
கொடித்தடக்கி - ஓர் மரம், நாயின்கால் மேல்விரல்
கொடித்தம்பம் - கொடிகட்டுந்தறி
கொடித்தரம் - அஷ்டமிச்சந்திரன்
கொடித்திருப்பாடகம் - ஓர் காலாணி
கொடித்தீ - சித்திரமூலம்
கொடித்துத்தி - ஓர் துத்தி
கொடித்தூக்குதல் - துவசங்கட்டுதல்
கொடிநாய் - தோல்நாய்
கொடிநாவல் - ஓர் நாவல்
கொடிநெட்டி - நீர்ச்சுண்டி
கொடிப்பசளை - ஓர் பசளை
கொடிப்படை - முற்படை
கொடிப்பவுந்திரம் - பவுந்திர நோயினோர் பேதம்
கொடிப்பாசி - ஓர் பாசி
கொடிப்பாலை - ஓரிசை, ஓர் செடி
கொடிப்பிணை - வங்கமணல்
கொடிப்பிள்ளை-காக்கைக்குஞ்சு, பள்ளையாடு
கொடிப்புலி - ஓர் வகைப் புலி
கொடிப்புல் - அறுகம்புல்
கொடிப்பூ - நால்வகைப்பூவி னொன்று
கொடிப்போடுதல்-யாதொன்றைத் தனக்காக்க வழியண்ணல், வெற்றி முதலிய வற்றைக் குறித்துக் கொடி தூக்குதல்
கொடிமரம் - கொடிக்கம்பம்
கொடிமல்லிகை - ஓர் மல்லிகை

கொடிமாடு - நோஞ்சியானமாடு
கொடிமாதளை - ஓர் மாதளை
கொடிமுடி - ஓர் செடி
கொடிமுடியன் - ஓர் பாம்பு
கொடிமுந்திரிகை - திராட்சக்கொடி
கொடியது - கொடுமையானது
கொடியத்தி - ஓர் அத்தி, நீரத்தி
கொடியபீசம் - சீதரங்க பாஷாணம்
கொடியமன்னன் - கோடாசொரி பாஷாணம்
கொடியரசு - அவரை, ஓரரசமரம்
கொடியராகு - கோமேதகம்
கொடியவீரன்-கோடாசொரிபாஷாணம்
கொடியன் - கேது, துட்டன், குரூரன்
கொடியாடு - வெள்ளாட்டிலோர் பேதம்
கொடியாடை - கொடிச்சீரை
சொடியாந்தரம் - கொடுமை
கொடியால் - ஓரால்
கொடியாளன் - கோடாசொரிபாஷாணம்
கொடியாள்கூந்தல் - அம்மையார்கூந்தல்
கொடியிலந்தை - ஓரிலந்தை
கொடியிறக்கம்-துவசமிறக்குதல், முடிவு பண்ணுதல்
கொடியெலுமிச்சை - ஓரெலுமிச்சை
கொடியேற்றம் - திருவிழாத் தொடக்கம், துவசாரோகணம்
கொடியேற்றுதல்-துவசாரோகணம் பண்ணல், படங்களைப் பறக்க வுயர்த்துதல்
கொடியோன் - கற்றூழை, குரூரன்
கொடிவசலை - ஓர் வசலைக்கொடி
கொடிவழி-மலையிற் கொடிபோலச் செல்லும் வழி
கொடிவழித்தீர்த்தம் - வேங்கட மலையிலுள்ளவோர் தீர்த்தம்
கொடிவழுதலை - ஓர் வழுதுணை
கொடிவாகநன் - சனி
கொடிவிட்டுச்சரிதல் - நிரையே நெடுகப் போதல்
கொடிவேம்பு - ஓர் வேம்பு
கொடிவேலி - கொடுவேலி, சித்திரை மூலம்
கொடிறு - கதுப்பு, குறடு, பூசநாள், யானைக்கதுப்பு
கொடு-கொடுமை, கொடுவென்னேவல், வளைவு
கொடுகடி - மிகுகூதல்
கொடுதல்-கூதலாலொடுங்குதல், கூசுதல்
கொடுகொடுத்தல் - மிகக்குளிர்தல்
கொடுகொடெனல் - கூதிர் நடுக்கக்குறி
கொடுகொட்டி-குமரனுடல், சிவன்கூத்து
கொடுக்கன் / கொடுக்கான் } ஓர் விஷச்செந்து, கொடுக்குள்ள செந்து
கொடுக்கி - ஓர் பூடு, கதவின்கொடுக்கி, பணிப்பூட்டு
கொடுக்கு - கவர், கவைத்தாள், பின்கோவணம், தேட்கொடுக்கு
கொடுக்குதல் - கொடுத்தல்
கொடுக்குமதி - கொடுக்கவேண்டியது
கொடுங்கண் - கொடுமை, கொடும்பார்வை
கொடுங்கரி - பொய்ச்சாட்சி
கொடுங்கல் - கொடுகுதல்
கொடுங்காலம் - கொடுமையான காலம்
கொடுங்கால் - உள்வளைந்தகால்
கொடுங்கீறு - கிழித்தசிறுகீற்று
கொடுங்குதல் - கொடுகுதல்
கொடுங்குழை - வளைந்தகாதணி
கொடுங்கூற்று - கொடிய நமன்
கொடுங்கை - உள்வளைந்தகை, கொடுமை, தேர்க்கொடுங்கை, வீட்டின் வெளிப் பக்கம்
கொடுங்கோபிச்சிலை - மஞ்சட்கல்
கொடுங்கோல் - அநீதி, கொடுமையான வாளுகை
கொடுங்கோள் - பின்புறணி, புறம்பேவசைகூறல்
கொடுங்கோன்மை - கொடுங்கோல் செலுத்தல்
கொடுசூரி / கொடுஞ்சூரி } கொடியவள்
கொடுஞ்சொல் - வன்சொல்
கொடுதலைமடிப்பு / கொடுதலைமுடிச்சு / கொடுதலைவிற்பூட்டு } பிரியாதபடி யிசைத்தல்
கொடுதி - மடிப்புத்தொழில், மர ஆணி
கொடுத்தல் - அணைவித்தல், ஈதல், உண்டாக்கல்
கொடுநுகம் - மகநாள், மேழி
கொடுந்தமிழ் - செந்தமிழல்லாதது
கொடுந்தலை - வளைந்ததலை
கொடுந்தறி - வளைந்த முளைக்கோல்
கொடுப்பனவு / கொடுப்பனை / கொடுப்பினை } கொடுக்குந்தன்மை, பெண்ணை விவாகம் பண்ணிக்கொடுத்தல்
கொடுப்பு - கதுப்பு

கொடுப்புப்பீறி - ஓர் சிலந்தி
கொடுப்பை - பொன்னுங்காணி
கொடுமரம் - தனுவிராசி, வில்
கொடுமுடி - கோவில் முதலியவற்றின் சிகரம், மலையினுச்சி, கோயமுத்தூர் ஜில்லாவைச் சேர்ந்த ஓரூர்
கொடுமுடிச்சு - காரியங்களைக் கட்டுச்சுற் றாய் முடித்தல், படுமுடிச்சு
கொடுமை - கொடுங்கோன்மை, பொல் லாங்கு, முரடு, வக்கிராந்தபாஷாணம், வளைவு, தீமை
கொடும்பறை - கண்கள்வளைந்த பறை
கொடும்பாடு - கொடுமைப்பாடு
கொடும்பாதகம் - அநீதம், கொடிய து ரோகம்
கொடும்பாவி - அநீதன், மழையில்லாத காலத்திற் கட்டியிழுக்கு மோருரு
கொடும்புரி - கடும்புரி
கொடும்புலி - சிங்கம், சிங்கவிராசி
கொடும்பை - ஓர் பச்சிலை, ஓர்பூடு, குளம், மதகு, மலையருவி
கொடுவரல் - கொணர்தல்
கொடுவரி - புலி
கொடுவாட்கத்தி - வளைந்தகத்தி
கொடுவாய்-ஓர்மிருகம், ஓர்மீன், வெறும் புறங்கூறல்
கொடுவாளை - ஓர் மீன்
கொடுவாள்-அரிவாள், வளைந்தவாள், மழு
கொடுவிஷம் - வெள்ளைப்பாஷாணம்
கொடுவிலை - அநியாய விலை [னை
கொடுவினை - பொல்லாங்கு, கொடிய வி
கொடுவேலி - ஓர்செடி, சித்திரைமூலம்
கொடூரம் - கடுமை, குரூரம்
கொடை - ஈகை, அஃது புண்ணியத் தோற்றம் நான்கினுளொன்று
கொடைசாலி - ஈகையாளன் [பம்
கொடைத்தம்பம் - ஈவோர்சிறுத்துந் தம்
கொடைப்பொருள் - கொடுக்கப்படும்பொ ருள்
கொடைமடம் - வரையாது கொடுத்தல்
கொடைமை - கொடுக்குந் தன்மை
கொடையாளன் - ஈகையாளன்
கொடையாளி - உதாரி
கொடைவினா - கொடுக்கும்வினா [உ-ம்] வேண்டுமோ
கொடைவீரம் - மிகுகொடையினா லுண் டாகும் வீரம்
கொட்குதல் - சுழலல், வளைதல், வெளிப் படல்
கொட்டகச்சி - கொட்டாங்கச்சி
கொட்டகம் - கொட்டில்
கொட்டகை - கொட்டகம் [ன்
கொட்டக்காரன் - தப்பிலி, பொல்லாங்க
கொட்டங்கச்சி - கொட்டாங்கச்சி
கொட்டங்காய் - ஓர் மரக்காய், தேங்காய்
கொட்டடி - சாமானறை, நெல்லுக்கொ ட்டி விற்கிற இடம்
கொட்டணை - ஓர் பூடு
கொட்டத்திரட்சி - திராமலை
கொட்டம் - ஓர்மருந்து, தவறு, தொழு வம், பொல்லாங்கு, மூங்கிற்கொட்டு, நாற்கின்ற கொட்டை, வாசனைப் பண் டம்
கொட்டல் - அடித்தல், அப்புதல், கொட் [டுதல்
கொட்டறை - கொட்டடி
கொட்டன் - ஓர்மரம், குறும்பொல், கொ ட்டாப்புளி, தேங்காய், பருத்த சரீர முள்ளவன்
கொட்டன்பொல்லு - குறும்பொல்லு
கொட்டாகை - கொட்டகம்
கொட்டாங்கச்சி - தேங்காயோடு, சிரட் [டை
கொட்டாங்கரந்தை - ஓர் பூடு
கொட்டாப்பிடி - மரச்சுத்தியல்
கொட்டாப்பித்தல் - உண்ணல்
கொட்டாப்புளி - கொட்டாப்பிடி
கொட்டாமட்டை - தும்புமட்டை
கொட்டாய் - கொட்டகம் [ந்தி
கொட்டாரம் - முதல்வாசல், யானைப்ப
கொட்டாவி-யாக்கைக்குற்ற மைந்தி னொ ன்று, அஃது வாயால் விடும் நெடுஞ் சுவாசம்
கொட்டாவிவிட்டிறுக்கி - நாயுருவி
கொட்டான் - கொட்டன்
கொட்டி - ஓர் கிழங்குப்பூடு, கோவில்வா சல், பார்க்குங்குறி, வார்த்தை சொல் லல், தாளம், கொடுகொட்டி
கொட்டிக்கோரை - ஓர்கோரை
கொட்டித்தலைத்தல் - சிதறடித்தல்
கொட்டியம் - எருது
கொட்டில் - ஒதுக்கிடம், கொட்டகை, பசுக்கொட்டில்
கொட்டு - அடி, உட்டுளையான மரத்து ண்டு, கொட்டகை, கொட்டென்னே வல், சரீரம், சில்விஷகடி, துளையு

டைப்பொருள், பனந்துண்டு, மண்வெட்டி, தாளம், பறை முழக்கம், மத்தள முதலிய வாத்தியம்
கொட்டுக்கன்னார் - கொட்டுவேலை செய்யுங் கன்னார்
கொட்டுக்கிணறு - சங்கிலைக்கிணறு [ம்
கொட்டுக்கூடை-ஓர்கூடை, ஓர் பாத்திர
கொட்டுச்செத்தல் - அறக்காய்ந்த தேங்காய்
கொட்டுண்ணல் - சிந்துண்குதல்
கொட்டுதல் - அடித்தல், அப்பல், குட்டல், குவித்தல், கையொடுகைதட்டல், சிந்துதல், தேள் முதலிய கடித்தல், பறையடித்தல், பூசுதல்
கொட்டுப்பனை - தறிபட்டபனையினடி
கொட்டுப்பித்தளை - கொட்டுவேலை செய்யும் பித்தளை
கொட்டுமுழக்கு-மேளதாளமுதலிய வாச்சியம்
கொட்டுமுறி - உயர்ந்த பித்தளை [யம்
கொட்டுமேளம் - நட்டுவமேளம், வாத்தி
கொட்டுவாய் - சிறுசெந்துக்கள் குற்றின குற்றுவாய்
கொட்டுவான் - சொட்டாப்புளி, தேள் முதலிய செந்து
கொட்டுவேலை - கொட்டிச்செய்த வேலை
கொட்டை - ஓர் காதணி, ஓர் மரம், சும்மாடு, தலையணை, கொட்டைக்கரந்தை, நூற்குங்கொட்டை, பாத குறட்டின் குமிழ், வித்து, அரைச்சதங்கை, தும்பு
கொட்டைகட்டுதல் - ஓர் விளையாட்டு
கொட்டைக்கரந்தை - ஓர்கரந்தை
கொட்டைக்காய் - தசையற்றகாய்
கொட்டைக்கைச்சி } சிரட்டைக்கயில்
கொட்டைக்கையில் }
கொட்டைச்செத்தல் - அறச்செத்தல், கொட்டைத் தேங்காய்
கொட்டைத்தேங்காய்-கொப்பருத் தேங்காய்
கொட்டைநூற்றல் - கொஞ்சங் கொஞ்சமாய்க்கவர்தல், நூல்நூற்றல்
கொட்டைபற்றுதல் - பிஞ்சுகளுக்குட் கொட்டை பிடித்தல்
கொட்டைபோடுதல் - சாதல், பலாமரம் பிஞ்சு பிடித்தல்
கொட்டைப்பாக்கு - காய்ந்தபாக்கு
கொட்டைப்பாக்குத்தலைப்பா - குஞ்சுத் தலைப்பா
கொட்டைப்பாலை - கொட்டைக்கரந்தி
கொட்டைப்புளி-கொட்டையெடாத புளி
கொட்டைப்பெட்டி - பஞ்சுப் பெட்டி, மடிப்பெட்டி
கொட்டைமுதல்-கைமுதல், விதைமுதல்
கொட்டைமுத்து - ஆமணக்கு முத்து
கொட்டைமுந்திரி } ஓர்மரம்
கொட்டைமுந்திரிகை }
கொட்டையாடுதல் } பஞ்சு சுகிர்தல்
கொட்டையிடுதல் }
கொட்டையிலந்தை - ஓரிலந்தை
கொட்டையூர் - ஒரு சிவஸ்தலம்
கொட்பு - சுழற்சி, திரிபு, வளைவு
கொணர்தல் - கொண்டுவரல்
கொணு - கொணுவென்னேவல்
கொண்கன் - கணவன், தலைவன், நெய்தனிலத் தலைவன்
கொண்டகுளம் - எட்டிமரம்
கொண்டக்காரர்-கரையாரி லோர்பகுதி
கொண்டக்கிரி - ஓர்பண்
கொண்டாச்சானி - நஞ்சறுப்பான்
கொண்டபாரம் - நிறைபாரம், பொறுக்கும்பாரம்
கொண்டம் - குறிஞ்சா
கொண்டலடித்தல் - மகளிர் விளையாட்டினொன்று
கொண்டலாத்தி - கொண்டைக்கிளாறு
கொண்டல் - ஓர் விளையாட்டு, கிழக்கு, கீழ்காற்று, முன்பனிப் பருவத்தின் காற்று, மேகம், கொள்ளுதல்
கொண்டல்மிதித்தல் - தீ மிதித்தல்
கொண்டல்வண்ணன் - திருமால்
கொண்டவன் - மணஞ்செய்த கணவன்
கொண்டற்கல் - மந்தாரச்சிலை
கொண்டற்பகை - வாயு
கொண்டாடல் - மெச்சல்
கொண்டாடுதல் - ஆசரித்தல், சீராட்டுதல், பாராட்டுதல், மெச்சுதல்
கொண்டாட்டம் - சங்காத்தம், சந்தோஷம், சீராட்டு, பொழுதுபோக்கு
கொண்டாட்டு - கொள்கை, சீராட்டு
கொண்டானடித்தல் - கொண்டலடித்தல்
கொண்டான் - ஓர் விளையாட்டு, கணவன்
கொண்டி - கதவிற்குமி, கொழுமாட்டுமிரும்பு, கொள்ளை, உணவு, திறை
கொண்டிமகளிர் - பிடித்துவந்த மகளிர், பரத்தையர்

கொண்டிமாடு - பட்டிமாடு
கொண்டியம் - வெறும்புறங்கூறல்
கொண்டியாரம்-இறுமாப்பு, சிறப்பு, நிந்தை, பிறர் காரியத்திற் கையிடுகை
கொண்டிலாத்தி - கொண்டலாத்தி
கொண்டிலான் - கொண்டைக்கிளாறு
கொண்டுகூட்டு - பொருள்கோளெட்டினுென்று, அஃது கவி கருதிய பொருள் வசனங்களைத் தெரிந்தெடுத்துப் பயன்படுத்துவது
கொண்டுணி - கோட்சொல்வோன்
கொண்டுவிற்றல் - எதிர்ச்செட்டு
கொண்டேசன் - சுக்கு
கொண்டை - ஆணி முதலியவற்றின் தலை, இலந்தைக்கனி, ஐம்பாலினுென்று அஃது பக்கன் முடித்தல், பட்சியின்சிகை, மயிர்முடி
கொண்டைக்கட்டி - ஓர் வேளாளன்
கொண்டைக்கரிச்சான் - கரிக்குருவி
கொண்டைக்காரன் - செருக்கன், மயிர்முடியுள்ளோன், மேன்மையுடையவன்
கொண்டைக்கிருட்டி - கொண்டலாத்தி
கொண்டைக்கிளாறு - ஓர் குருவி
கொண்டைக்குச்சு - கொண்டையிற் செருகுமோர்பணி
கொண்டைச்சாணிக்கிழங்கு-நஞ்சறுப்பான்
கொண்டைச்சன், கொண்டைச்சான் - ஓர் குருவி
கொண்டைச்சி - கொண்டைக்கிளாறு
கொண்டைச்சுத்தியல் - ஓர் சுத்தியல்
கொண்டைத்தலை - மயிர் முடித்தலை
கொண்டைத்துலா - தலைத்துலா
கொண்டைமுசு, கொண்டைமுசுறு - ஓர் குரங்கு
கொண்டையன் - ஓர் பருந்து
கொண்டையாணி - சடையாணி
கொண்டையூசி - குண்டூசி
கொண்டைலாத்தி கொண்டலாத்தி -
கொண்டோடி - துலாவையுங் கொடியையும் பிணைக்குங் கயிறு
கொண்டோன் - நாயகன்
கொண்மூ - ஆகாயம், முகில்
கொண்மூமுத்து - மேகத்திற் பிறந்த சூரியனிற முத்து
கொதி - காய்ச்சல், கொதித்தல், கொதியென்னேவல், கோபம், சூடு, துக்கம், வெப்பம்
கொதிகுடல் - பசிதாங்கா வயிறு
கொதிகொள்ளுதல்-வெப்புக் கொள்ளுதல்
கொதித்தல் - கடுக்கல், கோபித்தல், நீர் முதலிய பொங்குதல், வெப்பித்தல்
கொதிநீர் - வெந்நீர்
கொதிப்பித்தல் - சிறுபோசனஞ் சமைத்தல், சுடச்செய்தல்
கொதிப்பு-காய்ச்சல், சூடு, துடிப்பு, பொங்கு மூர்க்கம்
கொதிமந்தம் - வெப்புமந்தம்
கொதியல் - கொதிப்பு
கொதியிறங்குதல், கொதியெடுக்குதல் - ஆங்காரங் குறைத்தல்
கொதியெண்ணி - போசனத்துக்குக் காத்திருப்போன்
கொதியெண்ணெய்-கொதிப்பிக்கு மருந்தெண்ணெய்
கொதுகு - கொசுகு
கொதுகுலம் - மழலை கொஞ்சுதல்
கொதுகுலித்தல் - குழைந்துருகுதல்
கொதுகொதுத்தல், கொதுகொதுப்பு, கொதுகொதெனல் - ஒலிக்குறிப்பு, கொதித்தெழும்புதல்
கொத்தடிமை-பரவணியானவடிமை, பழவடிமை
கொத்தணி - குண்டுணி
கொத்தமல்லி - ஓர் சரக்கு
கொத்தமல்லிவைசூரி - கொப்புளிப்பான்
கொத்தம் - எல்லை
கொத்தரித்தல் - கொத்திடுதல்
கொத்தலரி - ஓரலரி
கொத்தல் - கொத்துதல்
கொத்தவரை - ஓரவரை, சீனியவரை
கொத்தவால் - சந்தை விசாரணைகாரன்
கொத்தழிதல் - நிர்மூலமாதல்
கொத்தளம் - மதிற்புறம், அரண்
கொத்தளி - ஓர் பாய்
கொத்தனை - ஓர் மீன்
கொத்தான் - ஓர் செடி
கொத்தியரித்தல் - நாசமாக்குதல்
கொத்திலை - நிலவேம்பு
கொத்து-உணவு, குடும்பம், கெத்திடல், கொத்துதல், கொத்தென்னேவல், திரள், நாழி என்னுமளவை, பூங்கொத்து, வர்க்கம்
கொத்துக்கட்டி - இடமண்
கொத்துக்கத்தரி - ஓர் கத்தரி
கொத்துக்குறடு - நண்டு

மாச்சி - பாம்புகொல்லி
மாச்சிலே - மாக்கல்லு
மாஞாலம் - மாசாலம்
மாஞ்சி - ஓர் வாசனைப் பண்டம், சடா மாஞ்சி
மாஞ்சில் - ஓர் மருந்து, சடாமாஞ்சில், மகிழ மரம்
மாடகம் - வீணை முறுக்காணி
மாடக்குழி - விளக்குவைக்குஞ் சுவரறை
மாடப்புறா - ஓர் புறா
மாடப்புறாக்கண்ணிறம் - அமுக்கிரா
மாஷம் - உழுந்து
மாடம் - உப்பரிகை, உழுந்து, மண்டபம்
மாடல் - செய்தல்
மாடன் - ஓர் பேய், மடையன்
மாடி - அரண்மனை, இக்கட்டு, இரணைப் பல், கோபம், தரித்திரம், குளிர், புடைவையோரம், மெத்தை
மாடியம் - பாதை
மாடு - அகன்மணி, இடம், இரத்தினம், சீதனம், செல்வம், பக்கம், பசுப்பொது, பொன்
மாடை - அரை வராகனெடைப்பொன், பொன், விரிந்து முன் வளைந்திருத்தல், மாசை [பன்
மாடைக்கொம்பன் - உள்வளைந்த கொம்
மாட்சி } அழகு, பெருமை, நன்மை
மாட்சிமை }
மாட்டடி - குருட்டடி
மாட்டல் - மாட்டுதல், அழித்தல்
மாட்டறைதல் - உறுதியின் கீழ்ப்புறத்தெழுதல்
மாட்டாங்கோல் - மாடோட்டுங்கோல்
மாட்டாமை - இயலாமை
மாட்டார் - ஏலாதார்
மாட்டிலேயான் - பெரிய ஈ
மாட்டிறக்கம்-ஆற்றிலே மாடிறங்குதுறை
மாட்டீ - பேரீ
மாட்டுக்கிடை - பசுத்தொழுவம்
மாட்டுக்கொட்டில் - பசுக்கொட்டில்
மாட்டுண்ணி - பேருண்ணி
மாட்டுதல் - அடித்தல், இயலுதல், கடாவுதல், கட்டுதல், சம்மதித்தல், செருக்குதல், பூணுதல், மாள்வித்தல், மூட்டுதல்
மாட்டுத்தாள் - பருக்கன் கடுதாசி
மாட்டுமூலைக்காளான் - ஓர் காளான்
மாட்டெறிந்தொழுகல் - ஓர் யுக்தி அது ஒன்றற்குச் சொல்லப்பட்ட விலக்கணத்தை யதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கு மாட்டிச்சொல்லி நடத்தல்
மாட்டேற்று - குறிப்பு, புறத்துச் செலுத் [துகை
மாணம் - மாட்சிமை
மாணல் - நன்மை, மாட்சிமை, சிறத்தல்
மாணவகம் - கல்வி
மாணவகன் - அறிவீனன், பிரமசாரி, பிள்ளை, மாணாக்கன்
மாணவம் - பதினாறு கோவையுள்ள முத்தாரம்
மாணவன் - பிள்ளை, மனிதன், இளைஞன், பிரமசாரி
மாணவ்வியம்-சிறுவர் கூட்டம், மாணவர் கூட்டம்
மாணாக்கன் - கற்போன்
மாணாமை - மாட்சிமைப்படாமை
மாணார் - பகைவர்
மாணி - ஆண்குறி, குறள், பிரமசாரி, மருக்கம், இந்துப்பு
மாணிகை - எட்டுப் பலங்கொண்ட நிறை
மாணிக்கத்தாள் - வேசி
மாணிக்கம் - சிவப்புக்கல், செம்மணி, அது நவமணியி னொன்று
மாணிக்கவாசகன் - திருவாதவூரன்
மாணிக்குழி - ஓரூர்
மாணிக்குறி - ஆண் குறி
மாணிபந்தம் } உப்பு
மாணிமந்தம் }
மாணை - ஒரு கொடி
மாண் - மாட்சிமை, மாணென்னேவல்
மாண்டது - மகிமைப்பட்டது
மாண்டல்-மாட்சிமைப்படுதல், இறத்தல்
மாண்டவர் - மாண்டார், இறந்தவர்
மாண்டார் - இறந்தோர், பெரியோர், சிறந்தோர்
மாண்டூகம் - உபநிடத முப்பத் திரண்டி னொன்று
மாண்பு - அழகு, பெருமை, மாட்சிமை
மாதங்கம் - அரசு, உத்தியாபரணம், யானை
மாதங்கர் - சண்டாளர்
மாதங்கன் - அரச மாதுக்கும் வேடனுக்கும் பிறந்து செருப்புத் தைப்போன், கீழ்மகன், வேடன்
மாதங்கி - காளி, துர்க்கை

மாதசூதகம் - மாததூரம்
மாதச்சங்கிரமம் - மாதப் பிறப்பு
மாதண்டம் - இராச வீதி, பெரும்பாதை
மாததூரம் - மகளிர் சூதகம்
மாதநம் - இலவங்கம்
மாதப்பிறப்பு - சூரியனோ ரிராசியி னின்று மற்றோ ரிராசிக்குச் செல்லுஞ் சமயம்
மாதப்புரு - ஓர் நீர்ப்புள்
மாதம் - கடைதல், கராம்பு கொல்லல், சந்தோஷம், பாதை, பெருமை, மதம், மாசம்
மாதரி - காளி
மாதர் - அழகு, ஆசை, இசைச்சொல், தலைவியர், பெண்கள்
மாதர்குணச்சலம் - கெந்தகம்
மாதலி - இந்திரன் சாரதி
மாதலுங்கம் - மாதளை
மாதவப்ரியம் - செம்பூகினி
மாதவம் - இனிமை, கள், தவம், வசந்தகாலம், வைகாசி மாதம்
மாதவர் - முனிவர்
மாதவறுதி - மாதக்கடை
மாதவன்-திருமால், வசந்தன், முனிவன்
மாதவி-அருச்சுனன் மனைவி, ஓர் கொடி, கண்ணன் மனைவி, கள்ளினையட்ட வெல்லம், குருக்கத்தி, கோவலன், கூத்தி, சீனி, துளசி, துர்க்கை, தூதிகை, நாடகக் கணிகை, வசந்தகால மல்லிகை
மாதவிகை - வசந்த மல்லிகைக் கொடி
மாதவிகொழுநன் - அருச்சுனன், கண்ணன்
மாதவிடாய் - மாதத்தீட்டு
மாதவிடை - மாதத்தீட்டு
மாதளை - ஓர் மரம், மாதுளை
மாதளைச்சிலை - மாந்தளிர்க்கல்
மாதறி - விட்டம்
மாதனம் - கராம்பு
மாதன் - வித்யா தநங்களாற் கர்வித்திருப்பவன்
மாதா - தாய், பார்வதி, அளப்பவன்
மாதாந்தம் - மாத வுறுதி
மாதாமஹன் - தாயைப் பெற்ற பாட்டன்
மாதாமஹி - தாயைப் பெற்ற பாட்டி
மாதானுபங்கி - திருவள்ளுவர்
மாதி - மா, வட்டமா யோடல்
மாதிகம் - குதிரை மார்க்கம்
மாதிபோதி - நெருஞ்சில்

மாதிமாதிர்த்தனார் - புறநானூறு பாடிய புலவரி லொருவர்
மாதிரம் - ஆகாயம், திசை, பூமி, மண்டலம், மலை, யானை
மாதிரி - அதிவிடயம், மாதிரிகை
மாதிரிகை - சாயல், மாதா, விதம்
மாதிரு - ஆகாயம், இரேபதி, இலக்குமி, பசு, பார்ப்பனிச்சி, பூமி, மாதா
மாதிருகசிதன் - பரசுராமன்
மாதிருகாசிதன் - அறிவீனன்
மாதிருகாதுகன் - இந்திரன்
மாதிருகை - அரிவரி, கைத்தாய், தேவி, மாதா
மாதிருகோத்திரம் - மாதா வமிசம்
மாதிருஸ்தானம் - நாலாமிடம்
மாதிருமுகன் - அறிவீனன்
மாதிர்காரகன் - சந்திரன்
மாது - அசைச்சொல் [உ-ம்] விளிந்தன்று மாதவர்த்தெளிந்த வென்னெஞ்சு, பெண், விருப்பம், கன்னியாராசி, காதல், பெருமை
மாதுகரம் - பிரமசாரி பிச்சை, வீடுதோறுஞ் சென்று பிச்சை யெடுத்தல்
மாதுங்கம் - கொம்மட்டி மாதளை, மாதவி, கையாந்தகரை
மாதுபாகம் - புட்பராகம், பெண்பக்கம்
மாதுமை - பெண்டன்மை
மாதுரம் - மல்லிகை
மாதுரி - சாராயம்
மாதுரியம் - மிகுமதுரம், இனிமை
மாதுரு - மாதா
மாதுருகமனம் } மாதுருகரணம் } ஈன்றாட்கலத்தல் இது பாதக மொன்பதி னொன்று
மாதுருமட்டை - விசாள்மட்டை
மாதுலங்கம் - மாதளை, கொடி மாதுளை
மாதுலம் - ஊமத்தை
மாதுலன் - மாமன், தாயுடன் பிறந்தவன்
மாதுலஸ்தானம் - ஐந்தாமிடம்
மாதுலா } மாதுலானி } மாமன், மனைவி
மாதுலி - மாதலி, மாமன் மனைவி
மாதுலுங்கம் - மாதளை
மாதுலை - மாமி, மாதுலன் மனைவி
மாதுவசை - பெண் வசம்பு
மாதுவம் - கள்
மாதுளங்கம் } மாதுளம் } மாதளை

மாதுளே - ாமதுளம், தாடிமம்
மாதுறப்பு - உத்தியாபரணம்
மாதூகரம் - மாதுகரம்
மாதேவன் - சிவன், பன்னோருருத்திரரி லொருவன்
மாதேவி - பார்ப்பதி, ஊமத்தை
மாதொருபாகன் - சிவன்
மாதோ - அசைச்சொல்
மாத்தகை - மிகுசிறப்பு, மிகுதகை, பெருந்தகை
மாத்தியாகி - ஞானிகளி லோர்வகை
மாத்த்யானம் } மத்தியானம், மத்தியா
மாத்தியானிகம் } ன வந்தனம்
மாத்திரம் - அளவு, தனிமை, அற்பம்
மாத்திரி - மத்திரன் மகள்
மாத்திரை - அளவு, அற்பம், காதணி, காலநுட்பம், காலவிரைவு, குளிகை, குற்றுயிரெழுத்து, பாக்கியம்
மாத்திரைக்கோல் - அளவைக்கோல்
மாத்திரைச்சுருக்கம் - ஒரு பொருள் பயந்து நிற்பதோர் சொல்லொரு மாத்திரை குறைய வேறோர்பொருள் பயக்கப் பாடுவது [உ-ம்] ஏரி, எரி
மாத்திரைவருத்தனம் - ஒருபொருள் பயப்பதோர் மொழி யொருமாத்திரை கூடப்பிறிதோர் பொருள் பயப்பது, [உ-ம்] ஒதி, ஓதி
மாத்து - வரிசை, மகத்து
மாத்ரி - பாண்டுராஜன் மனைவி, வசம்பு
மாத்ரீபதி - பாண்டுராஜன்
மாத்ருகாதுகன் - இந்திரன்
மாத்ருகேசடன் - மாமன்
மாத்ருநந்தநன் - முருகன்
மாத்விகம் - இலுப்பைப்பூச் சாராயம்
மாநசபூசை - மனப்பூசை
மாநடன் - சிவன்
மாநவன் - பாலகன், மனிதன்
மாநவி - சுவாயம்புவமநுவின் மகள், மாநுடப்பெண்
மாநவ்யம் - மானுடத்தொகுதி
மாநாகம் - ஓர் பாம்பு
மாந்தக்கொதி - ஓர் சுரம்
மாந்தசன்னி - ஓர் நோய்
மாந்தப்புல் - ஓர் புல், காவட்டம்புல்
மாந்தம் - ஓர் நோய், மந்தம்
மாந்தர் - ஆண்மக்கள், மனிதர்
மாந்தல் - அவிந்தடங்கல், உள்ளழிதல், குடித்தல், புசித்தல்
மாந்தளிர் - மாமரத்துளிர், இது துவர்ப்பத்தி ஹென்று
மாந்தளிர்ச்சிலை - கற்கூலி
மாந்தளிர்ப்பச்சை - கொக்குக்கல்
மாந்தன் - ஆண்மகன், மனிதன்
மாந்தாதா - ஓரரசன்
மாந்தாதுரு - ஓரரசன்
மாந்தி - ஓர் கலியாணச்சடங்கு, மாமரம், [மா
மாந்தியம் - மந்தமானது
மாந்திரிகன் - மந்திரவாதி
மாந்திரியர் - மந்திரவாதிகள்
மாந்துதல் - மாந்தல்
மாந்தை - ஓரூர், ஓர் நோய்
மாபத்தியன் - காமன்
மாபலன் - காற்று
மாபலி - மாவலி
மாபலிவாணன் - ஓர் சக்கரவர்த்தி
மாபனம் - அளவு, தராசு
மாபுலி - சிங்கம்
மாபுறபாகம் - வெளியரங்க சிவபூசை
மாபூதி - சத்தநரகி ஹென்று
மாப்பலகை - மாக்கல்
மாப்பிடி - மாப்பிடிப்பு
மாப்பிள்ளே - மணவாளப்பிள்ளே, மருமகன், கணவன்
மாப்பு - மிகுதி, மீன்றிரள், மன்னிப்பு
மாமகக்குளம் - கும்பகோணத்தி லோர் குளம்
மாமகம் - மாசிமகம், மாமாங்கம்
மாமகன் - அம்மான், பிசுனன், மன்மதன்
மாமடி - மாமன்
மாமணி - மாணிக்கம்
மாமம் - மஞ்சள்
மாமரம் - மா
மாமருத்துநூலோர் - வைத்தியர்
மாமலி - அகத்தி
மாமல்லபுரம் - மாபலிபுரம்
மாமன் } அத்தைகொழுநன், அம்மான்,
மாமா } புருஷன்தந்தை, மனைவியின் றந்தை, ஐந்தாமிடம்
மாமன்காரகன் - புதன்
மாமாங்கம் - குரு சிங்கவிராசியி லிருக்கும்போது மாசிமாதத்தில் மக நட்சத்திரம் வரும்நாள், இது கும்பகோணத்தில் பன்னிரண்டுவருஷத்துக் கொருதரம் நடக்கும் விசேஷ திருவிழா
மாமாத்திரர் - வைத்தியர்

மாமி-அம்மான்மனைவி, பிதாவின் சகோதரி, மனைவியின்றாய்
மாமிசதாரி - ஊன்றின்போன்
மாமிசசிலை - கார்நிறக்கல்
மாமிசபேதி - ஓர் பூடு
மாமிசம் - இறைச்சி, ஊன்
மாமிசி - சடாமாஞ்சில்
மாமிசோத்தானம் - உயிர்த்தெழுதல்
மாமுகன்கை - ஐந்து
மாமுகிலை - துளசி
மாமுகில் - குறிஞ்சா
மாமுடி - நெட்டி
மாமுசி - நாயுருவி
மாமுசீ - அருகன், வசிட்டன்
மாமூலனர் - கடைச்சங்கப்புலவரி லொருவர்
மாமேரு - மகாமேரு
மாமை - அழகு, நிறம், கருநிறம்
மாம்படை - வாழை
மாயப்பெண் - மாயாபோகப்பெண்
மாயம் - அழகு, கறுப்பு, தந்திரம், தீமை, பொய், வஞ்சகம், கனவு, தீது
மாயயாக்கை - மாயாதேகம்
மாயரூபம் - மெய்போலத் தோற்றும் பொய்யுருவம்
மாயவள் - இடாகினி, காளியேவல் செய்வாள், தெய்வப்பெண்
மாயவன் - திருமால்
மாயவன்மேனி - நாகப்பச்சை
மாயவித்தை - ஓர் மாந்திரியவித்தை, தந்திரத் தொழில்
மாயவன் - கரியவன், திருமால்
மாயன் - கரியவன், திருமால்
மாயாகாரன் - இந்திரசாலக்காரன் [ல்
மாயாகாரியம் - மாயையிற் றோற்றப்படுதே
மாயாகிருது - மாயாகாரியகத்தன்
மாயாசங்கற்பம் மாயாகாரியம்
மாயாசத்தி - பஞ்சசத்தியி னென்று
மாயாசாலம் } மாயம்
மாயாசித்து }
மாயாசீதை - போலிச்சீதை
மாயாசுதன் - புத்தன்
மாயாசூனியம் - மறைவின்மை
மாயாதம் - முதலை
மாயாதாரகம் - மாயையை ஆதாரமாகவுடையது, மாயையை முதற்காரணமாகவுடையது
மாயாதாரணை - நவதாரணையி னொன்று, அது நாமம், வடிவு முதலிய விகாரங்களின்றிக் காலத்தகத்தும் இடத்தகத்தும் படாத பரமான்மாவிடத்தி லந்தக்கரணஞ் செய்கையாற் புனைந்துரைக்கப்பட்ட பிரபஞ்சத்தை வியாபாரமின்றித் துறத்தற்குக் கருவியான மகா வாக்கியத்தைப் பொருளுணர்ச்சியோ டுச்சரித்தல்
மாயாதி - நரபலி
மாயாதேகம் - நிலையற்ற சரீரம், மாயையாலான தேகம்
மாயாதேவி - புத்தன்றாய்
மாயாதேவிசுதன் - புத்தன்
மாயாபாசம் - பந்தமாமை
மாயாபிரதிபிம்பர் - ஒன்றின் சாயலாயத் தோற்று மரூபிகள், மாயையாற் பிரதிபலிக்கு முருவுடையோர்
மாயாபுரி-சத்தபுரியி னொன்று, பித்தளை, மாயா சரீரம், அரித்துவாரம்
மாயாமந்திரம் - ஓர் மந்திரம்
மாயாமயக்குமாரன் - முருகன்
மாயாமம் - புளி
மாயாமருளி - ஓர் தேவதை
மாயாமலம் - மாயைமலம்
மாயாலட்சணம் - அசத்து, சடம், அநித்தம், துக்கம், கண்டம் ஆகிய ஐந்து
மாயாவதி - இரதிதேவி
மாயாவல்லபம் - மாயாகாரிய வல்லமை
மாயாவாதம் - ஓர் சமயம், ஏகான்மவாதம்
மாயாவாதி - ஓர் சமயி
மாயாவி - மாயக்காரன், மாயைசெய்பவன்
மாயாவித்தை - மாயவித்தை
மாயாவிமோசனம் - மாயைநீங்கல்
மாயாவினோதம் - மாயைவிளையாட்டு
மாயாளி - வட்டத்திருப்பி
மாயு - பித்தம்
மாயுராஜன் - குபேரன் மகன்
மாயூரம்-ஓரூர், மயில், கூட்டம் [பார்வதி
மாயேசுபரி - சத்தமாதர்களி லொருத்தி,
மாயை - அறிவு, இந்திரசால முதலியன, இரக்கம், இரதிதேவி, இலக்குமி, காளி, சத்தபுரியி னொன்று, பஞ்சமாயையி னொன்று, அது சகத்துரூபமான அனிதா தோற்றத்திற்குக் காரணமாகை, பொய், மாயம், மாயாசத்தி, வஞ்சகம், வித்தியாதத்துவமேனி னொன்று, அரித்துவாரம்

மாயைப்பரை - ஓர் சத்தி
மாயைமலம் - மும்மலத் தொன்று, அது மறைப்பு
மாயையுற்றாள் - காளி
மாயோபாதானம் - மாயையை யுபாதான மாகவுடையது
மாயோர் - பெண்கள்
மாயோள் - பெண்
மாயோனாள் - திருவோணம்
மாயோன் - திருமால்
மாயோன்மருமகன் - குமரன்
மாய் - ஆச்சா
மாய்ச்சல் - சாவருத்தம்
மாய்ச்சி - பூட்டுவிலங்கு [தல்
மாய்தல்-சாதல், மடித்தல், மறைதல், அழி
மாய்த்தல் - கொல்லல், மடிதல், மறைத் தல், வருத்தல், அழித்தல்
மாய்ப்பு - மாய்த்தல் [சம்
மாய்மாலம் - எத்து, பே, மாசாலம், மாரீ
மாரகஸ்தானம் - இரண்டு மூன்று எட்டு பதினொரா மிடங்கள்
மாய்வு - சாவு, மறைவு, அழிவு
மாரகம்-மரணம், மரணம் வருவிக்கிறது, மாரி, அழித்தல்
மாரகன் - கொல்வோன், அழிப்பவன்
மாரகாசளம் - குயில்
மாரசயன் - புத்தன்
மாரடம் - மருக்காரை
மாரடித்தல் - இழவுக்கடித்தல்
மாரடைப்பு - நெஞ்சடைப்பு [தி
மாரணசாந்தி - அழிக்கச் செய்யுஞ் சாந்
மாரணமந்திரம் - மாரணத்தொழில்பண் ணு மந்திரம்
மாரணம் - மந்திரத்தாற் கொல்லல், மர ணம் அஃது அட்டகருமத்தொன்று, அழித்தல்
மாரணம்பண்ணுதல் - மந்திராதிகளினா லழித்தல்
மாரணயாகம் - அந்தியேஷ்டி, மாரகஞ் செய்யும் வேள்வி
மாரணவித்தை - சூனியவித்தை, மார ணக்கிரியை
மாரணவோமம் - மாரணயாகம்
மாரண்டம் - பாம்புமுட்டை [று
மாரதம் - நால்வகை யுத்தரத்தி னொன்
மாரதர் - நால்வகையிரதவீரரி லொருவர்
மாரதன் - சிவன், மகாரதன், விட்டுணு

மாரத்துச்சாமை - ஓர் சாமை
மாரமணம் - கருமம்
மாரம் - எதிரிடை, கோட்டகசாலை, மரண
மாரளை - திராய்
மாரன் காமன்
மாராட்டம் - ஓரூர், நகரம்
மாராப்பு - சீலைப் பொட்டணி
மாராப்புப்பட்டை - கத்தியின் கச்சை
மாராயம் - உவகை, சோபனம், வந்த னம், விசேஷம், கோட்டகசாலை
மாரி - அழிவு, உவாதி, ஓர் ஒட்டுநோய், கள், காடுகோள், கொலை, சாவு, நீர், பற் பலரிறக்கு நோய், மழை, மாரிகாலம், மேகம், மாரணம், காடுகிழாள்
மாரிகாலம் - ஐப்பசிகார்த்திகையின் பரு
மாரிக்குடா - வடகீழ்த்திசை [வம்
மாரிசா - பெருந்திரைக் கிளர்ச்சி, மாறு
மாரிசாதம் - வானம்பாடி [பாடு
மாரிநாள் - உத்திரநாள்
மாரிப்பண் - மாரிப்பொழுது
மாரிப்போகம் - புன்பயிர்விளைவு
மாரிமறுத்தல் - மழை வறத்தல்
மாரிமுத்து - ஓர் நோய்
மாரீசம் - அட்டாதசவுப புராணத்தொ ன்று, மாயம்
மாரீசன் - இராவணன் மாமனான ஓரரக் கன், மாயம்பண்ணுவோன்
மாருண்டம் - பாதை, பாம்பு முட்டை
மாருதம் - காற்று, வாயு, பூனைக்காலி
மாருதவன்னக்கல் - காக்கைக்கல்
மாருதவீமன் - ஏகம்ப பாஷாணம்
மாருதாசநம் - பாம்பு
மாருதாத்துமசன் - ஹநுமான்
மாருதாபகம் - எலுமிச்சை
மாருதி - அனுமன், காற்று, வீமன்
மாருதிச்செங்கை - கண்டகிச்சிலை
மாருதிநாதம் - வங்கமணல்
மாருதேயன் - அநுமன்
மார் - பன்மை விகுதி [உ-ம்] தாய்மார், மார்பு, வருங்காலங்காட்டி நிற்குமோர் வினை முற்றுவிகுதி [உ-ம்] உண்மார்
மார்கழி-ஓர் மாதம், மிருகசீரிடம், தனுர் மாதம்
மார்க்கசகாயம் - வழித்துணை
மார்க்கசிரம் - மார்கழிமாதம்
மார்க்கணம் - அம்பு, இரப்பு, தேடல்
மார்க்கணர் - இரப்போர்

மார்க்கண்டர் - ஓர் முனிவர்
மார்க்கண்டேயர் - மார்க்கண்டர்
மார்க்கண்டேயம் - பதினெண் புராணத்தொன்று
மார்க்கதேறு - யோசனைதூரம்
மார்க்கம் - ஆராய்வு, உலகம், ஓர்கூத்து, கஸ்தூரி, கையாந்தகரை, சமயம், தாளப்பிரமாணம் பத்தினொன்று, தெரு, மறுதலை, மார்கழிமாதம், மூலம், வழி
மார்க்கவம் - கரிசாலை
மார்க்கிகன் - வழிச்செல்வோன், வேடன்
மார்ச்சரியம் - பொறாமை இஃது உட்பகையாறினொன்று, விகாரமெட்டினுமொன்று
மார்ச்சனம் - துடைத்தல், சுத்தி செய்தல்
மார்ச்சனி - விளக்குமாறு, துடைப்பம்
மார்ச்சனை - முழவின் வாய்வார், முழவொலி, மண்
மார்ச்சாரகண்டம் - மயில்
மார்ச்சாரகம் - மயில்
மார்ச்சாரம் - பூனை
மார்ச்சாரி - கஸ்தூரி
மார்ச்சாலநியாயம் - சந்தேகிக்கும்படியான நியாயம்
மார்ச்சாலம் - கோமேதகம், பூனை, மாநாய்
மார்த்தண்டன் - எருக்கு, பன்றி
மார்த்தண்டம் - சூரியன்
மார்த்தம் - ஓர் நீதிசாத்திரம், மிருதிவழி
மார்த்தவம் - மிருதுத்துவம்
மார்த்தண்டம் - பதினெண் புராணத்தொன்று அது சூரியபுராணம்
மார்த்தாண்டன் - சூரியன்
மார்த்தோல் - மரமேறிகள் மார்பிலிடுந்தோல்
மார்பகம் - நெஞ்சு
மார்பதை - மாதம்
மார்பம் - மார்பகம்
மார்பு - அகலம், நெஞ்சு, ஐந்தாமிடம்
மாலகம் - மேடு, வேப்பமரம்
மாலதி - இரவு, இளம்பெண், ஓர் மல்லிகை, சந்திரகிரகணம், சிறு சண்பகம், புட்பம், மல்லிகை, முல்லை
மாலதிபத்திரி - சாதிபத்திரி
மாலதிபலம் - சாதிக்காய்
மாலமாயம் - பேயின்றந்திரம்
மாலம் - குங்குமமரம், பேய், வயல்
மாலயம் - சந்தனம், மாளயம்
மாலயற்கரியான் - சிவன்
மாலரும்பு - மராட்டிமொக்கு
மாலர் - கவசம், பார்பனப்பெண்ணுக்குஞ் சூத்திரனுக்கும் பிறந்தோர், புலைஞர், வேடர்
மாலவம் - ஓர் தேசம்
மாலவன் - புதன்
மாலன் - விட்டுணு, வேடன்
மாலாகண்டம் - நாயுருவி
மாலாகாரன் - பூவிற்போன்
மாலாதீபகம் - ஓரலங்காரம், தீபகச்சொல் மாலையாய் வருவது [உ-ம்] மனைக்கு விளக்கு மடவாண் மடவாடனக்குத்தகைசால் புதல்வர்
மாலாபலம் - உருத்திராக்கம்
மாலி - ஆதித்தன், ஓரரக்கன், கள், மாலையணிந்தவன்
மாலிகன் - பூவிற்போன்
மாலிகை - ஓர்மது, கழுத்தணி, நிரல்படநிற்குங்குழூஉ, மகள், மாலை
மாலிங்கம் - இலிங்கபாஷாணம்
மாலிமி - இளமைப் பருவத்திற் செய்நட்பு, மாலுமி
மாலிமை - மாலுமி, மாலுமித்தனம்
மாலியம் - புஷ்பம், மானம்
மாலியவான் - ஓரரக்கன்
மாலினி - உமை, கங்கை, காளி, பூமாலைக்காரி
மாலினிகரணம் - நவபாதகத் தொன்று
மாலின்யம் - அழுக்கு
மாலுகம் - வேம்பு
மாலுக்கிளையாள் - துர்க்கை, மால்தங்கை
மாலுங்கம் - புளிமாதுளை
மாலுடைக்கண்டன் - புருடபாகம்
மாலுதல் - மயங்குதல்
மாலுதாசனன் } கண்குத்திப் பாம்பு
மாலுதானம் } கண்குத்திப் பாம்பு
மாலுதானன் } கண்குத்திப் பாம்பு
மாலுநதிவந்தோன் - பிரமன்
மாலுமி - மீகாமன்
மாலுமிசாத்திரம் - கடலோடிகளின்கணிதம்
மாலுறல் - மயங்கல், மாறுபாடாய்நினைத்தல்
மாலூரம் - வில்வமரம், வில்வம், வேம்பு
மாலூர்தி - கருடன்
மாலை - அந்திப்பொழுது, அரசன்மனை, இயல்பு, இரா, ஒழுங்காயிருப்பது,

ஒழுங்கு, சொல்லாலேனும் பூவாலே
னும் பொன்னாலேனும் மணியாலே
னுந் தொடுத்த தொடை, நோய்,
பெண், முறை, வரி, வரிசை
மாலைக்காதம் - மாலைநேரம்
மாலைக்கண் - மாலைக்காலத் திருட்பிடிக்
குங்கண், மாலைக்காலத்தில் பார்வை
மங்குங்கண்
மாலைக்காமாலை - மாலைக்கண்
மாலைசூட்டு - சுயம்வரம்
மாலைநுழைஞ்சான் - ஓர் குருவி, ஓர்பூடு
மாலைநேரம் - அந்திப்பொழுது
மாலைப்படிகம் - பளிங்கு
மாலைப்பண் - மாலைப்பொழுது
மாலைமாற்று - முதலாறுடுத்துங் கடை
தொடுத்தும் வாசிக்கவொருபடித்தாய்
முடியும் பா
மாலையணி - ஓரலங்காரம் அது பின்பின்
வருவனவற்றிற்கு முன் முன் வந்த
வவற்றைவிசேடியங்களாகவேனும் வி
சேடணங்களாகவேனுஞ் சொல்லுதல்
[உ-ம்] மன்னிவள கண்காதளவுங்கா
துதோண்மட்டிசையும் எனவும்,புனலு
மதினுறு மலருமதன் மணமு மென
வும் வரும்
மாலையாங்காலம் - மாலைநேரம்
மாலையீடு - மாலைசூட்டு
மாலையுவமை - ஓரலங்காரம் அஃது ஒரு
பொருட்குவரும்பலவுவமையை மாலை
யாகத் தொடுத்துக் கடைக்கட் பொரு
ளைக் கூட்டி யுரைப்பது
மாலைவாரம் - மாலைப்பொழுது
மாலைவெள்ளி - அந்திவெள்ளி
மாலோன் - திருமால், புதன்
மால் - அருகன், இந்திரன், கண்ணேணி,
கம்மாளர் கருவியினொன்று, கருமை,
காற்று, கொட்டில், சோழன், திரு
மால், பழமை, புகர்நிறம், புதன், பெ
ருமை, மயக்கம், மேகம், வலை, வீடு,
வெற்பு, வேட்கை, விஷ்ணுகரந்தை
மால்தங்கை - உமை, ஏகம்ப பாஷாணம்
மால்தாரம் - அரிதாரம்
மால்தேவி - தாளகம்
மால்தொடை - துளசி
மால்பாகலட்சுமி - அரிதாரம்
மால்பு - கண்ணேணி, மூங்கிலேணி
மால்முருகு - துளசி
மால்மைத்துனன் - சிவன், துருசு
மால்விந்து - அப்பிரகம்
மால்வீடு - சாலக்கிராமம்
மால்வெட்டல் - நெல்லுவெட்டல்
மாவகம் - இலுப்பை, காஞ்சிரை
மாவட்டை - செவ்வட்டை
மாவணங்கி - குங்குமப்பூ
மாவதை - தேனில்லாவதை
மாவலர் - குதிரைப்பாகர், யானைப்பாகர்
மாவலி - ஓர் சக்கிரவர்த்தி
மாவிடை - மரச்செறிவு
மாவிட்டம் - கடனுரை
மாவிரதம் - உட்சமயமாறினொன்று
மாவிரதியர் - இலிங்கிகள்
மாவிருக்கம் - சதுரக்கள்ளி
மாவிலங்கு } ஓர் மரம்
மாவிலங்கை } ஓர் மரம்
மாவிலந்தம் - விடத்தேர்
மாவிலிங்கு - ஓர்வகை மரம்
மாவிலைத்தோரணம் - மாவிலையாலிடுந்
தோரணம்
மாவிளக்கு-மாவினாற்செய்த நெய்விளக்கு
மாவிளம் - வில்வம்
மாவிறங்கல்-மாப்பிடிப்புக் கீழ்ப்படுதல்,
மாவிறங்கியது
மாவீரன் - அதிவீரன்
மாவுத்தன் - குதிரைப்பாகன், யானைப்
பாகன்
மாவுரம் - வலி
மாவெனல் - அழைத்தல்
மாவொல்லி - ஓர்வித வொல்லி
மாழம் - உளுந்து
மாழாத்தல் - மயங்குதல்
மாழை - அழகு, அறிவின்மை, ஆயம், உ
லோகக்கட்டி, ஓலை, திரட்சி, புளி மா
பொன், மாமரம், இளமை, மாசை
மாழ்கு-சா, மயக்கம், மாழ்கென்னேவல்,
மிருகசீரிடம்
மாழ்குதல் - சாதல், சோம்பல், மயக்கம்,
மேவல், மயங்குதல்
மாள - முன்னிலைபசைச்சொல் [உ-ம்]
சிறிது தவிர்ந்தீகமாளநின்பரி சிலருய்
ம்மார்
மாளயபட்சம்-புரட்டாசி மாதத்து அபர
பக்கத்துப் பிரதமை முதற் பூருவ பக்
கத்துச் சதுர்த்திமட்டுமுள்ள காலம்
மாளயம் - புரட்டாசிமாதத்திற் பண்ணும்
பொதுச்சிராத்தம்

மாளல் - மாளுதல்
மாளவகவளம் - ஓரிசை
மாளவம் - தேயமைம்பத்தாறி ஞென்று
மாளவி - ஓரிராகம்
மாளிகை - அரசன்மனே, வீடு
மாளிகைத்தேவர் - ஓர் ஞானசாரியர்
மாளுதல் - சாதல், தாழ்தல்
மானே - புளியமரம், பொன்
மாறக்கட்டுதல்-இல்லேயென்றுபுரட்டுதல்,
மாறல் - ஆடல், கொடுத்து வாங்குதல், தவிர்தல், மறுபுறமாக்கல், விடுதல், விற்றல்,வேருக்கல், கூத்தாடல், மயங்கல்
மாறனர்-இடைச்சங்கப்புலவரி லொருவர்
மாறன் - சடகோபாழ்வார், பாண்டியன், மாறிவருவது
மாறன்பொறையனர்-ஐந்திணே யைம்பது பாடியவர்
மாருடி - மாறுபாடுகாரன்
மாருடுதல் - எதிராடுதல், மயங்குதல்
மாருட்டம் - மயக்கம், மாறுபாடு
மாறி - மாருடி
மாறு - துடைப்பம், பகை, பிரதி, மாறென்னேவல், மிலாறு, விகாரம், முரண், வேறு, எதிர், இறந்துபாடு
மாறுகண் - சாய்ந்தகண்
மாறுகம் - சீலே
மாறுகூலி - மரமேற்றக்காரர்கூலி
மாறுகோள் - ஒவ்வாமை, விரோதம்
மாறுதல் - மாறல்
மாறுத்தரம் - மறுமொழி [ல்
மாறுபடல்-மாறிப்போதல், விரோதித்த
மாறுபடுபொருள்-ஓரலங்காரம் அது கருதிய பொருளேமறைத் ததனேப்பழித்தற்கு மற்ருென்றைப் புகழ்வது
மாறுபாகை } பிசகு, மறுதலிப்பு, விரோதம்
மாறுபாடு }
மாறுவேடம் - வேற்றுருவம்
மாருேக்கத்துநப்பசலேயார் - புறநானூறு பாடிய புலவரி லொருவர்
மாற்கண்டேயம் - மார்க்கண்டேயம்
மாற்கரியோனுதல்விழிப்பால் - அக்கினி மூலே
மாற்சரியம் - மார்ச்சரியம், பொருமை
மாற்பித்தியார் - புறநானூறு பாடிய புலவரி லொருவர்
மாற்றம் - சொல், பகை, வேற்றுமை, மறைத்தல், எதிர்மொழி
மாற்றலர் - பகைவர்
மாற்றல் - ஒன்றுகொடுத் தொன்று வாங்கல், ஒன்றையொன் ருக்கல், கொடாமை, தீர்த்தல், விற்றல்
மாற்றவள் } சக்களத்தி, வேற்றுப் பெண், மற்றைய மனேவி
மாற்ருடிச்சி }
மாற்ருட்டி }
மாற்ருந்தகப்பன்-மாதாவின் பின்தாரத்துக் கணவன்
மாற்ருந்தாய் - பிதாவின் பின்தாரத்துப் பெண்
மாற்ருர் - பகைவர்
மாற்ருன் - பகைவன்
மாற்று - எதிர், கிரயம், பொன் வெள்ளியின்தரம், மாற்றல், உவமை
மாற்றுதல் - மாற்றல்
மாற்றுநொடி - பிரதிநொடி
மாற்றுமை - மாறுபாடு
மாற்றுயர்பொன் - தங்கம்
மாற்றுவஸ்திரம் - பதிற்புடைவை, விலேயுயர்ந்த புடைவை
மான-உவமைச்சொல் [உ-ம்] கொங்கைமுகமான, முன்னிலே யசைச்சொல்
மானக்குறை - மானக்கேடு
மானக்கேடு-சங்கையீனம், மதிப்புக்கெடு
மானசதீர்த்தம் - ஓர் தீர்த்தம் [தல்
மானசம் - கருத்து, புத்தி, மனது, மானதவாவி, மனத்துக்கடுத்தது
மானசன் - மந்மதன்
மானசஜபம் - மனத்திற்செய்யுஞ் செபம்
மானசவீரதம் - கொல்லாமை முதலியன
மானசாலயம் - அன்னப்பறவை
மானசிகம் - மனத்தாற் செய்யுந்தவம்
மானசூத்திரம் - அரைஞாண்
மானதண்டம் - அளவைக்கோல்
மானதநானம்-எழுவகைநானத்தொன்று, அது சற்குருவருளான்மூல மலமறுத்
மானதபூசை - மனேபூசை [தல்
மானதப்பிரத்தியட்சம் - மானதக்காட்சி
மானதம் - மனத்துக்கடுத்தது
மானதவாவி - பிரமலோகவாவி
மானதீபம் - உபநிடத முப்பத்திரண்டி ஞென்று
மானத்தாழ்ச்சி - மானக்கேடு
மானபங்கம் - மானகீனம்
மானபாவி - பெரும்பாவி
மானபோதம் - சிற்பநூன் முப்பத்திரண்டினென்று

மானமா - கவரிமா
மானம்-அகங்காரம், அபிமானம், அளவு, உவமை, ஒருவிதப் பொருத்தம், கணிதம், குற்றம், நேசம், பிடிப்பு, பெருந்தன்மை, பெருமை, மரியாதை, வலி, விமானம், வெட்கம், ஆமணக்கு, நிலை த்வருது நிற்கும் பேராண்மை, வானம்
மானம்பாடி - வானம்பாடி
மானரந்தரி - நாழிகைவட்டில்
மானரியம் - பூராயம், விடுப்பு
மானல் - இலச்சை, ஐயம், ஒத்தல், மயக்கம், மயங்குதல்
மானவம் - உபபுராணத் தொன்று
மானவர்-ஆண்மக்கள், படைவீரர், மனிதர், மானமுடையோர்
மானவர்ஜிதன் - வெட்கமற்றவன்
மானவு - தெளிவு
மானவேதியன்-வேதமுணர் பேரறிவோன்
மானனம் - சங்கை
மானன் - தலைவன், மூடன், வேடன்
மானு - பாட்டன்
மானுகம் - பெருநாரை
மானுகர் - கோவலன்றந்தை
மானுபரணன் - மானமாகிய ஆபரண முடையோன்
மானுர்-பகைவர், பெண்கள், இலைக்கள்ளி
மானி - மானமுடையோன், மானியென்னேவல், மங்கைக்கரசியார்
மானிகை - ஓர் முகத்தளவு, சாராயம்
மானிடச்சட்டை - மானிடதேகம்
மானிடத்தன் - சிவன்
மானிடத்தன்மன் - குபேரன்
மானிடமுடையோன் } சிவன்
மானிடமேந்தி }
மானிடம் } மனுஷப்பிறப்பு
மானிஷம் }
மானிடர் } மனிதர்
மானிடவர் }
மானிடவைத்தியம்-ஒடதிகொண்டு செய்யும் வைத்தியம்
மானிடன் - மனிதன்
மானிதம் - கனம், மானம்
மானிதை - மகத்துவம்
மானித்தல் - சங்கித்தல்
மானிபம் - மானம், வெட்கம், மானியம்
மானியக்காரன் - சொந்த நிலக்காரன்
மானியம் - அரசர்கள் சம்மானத்தால் விட்டநிலம், சங்கை
மானினி - பெண்
மானுசன் - மனிதன்
மானுடம் } மனுடப்பிறப்பு
மானுஷம் }
மானுடயாகம் - பஞ்சமாவெச்சத் தொன்று அஃது இரப்போர்க் குணவு முதலிய வீதல்
மானுடர் - மனிதர்
மானுடவைத்தியம் - மானிட வைத்தியம்
மானுஷிகம் - மனுஷிகம்
மானுதல் - மானல்
மானுபாவி - மானபாவி
மானேந்தி - சந்திரன்
மானேறு - உத்திரநாள், கலைமான்
மானேக்கியம் - சிறப்பு
மான் - உருவம், ஓர் மிருகம், குதிரை பெண், மகரமீன், மகரராசி, மானென்னேவல், விலங்கின் பொது, மகான்
மான்களங்கம் - சந்திர களங்கம்
மான்களிக்கண் - இருவட்டக் கம்பி
மான்குளம்பு - அடம்பு
மான்கொடி - ஓர் படர்கொடி
மான்செவி - இலைக்கள்ளி, எருமை நாக்கிப் பூடு
மான்செவிக்கள்ளி - ஓர் கள்ளி
மான்மகன் - பிரமன், மன்மதன்
மான்மதம் - கஸ்தூரி
மான்மதச்சேறு - கஸ்தூரிக் குழம்பு
மான்மியம் - மகிமை
மான்மைத்துனன் - சிவன்
மான்றலை - மிருகசீரிடம்
மான்றல் - மயக்கம், மயங்கல்

---

மி

மிதல் - கடத்தல், மிகுதல்
மிகவல்லோர் - அதிவீரர், அறிஞர்
மிகவும் - மிகுதியும்
மிகன் - பெருமை
மிகன்மக்கள் - பெருமையிற் சிறந்தோர்
மிகிரம் - காற்று, முகில்
மிகிரன் - சந்திரன், சூரியன்
மிகிராணன் - சிவன்
மிகுகொடையாளன் - கன்னன், தியாகி

மிகுக்குதல் - மிகுத்தல்
மிகுண்டம் - சாறணை
மிகுதம் - மிகுதி
மிகுதல் - அதிகப்படல், கடத்தல், பூரித்தல்
மிகுதி-அதிகம், திரட்சி, பூரிப்பு, பொலிவு, மதர்ப்பு, மீதி
மிகுத்தல் - அதிகப்படல்
மிகுத்தியல் - வில்வம்
மிகுத்துச்சொல்லல் - விதந்துசொல்லல்
மிகுந்தவனம் - தண்ணீர் விட்டான்
மிகுபலத்தம் - காத்தொட்டி
மிகுபவந்தம் - ஆதொண்டை
மிகை - குற்றம், கேடு, துன்பம், மிகுதி, வருத்தம், அளவின் மிக்கது
மிகைபடக்கூறல்-அதிகப்படச் சொல்லுதல் அது நூற்குற்றம்பத்தி னொன்று
மிகைபடல் - குற்றப்படல், மிகுதல்
மிகையதன்செய்கையுருவகம் - ஓ ரலங்காரம் அஃது உருவகம் செய்கையிலொத்தும் யாதோமிக்குள தெனச் சொல்வது
மிகையொற்றுமையுருவகம்-உருவகத்தில் யாதுமோர் மேம்பாடு தோன்றச் சொல்வது [உ-ம்] தடங்கட்கெண்டை
மிக்கது - மிகுதியானது
மிக்கவன் - பெருமையிற் சிறந்தோன்
மிக்கவை - உச்சிட்டம், ஊண், சோறு, நியாயமல்லவை, நிறை
மிக்கான் - மேலானோன்
மிக்கிளமை - கட்டிளமை
மிக்கு - மிகுதி
மிக்கோர் - அறிஞர், பெரியோர்
மிசி - தாளிசபத்திரி, சதகுப்பை
மிசிகம் - பாம்புவலை
மிசிரம் - கலப்பு, சமம்
மிசிரவர்ணம் - கலப்பு நிறம்
மிசுக்கன் - ஈனன், தரித்திரன்
மிசுக்கை - சின்னத்தனம்
மிசுரம் - உச்சவிசை
மிசை - உணர்வு, உயர்ச்சி, சோறு, தரித்திரம், மிசையென்னேவல், மீமிசைச்சொல், மேடு, மேல்
மிசைதல் - அனுபவித்தல், உண்டல்
மிசைத்திரள் - கரடு
மிசைவடம் - வீரதண்டை
மிச்சம் - சேடம், மிகுதி
மிச்சரம் - மிசிரம்

மிச்சிரகாவநம் - இந்திரன் பூந்தோட்டம்
மிச்சிரம் - கலப்பு
மிச்சில் - எச்சில், ஒழிபொருள், கரி
மிச்சை-அஞ்ஞானம், தரித்திரம், பொய், விலாமிச்சை
மிஞிறு - வண்டு
மிஞ்சல் - கடத்தல், மீதியாதல்
மிஞ்சி - காலணியி னொன்று
மிஞ்சுதல் - மிஞ்சல்
மிடல் - வலி
மிடறு - கழுத்து, கீழ்வாய், தொண்டை
மிடா - குழிசி, பானை
மிடாரி - பிரமன்
மிடி - மிடியென்னேவல், வறுமை
மிடித்தல் - வறுமையுறல்
மிடிமை - வறுமை
மிடியன் - தரித்திரன், வறியவன்
மிடிவு - மிடிமை
மிடுக்கன் - பெலப்பானது, பெலப்பானவன், வலிமையுள்ளவன்
மிடுக்கு - பெலப்பு, வலிமை
மிடுமிடுத்தல் - விரைதல்
மிடுமிடுப்பு - விரைவு
மிடுமிடெனல் - விரைவுக்குறிப்பு
மிடை-தூறு, மிடையென்னேவல், பரண்
மிடைதல் - நெருங்கல்
மிடைதூறு - நெருங்கிய காடு
மிட்டா - அனுபவம், ஆட்சி, சுதந்திரம்
மிணுமிணுத்தல் - இரகசியம் பேசல்
மிணுமிணுப்பு - ஒலிக்குறிப்பு
மிணுமினெனல் - மிணுமிணுத்தல்
மிண்டல் - நெருங்குதல், மிண்டுதல்
மிண்டன் - திண்ணியன்
மிண்டி - கிளப்புமோர் கருவி
மிண்டிபோடுதல் - மிண்டிட்டுப் பெயர்த்தல்
மிண்டு-சார்த்துமிண்டு, மதத்தாற் பிழைத்தல், மிண்டென்னேவல்
மிண்டுதல் - நெருங்கல், மதத்தா லடர்தல்
மிதக்குதல்-மேலே கிளர்தல், மேற்படல்
மிதங்கமம் - யானை
மிதசுரம் - மத்திம சுரம்
மிதத்தல் - கிளர்தல், கிளர்த்தல்
மிதத்துதல் - உயர்த்தல், கிளப்புதல்
மிதத்துரு - கடல்
மிதபாஷிணி-அளவு கடவாத பேச்சுக்காரி
மிதப்பு - உயர்ச்சி, கிளர்வு, மேடு, மேற்படுகை, வலைமுதலியவற்றிற் கட்டிவிடு மறிகுறி

மிதம் - அளவு, மிருதம், வரையறை
மிதலை - கொப்பூழ்
மிதவை - சோறு, தெப்பம், மிதப்பது
மிதாசனம் - அற்பவுணவு
மிதி-அத்தாட்சி, அழகு, அறிவு, கிணற்று மிதி, நெய்வார்கருவியி லொன்று; மிதித்தல், மிதியென்னேவல், விலை, கருஞ்சீரகம், அளவு, கவளம், மதித்தல்
மிதித்தல் - உழக்கல், குதித்தல்
மிதிப்பட்டடை, மிதிபலகை } பாதம் வைக்கும் பலகை
மிதிபாகல் - ஓர் பாகல்
மிதிப்பு - மிதித்தல்
மிதிமரம் - மிதிபலகை
மிதியடி - பாதகுறடு
மிதியல் - மிதிப்பு
மிதியிடுதல்-காலாற் குறிசெய்யல், மிதித்தல்
மிதிலை - சனகனகர்
மிதுக்காங்காய் - ஓர் வெள்ளரிக்காய்
மிதுக்கை - ஓர் வெள்ளரிக்கொடி
மிதுனம்-இரட்டை, ஓரிராசி, ஓர் புள், புணர்ச்சி, ஆண்பெண்
மிதுனவீதி - அருக்கன் வீதியுளொன்று
மிதுனி - கரிக்குருவி
மித்தம் - ஆலசியம், நித்திரை
மித்தியம் - பொய்
மித்தியாசாட்சி - பொய்ச்சாட்சி
மித்தியாகிரசநம் - சபதம்
மித்தியாமதி-அறியாமை, பிழை, பொய்யுணர்வு
மித்தியாவாசகம் - பொய் மொழி
மித்தியாவாதி - பொய்யன்
மித்தியை - கபடம், பொய்
மித்தியோத்தரம் - பொய் மறுமொழி
மித்தியோபசாரம் - சத்துருவுக்கு மித்துருபோற் காட்டல்
மித்திர்துரோகி - சினேக சத்துரு, சினேகனுக்குத் துரோகஞ் செய்பவன்
மித்திரதுருகன் - மாய்மால சினேகிதன்
மித்திரநாள் - அனுடம்
மித்திரபேதம் - மித்துரு பேதம்
மித்திரம் - நட்பு
மித்திரர் - சினேகிதர்
மித்திரலாபம் - சினேக சம்பாதனை
மித்திரன்-சினேகிதன், சூரியன், துவாதசாதித்தரி லொருவன்
மித்திரை - தோழி
மித்துரு - சினேகிதன்
மித்துருதுரோகி - சினேகத்திற் றுரோகம் பண்ணுவோன்
மித்துருத்தானம் - சென்மத்துக்கு நாலாமிடம்
மித்துருபேதம் - சினேகமா யிருந்து பேதித்தல் இது பஞ்ச தந்திரத்தி லொன்று
மித்துருப்பதமை - ஈய மணல்
மித்தை - பொய்
மியா - முன்னிலை யசைச்சொல் [உ-ம்] கேண்மியா
மியூலசிவி - ஓர்பூடு
மியூல் - ஓர் பூடு
மிரசன் - பெருங்காயம்
மிரட்ட - பயமுறுத்த, மயக்க
மிரட்டல் - அதட்டல்
மிரட்டி - பேய்மிரட்டி
மிரட்டுதல் - பயமுறுத்துதல்
மிரதம் - பாம்பு
மிரளுதல் - சங்காலியங் கொள்ளுதல், பயப்படுதல்
மிராசி, மிராசு } முதுசொம், உரிமை
மிரிகை - முறுக்காணி
மிரிசனம் - மிளகு
மிரிசி - மிளகு
மிரிசபத்திரி - வறட்சுண்டி
மிரிஞ்சி - செம்முருங்கை
மிரியல் - மிளகு
மிரு - பாலை நிலம்
மிருககீரம் - மான்பால்
மிருகக்குணம் - ஒழுங்கற்ற குணம், துட்ட குணம், வன்குணம்
மிருகசஞ்சாரம் - ஒழுங்கற்ற நடை, மிருகத்துடன் புணர்தல்
மிருகசயிடகம் - வெருகு
மிருகசாதி - விலங்கு சாதி
மிருகசாலிகை - மான் வலை
மிருகசீரிடம் - ஓர் நாள்
மிருகசீவன்ன் - வேட்டைக்காரன்
மிருகசைடகம் - ஆண் பூனை
மிருகண்டகன் - மார்க்கண்டன்
மிருகண்டன், மிருகண்டு } ஓரிருடி, மார்க்கண்டன் தந்தை
மிருககாமினி - வாயுவிளங்கம்
மிருகதஞ்சகன் - நாய்
மிருகதந்தம் - பன்றிக்கொம்பு

மிருகதரன் - சந்திரன்
மிருகதிருஷ்ணை
மிருகதிஷ்ணிகை } கானல்
மிருகதூர்த்தகன் - நரி
மிருகத்தனம் - மிருகத்தின் றன்மை
மிருகத்தியு - வேட்டைக்காரன்
மிருகநாபி - கத்தூரி, கத்தூரிப் பூனை
மிருகநாபிசம் - கத்தூரி
மிருகபதி - சிங்கம்
மிருகபந்தினி - மான்வலை
மிருகபாலிகை - நாவி
மிருகமதம் - கத்தூரி
மிருகமதவாசை - கஸ்தூரி மல்லிகை
மிருகமர்த்தகம் - நரி
மிருகமாதிருகை - பெண்மான்
மிருகம் - கத்தூரி, பன்றி, மான், மிருகசீரிடம், யானை, விலங்கின் பொது, வேட்டை
மிருகராசன்
மிருகரிபு } சிங்கம், வேங்கைப் புலி
மிருகலாஞ்சனன் - சந்திரன்
மிருகவதாசீவன் - வேடன்
மிருகவாகனன்
மிருகவாசநன் } வாயு
மிருகவ்வியம் - வேட்டை
மிருகாங்கம் - காற்று, சந்திரன்
மிருகாங்கன் - சந்திரன், சிவன்
மிருகாசனம் - சிங்கம், புலி
மிருகாசீவன் - புலி, வேடன்
மிருகாண்டசம் - கஸ்தூரி
மிருகாண்டஜை - கஸ்தூரி
மிருகாண்டி - மிருகத்தன முள்ளவன்
மிருகாதகம் - புலி
மிருகாதிபதி - சிங்கம், சிவிங்கி, புலி
மிருகாயினம் - மான்றோல்
மிருகாரசிங்கி - மிருதாரசிங்கி
மிருகாராதி
மிருகாரி } சிங்கம், நரி, நாய், புலி
மிருகார்த்தகம் - புலி
மிருகி - மான்
மிருகேந்திரம் - ஓர் சைவாகமம்
மிருகேந்திரன் - சிங்கம்
மிருசம் - காட்சி
மிருஞ்சி - செம்முருங்கை
மிருடங்கணம் - பிள்ளை
மிருடன் - சிவன்
மிருடானி - பார்வதி [ஆமை மயிர்
மிருடார்த்தகம்-அபாவ அளவை [உ-ம்]

மிருடாலகம் - மாமரம்
மிருடாவாதம் - இகழா விகழ்ச்சி
மிருடி
மிருடிகம் } மான்
மிருடை - துர்க்கை
மிருடோத்தியம் - பொய்
மிருட்டி - சமைத்தல், சுத்தி, தெளித்தல், நெருக்கம்
மிருட்டேருகன் - கொடையாளன், தற்
மிருணலம் - தாமரை நூல் [பிரியன்
மிருணலி - தாமரை
மிருண் - மண்
மிருதகம் - பிரேதம்
மிருதகாந்தம் - நரி
மிருதங்கபலம் - பலா
மிருதங்கம் - ஒலி, கலைஞான மறுபத்து நான்கினொன்று, முழவு, மூங்கில்
மிருதசங்கை - மரணசங்கை
மிருதசஞ்சீவி
மிருதசஞ்சீவினி } இறந்தவர்களை யெழுப்பு மருந்து, ஓர் மந்திரம், உயிர்தருமருந்து, அமுது
மிருதசூதகம் - மரணசூதகம்
மிருதச்சேதம் - இறத்தல்
மிருதண்டன் - சூரியன்
மிருதஸ்நானம் - குளிப்பாட்டு
மிருதபம் - பிரேதம்
மிருதபாஷாணம் - பாஷாண மறுபத்து நான்கி னொன்று
மிருதமத்தம் - நரி
மிருதம் - நீர்வள்ளி, போர், மரணம், மித்துரு, விளைவு பாஷாண முப்பத்திரண்டி னொன்று, யாசித்து வாங்கிய பொருள்
மிருதவற்சை - கன்றிழந்த பசு, மகவிழந்த பெண்
மிருதாகரம் - இடி
மிருதாண்டன் - சூரியன்
மிருதாமதம் - துருசு
மிருதாரசிங்கி - ஈயம், ஓர்பூடு, சிங்கி பாஷாணம்
மிருதி - தருமநூல், நினைப்பு, மரணம், சமுத்திராப் பச்சை
மிருதிமதாலங்காரம் - நினைப்பணி
மிருதியல் - வில்வம்
மிருதினி - நன்னிலம்
மிருது - சாந்தம், நொய்மை, மந்தம், மழுங்கல், மென்மை

மிருதுகமனை - அன்னப்பேடு, மந்தநடையினள்
மிருதுநட்சத்திரம் - இலகு நட்சத்திரம்
மிருதுபர்வகம் - பிரம்பு
மிருதுபலம் - பேரீந்து
மிருதுபாடிதம் } மெத்தனவான மொழி, மென்மொழி
மிருதுபாஷிதம் }
மிருதுபாஷிணி - மென்மொழியாள்
மிருதுமூர்த்தம் - மரண முகூர்த்தம்
மிருதுரேசநி - இலைக்கள்ளி
மிருதுலோமகம் - முசல்
மிருதுவாதம் - சிறுதென்றல்
மிருதுன்னகம் - பொன்
மிருதூற்பலம் - நீலோற்பலம்
மிருதை - பூமி
மிருதோற்பவம் - கடல்
மிருத்தஞ்சயன் - சிவன்
மிருத்தாலகம் - உவர்மண்
மிருத்திகை - நிலம், மண்
மிருத்தியம் - மண்
மிருத்தியு - இயமன், சூதி, மரணம்
மிருத்தியுஞ்சயன் - சிவன்
மிருத்தியுநாசகன் - சிவன், பாதசரம்
மிருத்தியுபலம் - இலந்தை
மிருத்தியுபலை - வாழை
மிருத்தியுபுஷ்பந்தயம் - மூங்கில்
மிருத்தியுபுட்பம் - கரும்பு
மிருத்தியுபுத்திரன் - கேது
மிருத்தியுப்பிரசூநம் - கரும்பு
மிருத்தியுவஞ்சநன் - சிவன்
மிருத்து - மண், பூமி, மரணம்
மிருத்துகரன் - குசவன்
மிருத்துகாரகன் - மரணத்தைச் செய்யுங் கிரகம்
மிருத்துகிரகம் - மிருத்துகாரகன்
மிருத்துசாந்தி - அவமிருத்தை நீக்குஞ் சாந்தி
மிருத்துசூதகம் - மரண சூதகம்
மிருத்துசூதி - நண்டு
மிருத்துஞ்சயம் - மரணத்தை விலக்குமந்திரம்
மிருத்துஞ்சயன் - சிவன்
மிருத்துநாசகம் - இரதம்
மிருத்துநிலை - மிருத்து கிரகநிலை
மிருத்துபஞ்சகம் } மரணபயம்
மிருத்துபயம் }
மிருத்துமூர்த்தம் - சாமூர்த்தம்
மிருத்துவங்குரகம் - சாப்பறை
மிருத்துவஞ்சனன் - சிவன்
மிருத்துவீசம் - மூங்கில்
மிருநாளம்-தாமரைக் கொடி, விலாமிச்சு
மிருநாறம் - தாமரை
மிலாங்கலி - செங்காந்தள்
மிலாந்தி - வெருட்கொண்டு பார்ப்போன்
மிலாந்துதல்-அலமலந்து பார்த்தல், ஏற இறங்கப்பார்த்தல்
மிலாரடி-உன்மத்தம், மயக்கம், மலாரடி
மிலார்க்கலி - தென்னை
மிலாறு - வளார்
மிலிந்தம் - வண்டு
மிலேச்சகந்தகம் - உள்ளி
மிலேச்சதேசம்-இந்துதேசத்தைச் சூழ்ந்திருக்குந்தேசம், சோனகர் முதலியோர்தேசம்
மிலேச்சத்தனம் - அறிவின்மை
மிலேச்சமண்டலம் - மிலேச்சதேசம்
மிலேச்சமுகம் - செம்பு
மிலேச்சம் - சரச்சுவதியாற்றின் வடதேசம், செம்பு
மிலேச்சரம் - கோதும்பை
மிலேச்சர் - சோனகர், மதிகேடர்
மிலேச்சன் - அறிவீனன், ஈனன், சோனகன்,மிலேச்சகண்டத்தவன், வேடன், கீழ்மகன்
மிலேச்சாசம் - கோதும்பை
மிலேச்சாசியம் - செம்பு
மிலேச்சிதம்-இலக்கணவழுவான பேச்சு, சமஸ்க்ருதமும் மதற்குச்சேர்ந்த பாஷைகளுமல்லாத பிறபாஷை
மிலைச்ச - அணிய
மிலைச்சல் } அணிதல், சூடுதல்
மிலைச்சுதல் }
மிலைதல் }
மிலைத்தல் - மேய்தல்
மிலைய - அணிய, சூட
மிழலை - மழலை, நிரம்பா மென்சொல்
மிழற்ற - மேன்மையாய்ச் சொல்ல
மிழற்றல் - சொல்லல், நிரம்பாமென்சொல், பேசலா னெழுமொலி, மெல்லப் பேசுதல்
மிழற்றுதல் - மிழற்றல்
மிளகரணை - ஓர்செடி, கரண்டை
மிளகறையன் - ஓர் புடைவை
மிளகாய் - ஓர் செடி, மிளகுகாய்
மிளகாய்ச்சக்களத்தி - ஓர் செடி
மிளகாய்ப்புள் - ஓர் புள்

மிள்கு - ஓர்சரக்கு, மரீசம்
மிளகுகரணை - கரண்டை
மிளகுகாய் - ஓர் கார்ப்புக்காய்
மிளகுசம்பா - ஓர் நெல்
மிளகுசாதம் - சித்திரான்னத் தொன்று
மிளகுசாறு - மிளகுநீர், ரசம்
மிளகுதக்காளி - ஓர்தக்காளி
மிளகுதிரி - ஓர் குருநோய்
மிளகுநீர் - அதிரசம்
மிளகோரை - மிளகுகலந்த சித்ரான்னம்
மிளப்பு - இலவுங்கம்
மிளிர - பெருமைப்பட, ஒளிசெய்ய [வல்
மிளிர் - ஒளி, பெருமை, மிளிரென்னே
மிளிர்தல் - ஒளிசெய்தல், பருமைப்படல், பிறழ்தல், புரளுதல், குதித்தல், கீழ் மேலாதல், மறிதல், விளங்குதல்
மிளிர்வு - ஒளிவிடுதல்
மிளிறு - கரடி
மிளை - காவற்காடு, காவல்
மிறல் - பெருமை
மிறிதாறிசிங்கி - மிருதாரசிங்கிபாஷாண
மிறுங்கம் - கையாந்தகரை [ம்
மிறுசீரம் - இலாமிச்சை
மிறுது - சமுத்திராப் பச்சை
மிறுதுபலா - நெல்லி
மிறுதுபுட்பம் - வாகை
மிருத்தாலகம் - துவரை
மிறுத்திகம் - கொடி முந்திரிகை
மிறுந்து - நெல்லி
மிறை - அச்சம், குற்றம், மிறையென்னே வல், வருத்தம், வளைவு, திறை, உலைவு
மிறைக்க - துன்பப்பட, துன்பஞ்செய்ய
மிறைக்கவி - சித்திரக்கவி
மிறைத்தல் - துன்பப்படல், பாடுபடல்;
மினக்கெடல் - தடைப்படல் [உலைதல்
மினக்கேடு - வியர்த்தம், வினைக்கேடு
மினவ - உபசரிக்க
மினவுதல் - உபசரித்தல், வினவுதல்
மினுக்க - விளக்க
மினுக்கம் - ஒளி, பகட்டு
மினுக்கல் - மினுக்குதல் [ட்டு
மினுக்கு - ஒளி, மினுக்கென்னேவல், பக
மினுக்குதல் - ஒளிதோன்றச் செய்தல், பகட்டுதல்
மினுக்குப்பசை - நரும்பசை, நெய்வாரி டும் பசையிஞென்று
மினுக்கெண்ணெய் - ஓரெண்ணெய்
மினுங்க - பிரகாசிக்க
மினுங்குதல் - மிளிர்தல்
மினுங்குபொழுது } சாய் பொழுது
மினுங்குவாரப்பொழுது }
மினுமினுத்தல் - ஒளிசெய்தல்
மினுமினுப்பு - மிளிர்வு
மின்-ஒளி, பெண், மகள், மின்னல், மின் னென்னேவல்
மின்மினி - இருளில் மின்னும்புழு
மின்ன - ஒளிசெய்ய
மின்னல் - ஒளிசெய்தல், மின்
மின்னற்கொடி - மின்மாலை
மின்னற்றளுக்கு - நாகமணல்
மின்னார் - பெண்கள்
மின்னி - கருத்தக்காக்கணம், நீர்ப்பயறு
மின்னியார்த்தல் - சோதி வீசியாடுதல்
மின்னுதல் - பிரகாசித்தல்,மின்னற்காலு
மின்னெறி - மின்னலின் மார்க்கம் [தல்
மின்னெறிதல் - மின்னுதல்

---

**மீ** ஆகாயம், உயர்ச்சி, ஓரெழுத்து, மகிமை, மேல், மேற்புறம்
மீகண்-இடத்தின்மேல், கண்ணின்மேல்
மீகாமன் } மாலுமி
மீகான் }
மீகாரம் - மேலிடம்
மீகை - புலிதொடக்கி, உப்பிலி
மீக்குவம் - மருதமரம்
மீக்கூர்தல் - பெருகுதல்
மீக்கூறல் - கொண்டாடல், புகழ்தல், மெச்சல்
மீக்கூறு - புகழ்
மீக்கூறுவோர் - புகழ்வோர்
மீக்கூற்றம் - புகழ்
மீக்கூற்று - புகழ்ச்சி
மீக்கோள் - ஏறுதல், மேற்போர்வை
மீசரம் - மேலானது, விரைவு
மீசாடுதல் - மீதேவிரைத்தல், மேலாலே கையாடுதல்
மீசு - மிகுதி
மீசுபொலி - முதலள்ளுந்தானியம்
மீசுமீட்டல் - மேலாலேகவர்தல்
மீசுரம் - அதிகம், மிகுஉக்கிரம்
மீசுவைத்தல் - மேலேவைத்தல் [டம்
மீசை-மேலிதழின் மீதுள்ளமயிர்,மேலி
மீச்செலவு - கருவம், மேற்போதல்

மீடம் - மூத்திரம்
மீட்குதல் - இரட்சிக்குதல், சோறு மூத லியவள்ளுதல், திருப்புதல்
மீட்சி - மீளுதல், கைம்மாறு, மீட்டல்
மீட்சியின்விரி - தலைவி சேணகன் றமை செவிலித்தாய்க் குணர்த்தன் முதலாக நற்றாய் கேட்டவனுளங் கொள்வே லனை வினுதலீருயவையாம்
மீட்ட - விரலாலெடிக்க, வீணைவாசிக்க, நாணேற்றி யீர்க்க
மீட்டல்-அள்ளுதல், இரட்சித்தல், வீணை வாசித்தல்
மீட்டிடுதல், மீட்டுதல் - சுண்டுதல், வீணைவாசித்தல்
மீட்டும் - திரும்பவும்
மீட்டெடுத்தல் - இரட்சித்தல், இரையெடுத்தல், மேலாலேயெடுத்தல்
மீட்பர் - இரட்சகர், மீட்கிறவர்
மீட்பு - மீட்குதல்
மீதல் - மிகுதல்
மீதி - கருஞ்சூரை, மிச்சம், மிகுதி
மீதிடல் - கிளர்தல்
மீது - மேல், அதிகம்
மீதுந்தி - நெல்லி
மீதூர - நெருங்க
மீதுரை - பலகால் விளம்பல்
மீதூர்தல், மீதூரம் - நெருங்கல், மேன்படல்
மீந்திருக்க - மிஞ்சியிருக்க
மீந்தோல் - மீத்தோல், மேற்றோல்
மீப்பு - மேம்பாடு
மீப்போர்வை - மேற் போர்வை
மீமாஞ்சை - பிரமாணத்தாலுண்மையறிதல், புறச்சமயமாறி ஞென்று
மீமிசை - மேலுக்குமேல், மேல்
மீமிசைச்சொல் - ஒருபொருட் பன்மொழியடுக்கு [உ-ம்] இடைநடு
மீரம் - சமுத்திரம்
மீராசு - பிரயோசனம்
மீலம் - வானம்
மீலனம் - கண்சிமிட்டு
மீலிதம் - ஓர் அலங்காரம்
மீள - திரும்பவும், மீளவும், இரட்சிக்கப்பட, திரும்ப
மீளல் - திரிதல், திரும்பல்
மீளவும் - மீள
மீளாக்கதி - மோக்கம்
மீளி-அரசன், திண்ணியன், நமன், பாலை நிலத்தலைவன், பெருமை, மேன் மக்கள், வலி, வீரன்
மீளிமை - வீரத்திரம், வன்மை
மீளுதல் - திரும்புதல், மீட்டெடுத்தல்
மீள்வித்தல் - மீளச்செய்தல்
மீற - கடக்க, அதிகரிக்க, மீந்திருக்க
மீறல், மீறுதல் - அடங்காமற்போதல், அதிகரித்தல்
மீனகாதி - கொக்கு
மீனகேதனன் - பாண்டியன், மன்மதன்
மீனக்கொடியோன் - மீனகேதனன்
மீனகோதிகை - நீர்நிலை
மீனங்கம் - மீனெலும்பு
மீனமாதம் - பங்குனி மாதம்
மீனம் - ஓரிராசி, மீன், மச்சம்
மீனம்பர் - ஓர் மருந்து, செம்மீன்வயிரம்
மீனவல்லிகை - மீன்கொத்திக்குருவி
மீனவன் - பாண்டியன்
மீனுஞ்சு - அக்கினிக்கட்டி, ஓர் பூடு
மீனுட்சி - அங்கயற்கண்ணி, குபேரன் மகள், பொன்னுங்காணி
மீனுண்டி - சர்க்கரை
மீனும்பூச்சி - மீன்மினிப்பூச்சி
மீனுய் - ஓர் மீன், நீர்நாய்
மீனுலயம் - கடல்
மீனெரிஞ்சான் - மீனஞ்சு
மீனெறி - மீன்குத்திக்குருவி
மீனேறு - மகரமீன்
மீன் - சித்திரைநாள், நெய்தற்பறை, மகரமீன், மச்சம், விண்மீன்
மீன்குத்தி - ஓர் புள்
மீன்கூடு - மீன்பிடிக்குங் கருவியி ஞென்று
மீன்கொடியோன் - பாண்டியன், மன்மதன்
மீன்கொத்தி - மீன்குத்திப்புள்
மீன்கொல்லி, மீன்கொள்ளி - மீனஞ்சு
மீன்சிதள் - மீன்செதிள்
மீன்சிறகு - மீன்செட்டை
மீன்சினை - மீன்கரு, மீன்கொழுப்பு
மீன்சுவை - சித்திரைநாள்
மீன்செகிள், மீன்செதில், மீன்செதிள், மீன்செலு - மீனின்புறமுள்
மீன்தலைவாளம் - மீனெலும்பு
மீன்பாடு - மீன்படுதல்
மீன்பிடிகாரர் - வலைஞர்
மீன்பிடிப்போர் - வலையர்
மீன்பிரால் - மீன்செகிள்
மீன்பீலி - கெண்டைப்பீலி மீன்
மீன்மலம் - மீனம்பல்
மீன்முள் - மீனெலும்பு
மீன்வேட்டை - மீன்பிடி

முகஆட்டம் - முகமன்
முகக்கடுப்பு - முகச்சினப்பு
முகக்கட்டு - நாணமின்மை
முகக்கட்டை - தாடி
முகக்கந்தம் - முருங்கைமரம் [பை
முகக்களை - முகச்செழிப்பு, முகச்சோ
முகக்கிளர்ச்சி - முகமலர்வு
முகக்குறுவுதல் - முகக்கோட்டரவு
முகக்குறி - முகச்சாடை
முகக்குறிப்பு - முகத்தோற்றம்
முகக்கொள்ளி - கொள்ளிவாய்ப் பேய்
முகக்கோட்டம் - முகப்பொலிவழிவு
முகங்குப்புறல் - முகங்கீழ்ப்புறமாதல்
முகங்குறுவுதல் - முகங்கோடல்
முகங்கொடுத்தல் - இசைதல்
முகங்கொள்ளுதல் - சிலந்தி யுடைக்கமு ணைகொள்ளுதல்
முகங்கோட்டல் - குனிதல்
முகங்கோடுதல், முகங்கோணுதல் - முகங்குறுவுதல்
முகசம் - பல்லு
முகசன் - பார்ப்பான்
முகசம்பவன் - பார்ப்பான்
முகசிங் - ஓர் நோய்
முகசீரி - நாக்கு
முகசுரம் - பனங்கள்
முகசோதனம் - முகங்கழுவுதல்
முகசோதி - எலுமிச்சை
முகச்சரக்கு - பார்வைச்சரக்கு, முதற் சரக்கு
முகச்சாடை, முகச்சாயல் - முகக்குறி
முகச்சாய்ப்பு - முகப் பழக்கத்திற்காகச் சாருதல், விருப்பின்மை
முகச்சித்தி - மறுபேர் மோகிக்கத்தக்க முகமா யிருத்தல்
முகச்செழிப்பு - தாராளம்
முகச்சின்னம்போதல் - வெட்கமடைதல்
முகஞ்சுண்டுதல் - முகங்கருகுதல்
முகஞ்சுளித்தல் - முகஞ்சோர்தல்
முகஞ்செய்தல் - சிலந்திருமிழ்த்தல், பலி த்தல்
முகடி - மூதேவி
முகடு - உச்சி, சுவர்ப்புறத்து நீண்டவுத் திரம், மலை, வீடு முதலியவற்றினுச்சி
முகடேந்தல் - மேற்கொள்ளல்
முகடோடி - முகட்டினீளம்
முகட்டுப்பூச்சி - மூட்டைப்பூச்சி
முகதலை, முகதலைப்பு - முதனெய்யுஞ் சீலைத்தலைப்பு
முகதா - சமுகம்
முகதாவநம் - முகங்கழுவல்
முகத்த - முகத்தையுடைய, முகத்திற் கொண்ட
முகத்தலளவு - நாழிமுதலியவற்றா லளக் குதல்
முகத்தலளவையாகுபெயர் - அளத்தற் குரிய பெயரை யளக்குங் கருவிக்கு வழங்குவது [உ-ம்] நாழி
முகத்தலைத்தல் - கூடிப்பேசல், சந்தித் தல், முகாமுகமாதல்
முகத்தல் - மணத்தல், மொள்ளல் இஃது அளவை நான்கினொன்று, தோண் டல், எடுத்தல்
முகத்தாடணை - கண்ணோட்டம்
முகத்தாட்சணியம் - முகக்காட்சி, ஒருவர் முகங் கண்டவுடனே யுண்டாகுமிரக்க [ம்
முகத்தாராளம் - முகப்பொலிவு
முகத்தாலடித்தல் - முகவெறுப்பை முகக் குறியாற் காட்டல்
முகத்திடு - பிரேதாலங்காரத் தொன்று, இது பிரேதத்தை மூடிப் புடைவை போடுதல்
முகத்துதி - முகமன்வார்த்தை
முகத்துரோணி - முகஞ்செல்லாதவன்
முகத்துவாரம் - கடலுமாறும் பொருந்து மிடம், முகப்பு, வாயில்
முகத்தெளிவு - முகத்தாராளம்
முகநட்பு - முகத்திற்குமுன்காட்டு நட்பு
முகநாடி - முகரூபு
முகநிவாசினி - இலட்சுமி
முகநிலை - முகத்திற்படுந்தரவு
முகந்தகம் - ஈரவெண்காயம்
முகபங்கம் - இலச்சை, முகமாறு
முகபடாம் - யானையின் முகப்போர்வை
முகபாடம் - வாய்ப்பாடம்
முகபூஷணம் - தாம்பூலம்
முகபூரணம் - தாராளமுகம், வாய்நிரம்பி [யது
முகப்படை - முற்படை
முகப்பணி - முகவேலை
முகப்பரீட்சை - அறிமுகம்
முகப்பரு - முகக்குரு
முகப்பழக்கம் - முகப்பரீட்சை
முகப்பிரியம் - முகவாட்டம்

முகப்பு - தலைப்பு, முகத்தல், முகனை, மூட்டு, முன், முன்னிடம்
முகப்புமடை - தலைமடை [ஷம்
முகப்பூச்சு - முகமன், முகமாற்று, வே
முகப்பொருத்தம் - முகராசி
முகப்போதரவு - இச்சகம், முகப்பொலிவு
முஹமது - மக்காதிபர்
முகமண்டலம் - முகவட்டம்
முகமலர்ச்சி - சந்தோஷம்
முகமலர்தல் - முகந்தழைத்தல்
முகமறிதல் - முகப்பழக்கமாதல் [த்தி
முகமறியாமை - அன்னியம், தூரம், பிற
முகமறுத்தல் - கண்டித்தல், முகத்தாட்சணையின்மை
முகமன் - உபசாரம், முகஸ்துதி
முகமன்சொல், முகமன்வார்த்தை - உபசாரப்பேச்சு
முகமாயம் - முகமயக்கு
முகமாட்டம் - பாரபட்சம், முகமன்
முகமாற்று - ஓர் மயக்குவித்தை
முகமுகமாய் - முகத்திற்குமுன்னாய்
முகமுகெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
முகமுறிதல் - வெறுத்தல்
முகமுறித்தல் - கோபமூட்டுதல், வெறுப்பித்தல்
முகமுறிவு - வெறுப்பு
முகமுன்னிலை - முகதா
முகமூடி - பிறக்கையில் முகத்தை மூடியிருக்கும் பை
முகமூடிவத்திரம் - முக்காட்டங்கி
முகமொட்டுதல் - முகங்கொடுத்தல்
முகம் - இடம், சந்தி, தொனி, பட்சிச்சொண்டு, பருவின்முகப்பு, புறம், முகப்பு, முந்தல், வதனம், வாய், வாயில், வேதம், அந்தரக்கொட்டு, இரண்டாமிடம், பக்குவம், ஆரம்பம், உபாயம்
முகம்பார்த்தல் - கணித்தல், முகமன் செய்தல்
முகம்வாடல் - முகங்குருவுதல், முகங்கோணல்
முகர - மோக்க
முகரதம் - புணர்ச்சிவகையி லொன்று
முகரம் - காகம், சங்கு, கடுஞ்சொல்,
முகரன் - பயனிலசொல்வோன் [ஒலி
முகராசி - முகவிணக்கம்
முகரி-முகனை, மூக்கினடி, மூரி, தாழை, அரும்பு, மூகை, மல்லிகைப்பூ
முகரிகுளிர்த்தல் - அள்ளுகொள்ளை
முகரிமை - திவ்வியஞானம், பேரறிவு
முகரியோலை - முடக்கோலை
முகருதல் - முகத்தல்
முகரூபம், முகரூபு - முகலட்சணம்
முகரெனல் - அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு
முகரை - மூக்கினடி
முகரோமம் - தாடி, மீசை
முகலதேசம் - ஓர்தேயம்
முகலாங்கலம் - பன்றி
முகவங்கு-முகத்திற்படருங் கருந்தேமல்
முகவசிகரம் - பட்சமான பார்வை
முகவசியம், முகவசீகரம் - ஓர் வித்தை, முகஞ்செல்லுதல்
முகவணை - முகவுரை
முகவணைக்கல் -உத்திரப்படிக்கல்
முகவல்லபம் - மாதுளை
முகவாசம் - முகப்பழக்கம், தாம்பூல திரவியம், வெற்றிலை, வாசனைப்பொடி
முகவாசல் - தலைவாசல்
முகவாசை - முகப்பிரியம்
முகவாடல், முகவாட்டம் - முகஆட்டம், முகக்கோட்டம்
முகவாதம் - ஓர் நோய்
முகவிச்சகம் - முகமன்
முகவிச்சை - முகமன்
முகவிலாசம் - முகச்சிறப்பு [தல்
முகவுண்ணிபிடுங்குதல் - முகமன் காட்டு
முகவுரை - பாயிரம், மேல்வாசகம்
முகவெட்டு - முகத்தினழகு
முகவெள்ளைப்பருந்து - ஓர் பருந்து
முகவேலை - முகப்பணி
முகவை - அகப்பை, இராமநாதபுரம், கண்கயில், பொலிப்பாட்டு
முகவைப்பாட்டு - பொலிபாடும்பாட்டு
முகனை - முதலீடு, முதல், முதன்மை, மு
முகனைக்காரன் - முதலாளி [னை
முகனைமுடிவு - ஆதியந்தம், மூலாக்கிரம்
முகன் - முகம்
முகாக்கினி - ஓமாக்கினி, ஓர்பைசாசம், கட்டையில்வைத்த பிரேதத்திற்கு வாயிலிடு நெருப்பு, காட்டாக்கினி
முகாந்தரம், முகாந்திரம் - ஏது, நியாயம்
முகாமயம் - முகரோகம்
முகாமுகம் - சமுகம்

முகாமை - முதன்மை
முகாரி - ஓ ரிராகம், முதன்மைக்காரன்
முகிதல் - முற்றுதல்
முகித்தல் - முற்றச்செய்தல்
முகிய - முடிய
முகிரம் - அன்பு, காமம்
முகிரன் - காமன், மூடன்
முகிலூர்தி - தேவேந்திரன்
முகில் - மேகம்
முகில்வண்ணன் - திருமால்
முகிவு - அந்தம், கடை
முகிவுகாலம்-கடைசிகாலம், மரணகாலம்
முகிழம் - மலரும் பருவத்தரும்பு
முகிழி - முகிழ்
முகிழிதம் - அரும்பு
முகிழ் - அரும்பு, காம்படி, முகிழென்னேவல், விரியாத்தளிர்
முகிழ்க்க - குவிய
முகிழ்த்தல் - அரும்புதல், குவிதல்
முகிழ்ப்பு - குவிவு
முகிழ்ப்புறம் - முகிழ்வளம்
முகிற்குன்றம் - மேக மூடியமலை, வக்கிராந்த பாஷாணம்
முகினி - புளியமரம்
முகு - இட்டம்
முகுடம் - முடி
முகுந்தநிதி-குபேரனவநிதிகளி லொன்று
முகுந்தம் - இரசம், ஓரிரத்தினம், குபேரனவநிதிகளி லொன்று
முகுந்தன் - விட்டுணு
முகுரம்-ஓர் மல்லிகை, கண்ணடி, தண்டசக்கிரத்தின் பிடி, தளிர், பளிங்கு
முகுர்த்தபலன் - முகுர்த்த நயம்
முகுர்த்தமெடுத்தல் - முகுர்த்தங் குறித்தல்
முகுர்த்தம் - முகூர்த்தம்
முகுர்த்தவிசேஷம் - முகுர்த்த பலன்
முகுலம் - ஆத்துமா, சரீரம், மலரிதழ்
முகுளம் - தாமரை வளையம், முகிழ்க்குந்தன்மை, மொட்டு
முகுள் - மலரும்பருவத் தரும்பு
முகூர்த்தம்-இரண்டு நாழிகை கொண்ட நேரம், சுபவேளை
முகூலம் - தந்திரம்
முகேரன் - மூடன்
முகை - கூட்டம், மலரும்பருவத்தரும்பு, மிடா, முகையென்னேவல்
முகைத்தல் - அரும்புதல்
முகையலூர்ச்சிறுகருந்தும்பியார் - திருவள்ளுவ மாலை பாடிய கடைச்சங்கப் புலவரி லொருவர்
முகோல்லாசம் - முகமலர்ச்சி
முக்கடுகம், முக்கடுகு - திரிகடுகம்
முக்கட்பிரான், முக்கட்பெருமான் - சிவன்
முக்கணவன் - ஓர் கொடி
முக்கண் - மூன்றுவிரலி னகக்கண்
முக்கண்டகி - நெரிஞ்சில்
முக்கண்ணன் - சிவன், விநாயகன், வீரபத்திரன்
முக்கண்ணி - காளி, தேங்காய், பார்வதி
முக்கம் - பேராலவட்டம், முக்காரம்
முக்கம்பி - மூன்றுகம்பிக்குறி
முக்கரணம் - மனம், வாக்கு, காயம்
முக்கல்-உண்டல், பேசலானெழுமொலி, முக்குதல்
முக்கவீனம் - மக்கனம்
முக்கறட்டை - மூக்கிரட்டை
முக்கனி-முப்பழம் அது கதலி, பலா, மா இவற்றின் கனி
முக்காடு - முட்டாக்கு
முக்காட்டங்கி - முக்காடு
முக்காணி - சிற்றிலக்கத் தொன்று
முக்காணியர் - பிராமணரி லோர்வகை
முக்காரம் - எருது போர்வளைக்குங் குறி, தாழ்ப்பாள்
முக்காரி - கலம் என்னும் ஓரளவை
முக்காலமறிந்தவன் - கடவுள்
முக்காலம் - திரிகாலம் அஃது இறப்பு எதிர் நிகழ்வு
முக்காலி-அக்கினி, கலம் வைக்கும் மரத்தட்டு
முக்கால் - மூன்றுகால், மூன்றுமுறை
முக்காவேளை - முட்காவேளை
முக்காழி-மூன்று கொட்டையுள்ளது
முக்காணேக்கு - கிரகநோக்கி லொன்று
முக்கான் - துட்டன்
முக்கியம் - பிரதானம், மேன்மை
முக்கியர் - ஓர் சாதியார்
முக்கியன் - முதன்மையானவன்
முக்கு - பிரயாசம், முடுக்கு
முக்குகர் - முக்குயர்
முக்குடுமி - சூலம்
முக்குடை - சந்திரவட்டம் சகல பாசனம் நித்தியவிநோதம் அவை நிரையே முத்துக்குடை, பொற்குடை, மணிக்குடை

முக்குடைச்செல்வன் - அருகன்
முக்குணம் - மூன்றுகுணம் அவை இராசதம், சாத்துவிகம், தாமதம், பூராடம்
முக்குதல்-முட்டுப்பட்டனுங்குதல், விழுங்கல், உண்ணல்
முக்குருந்து - காட்டெலுமிச்சை
முக்குலம் - மூன்றுகுலம் அவை அக்கினி வமிசம் சந்திர வமிசம் சூரிய வமிசம்
முக்குலச்சு - முக்கால்
முக்குவர் - ஓர்வகைச்சாதியர்
முக்குளம் - கங்கை, சரஸ்வதி, யமுனை யென்னும் நதிகளைப் பொருந்தி யிருக்குமோர் கிராமம், பூராடம்
முக்குளி - கோழிமுளையான்
முக்குளிக்க - நீரில்மூழ்க
முக்குளித்தல் - அமிழ்ந்துதல்
முக்குளிப்பான் - ஓர் நோய், ஓர் பட்சி
முக்குற்றங்கடிந்தோன்-கடவுள், புத்தன்
முக்குற்றம்-மூன்றுகுற்றம் அவை காமம் வெகுளி மயக்கம்
முக்கூடல் - ஓர் மலை
முக்கூடற்பள்ளு - ஓர் பிரபந்தம்
முக்கூட்டு - அடுப்பு, பரணி
முக்கூட்டெண்ணெய் - ஓர் மருந்தெண்ணெய்
முக்கோணசாத்திரம் - அளவறியுஞ்சாத்திரத் தொன்று
முக்கோணம்-மூன்றுமூலை, மூன்று மூலை வடிவம்
முக்கோல் - திரிதண்டு, திருவோணம்
முக்கோற்பகவர்-திரிதண்ட சந்நியாசிகள்
முக்தாபலம் - கர்ப்பூரம் முத்து
முங்குதல் - முழுகல், உண்ணல்
முத்தகஞ்சுகம் - தோலுரித்த பாம்பு
முத்தசட்சு - சிங்கம்
முத்தம் - பயறு
முத்தாகலாபம் - முத்துமாலை
முத்தாகாரம் - முத்துச்சிப்பி
முசகம் - எலி
முசங்கி - ஓர்வகைக்கொவ்வை
முசரு - தயிர்
முசருகம் - பவழம்
முசர் - தயிர்
முசலம் - இருப்புலக்கை, உலக்கை, தண்டம்
முசலி-உடம்பு, ஓணான், ஒந்தி, சந்திரன், தாழை, நிலைப்பனை, பலபத்திரன், பல்லி, முதலை, மெருகன் கிழங்கு
முசலிகாசனம் } இருகாலு மிருகையுஞ்
முசலிகாதனம் } சம்மணமாக மடக்கி மார்பு நிலத்திலே தோயக்கிடப்பது
முசலிகை - உடும்பு
முசலை - முயலை
முசல் - முயல்
முசல்வலி - ஓர் வலிப்பு
முசற்காது - ஓர் பூண்டு
முசற்கொம்மட்டி - ஓர் கொம்மட்டி
முசிகுதல் - முசித்தல்
முசிகுந்தம் - குபேரன்வில், சூரியன்கைச் சங்கு
முசிகுந்தன் - பிரமன்
முசித்தல் - இளைத்தல், மெலிதல்
முசிப்பாறல் } இளைப்பாறுதல்
முசிப்பாறுதல் }
முசிப்பாற்றல் - இளைப்பாற்றல்
முசிப்பாற்றி - இளைப்பாற்றி
முசிப்பு - இடை, மெலிவு, வெளிப்பு
முசிரம் - வள்ளற்றன்மை
முசிரன் - கொடையாளி
முசிலாப்பு - புடவையைச் சுருக்கிக்கட்டு
முசிறு - முயிறு, முன்கோபி
முசு - ஓர் சாதிக்குரங்கு
முசுகுந்தன் - அறுவகைச் சக்கிரவர்த்திகளி லொருவன்
முசுக்கட்டைச்செடி - கம்பளிக் கொண்டான்
முசுக்கட்டைப்பூச்சி - கம்பளிப்பூச்சி
முசுக்கை - முசுமுசுக்கை
முசுடர் - கீழ்மக்கள்
முசுடி - நொடி
முசுடு - பொல்லாங்கு, முயிறு
முசுட்டை - ஓர் கொடி
முசுட்டைப்பெண் - ஓர் புழு
முசுண்டம் - ஓர் ஆயுதம்
முசுண்டர் - கீழ்மக்கள்
முசுண்டி - ஓர் வாச்சியம், படைக்கலம், மட்டிப்படை
முசுப்பதி - பாசறை
முசுப்பு - எருத்திமேரி
முசுமுசுக்கை - ஓர் கொடி
முசுமுசுத்தல் - குறட்டைவிடல், நீர் முதலிய கொதித்தற் குறிப்பு
முசுமுசெனல் - தினவுக்குறிப்பு
முசும்புதல்-மிணுமிணுத்தல், முறுமுறுத்தல்
முசுருமுட்டை-ஒருவகை எரும்பின் முட்டை
முசுவல் - முசுட்டை
முசுறு - முசிறு

முசுறுப்புல் - அளத்துப்புல்
முச்சகம் - திரிலோகம், மூன்றுலோகம்
முச்சங்கம் - முதலிடை கடையாய் மதுரையில் வழங்கிய சங்கம்
முச்சட்டை - அழகு
முச்சதுரம் - முக்கோணம்
முச்சத்தி-இச்சாஞானக் கிரியாசத்திகள் அவை சிருட்டி திதி சங்காரம்
முச்சந்தி-திரிகாலசந்தி அது காலை உச்சி மாலை மூன்றொன்றாய்ப் பொருந்துமிடம், முத்தெருக் கூடுமிடம்
முச்சி - உச்சி, உச்சிக்கொண்டை, சிறுசுளகு, மயிர்முடி
முச்சியர் - உறைகாரர், மரவினையாளர், வன்னக்காரர்
முச்சிரம் - சூலம்
முச்சிலிகை - உடன்படிக்கையுறுதி
முச்சில் - சிறுமுறம்
முச்சினியக்கேடு } சோம்பு
முச்சினியம் }
முச்சீரடி - சிந்தடி
முச்சுடர் - மூன்றுசுடர் அவை அக்கினி, ஆதித்தன், சந்திரன்
முச்சுழி - ணகரம்
முச்சூடும் - முழுதும்
முச்செயல் - மூன்றுசெய்கை அது படைத்தல் காத்தல் அழித்தல்
முச்சை - மூன்றொன்றாய் முடிவது
முச்சொல்லலங்காரம் - ஓரலங்காரம் அஃது ஒருமொழி முப்பயன் விளைவிப்ப[து]
முஞல் - கொசுகு
முஞ்சகேசன் } திருமால்
முஞ்சகேசி }
முஞ்சபந்தனம் - பூணூலணிதல்
முஞ்சம் - அம்பு, பூணூற்பூண்டு
முஞ்சரம் - தாமரைக்கிழங்கு
முஞ்சல் - சாதல், முற்றல்
முஞ்சி - உபவீதத்திற்கட்டும்புல், நாணற்[புல்]
முஞ்சுதல் - முஞ்சல்
முஞ்சை - தருப்பைப்புற்கட்டு, பார்வதி
முஷிதம் - திருட்டுத்தனம்
முஷ்கரம் - முரட்டாட்டம்
முஷ்கரன் - முரண்டன்
முஷ்டம் - திருட்டுத்தனம்
முஷ்டி - ஆயுதப்பிடி, ஒருபிடி, முடக்கிய[கை]
முஷ்டிகாந்தகன் - பலதேவன்
முஷ்டிந்தயன் - பாலகன்
முஷ்டிபந்தம் - கைப்பிடி

முடக்கம் - தடை, முடங்குதல்
முடக்கல் - தடுத்தல்,முடக்குதல்
முடக்கற்றான் - ஓர் பூடு
முடக்கு - மடக்கு, முடக்கென்னேவல், விரலணியிஞென்று
முடக்குக்குடவர் - மடிப்புக்குடவர்
முடக்குச்சரக்கு - அவியற்சரக்கு, கிடையன் சரக்கு
முடக்குற்றான் - ஓர் கொடி
முடங்கல் - தாழை, நோய், மடங்கல், முள்ளி, மூங்கில், வரைந்தனுப்பு[ம்] லை, முடங்குதல்
முடங்கன்முலை - தாழைவிழுது
முடங்கி - கிடைப்பாடானவன்
முடங்கு - ஓர்நோய், முடங்கென்னேவல்
முடங்குதல் - மடங்குதல்
முடங்குளை - குதிரையின் பிடரு ரோமம், சிங்கம்
முடத்தாமங்கண்ணியார் - பத்துப் பாட்டில் பொருநராற்றுப் படையியற்றியவர்
முடத்தி - முடப்பெண், வளைவுள்ளது
முடமுடெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு
முடம் - நொண்டி அஃது உறுப்புக்குறையெட்டிஞென்று, குற்றம், வளைவு
முடலை - உண்டை, கழலை, திரட்சி, நாற்றம், பெருங்குறடு, பெருமை, முருடு, வலி, முறுக்கு
முடவன் - அருணன், சனி, நொண்டி
முடவாட்டுக்கல் - ஆட்டுக்கல்
முடவு - முடத்தன்மை
முடவுதல் - நொண்டுதல்
முடி - ஐம்பாலிஞென்று அஃது உச்சியின் முடித்தல், கிரீடம் அஃது இராசசின்னத்தொன்று, சூடுமி, தலை, துழாய், தேங்காய்முடி, நாற்று, முடிமயிர், முடியென்னேவல், மொக்கு,இலக்கின[ம்]
முடிகம் - பெருச்சாளி
முடிகளைதல் - முடிமயிர் வாங்குதல்
முடிகாணிக்கை - நேர்ந்தசடை கழித்தல்
முடிக்கோரை - ஓர் புல்
முடிசூடுதல் - முடி சூட்டுதல்
முடிசூட்டு-கிரீடதாரணை,கிரீடந்தரித்தல்
முடிசூட்டுதல் - முடிதரித்தல்
முடிச்சவிழ்க்கி - திருடன், புரட்டன்
முடிச்சு - கழுத்தின் முடிச்சு, தந்திரம், முடித்தல், முடியப்பட்டது, முட்டு
முடிச்சுமாறி - திருடன், புரட்டன்

விஞ்ஞானபாதன் - வியாசன்
விஞ்ஞானமயகோசம் - பஞ்சகோசத்தொன்று அது ஞானேந்திரியமும் புத்தியும்
விஞ்ஞானம் - விசேடமானஅறிவு, வாத்தியம், வேலை
விடகடி } விஷந்தீண்டல்
விஷகடி }
விடகாரி - காண்டாமிருகக் கொம்பு, விடவைத்தியன்
விடக்கு - ஊன்
விடங்கம் - அழகு, ஆண்மை, கொடுங்கை, சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், துகிற்கொடி, புழுக்கூடு, புறவுகட்குத் தூண் கண் மேற் செய்த கூட்டின் வரிசை, முகடு, வீதிக் கொடி
விடங்கர் - சிறுவழி, தியாகராஜர்
விடங்கன் - சுயம்பு மூர்த்தி
விடங்கு - அழகு
விடங்கொல்லி } ஓர் பூண்டு
விஷங்கொல்லி }
விடசிருங்கம் } ஓர் வண்டு
விடசூகம் }
விடசூசகம் - சகோரப்புள்
விடசெந்து - விஷப் பிராணி
விடதந்தகம் - பாம்பு
விடதம் - துருசி, முகில்
விடதரம் - பாம்பு, மேகம்
விடதரன் - சிவன்
விடதாரி } மருத்துவன், வைத்தியன்
விஷதாரி }
விடதாளம் - நவதாளத் தொன்று
விடத்தலை }
விடத்தேரை } ஓர் மரம்
விடத்தேர் }
விடத்துக்காசன் - கெருட பச்சை
விடநீர் } சரீரத்துறுமோர் தோஷ நீர்
விஷநீர் }
விடந்தீஞ்சான் - கொல்லைப்பல்லி
விடந்தை - ஓரூர்
விடபகதி - துரககதியைந்தி னொன்று
விடபட்சணம் - நஞ்சு புசித்தல்
விடபதுவசன் - சிவன்
விடபபதி - சிவன்
விடபம் - அலர்வு, இடபவிராசி, எருது, சிவனூர்தியுங் கொடியும், சிறு தூறு, தளிர், மரக்கொம்பு, விசாலம், தூண்
விடபாரி - கிருட்டினன்

விடபி - ஓர் மரம், மரப்பொது, ஆலமரம்
விடப்பு - கமர்
விஷமசாகசம் - ஏக்கம்
விஷமந்திரன் - குறவன்
விடமம் } சமமின்மை, தொந்தரவு, வருத்தம்
விஷமம் }
விஷமவிபாகம் - சரியற்ற பங்கு
விஷமாசனம் - அசீரண போசனம்
விஷமாட்சன் - சிவன்
விஷமாயுதன் - காமன்
விஷமி - வன்மி
விஷமுட்டி - காஞ்சிர மரம்
விடமூங்கில் - ஓர் மரம்
விடமரக்கனி - எட்டிப் பழம்
விடம் - அதிவிடையம், எத்து, காய்ச்சுப்பு, தாமரை நூல், தேள், நஞ்சு நீர், பரஸ்திரீ கமனம், பாஷாணம், மலை
விஷம் - நஞ்சு, நீர், பாஷாணம்
விடம்பம் - வேடம் பூணல்
விடம்பனம் - உபத்திரவம்
விடம்பு - கமர்
விடயக்காட்சி - பஞ்சபொறிகளினு லறிதல்
விடயஞானம் - உலக ஞானம்
விடயபஞ்சகம் - கண்டு கேட்டுண் டுயிர்த்துற்றறிதல்
விடயபருத்தியாகம் - துறத்தல், நீங்கல்
விடயம் } அடைக்கலம், அறியப்படத்தக்கது, இருத்தல், உரியது, உலகப் பொருள், காணப்பட்டது, காரணம், சுக்கிலம், தேயம், நாயகன், பிரயோசனம்
விஷயம் }
விடயவாசனை - விஷயப் பற்று
விடயாயி - அரசன், காமன், சிற்றின்பம், பதார்த்த மாத்திர முண்டென்று சொல்பவன், பொறி
விடயி - பொருள், ஐம்பொறி, அரசன்
விடயித்தல் - விடயத்தைப் பற்றுதல்
விடரகம் - குகை
விடரவன் - பூனை
விடராசன் - கெருட பச்சை
விடரு - அதிவிடயம்
விடருகம் - விடரவன்
விடரோகம் - ஓர் நோய்
விடர் } கமர், காடு, தூர்த்தர், மலைப்பிளப்பு, நிலப்பிளப்பு, குகை
விடர்வு }
விடலம் - உள்ளி, குதிரை, நஞ்சு
விடலி - கீழ்மக்கள், பூப்பதாரி, மலடி, தூர்த்தமங்கை

விடலை - ஆண்மகன், இளவாண் பொது, திண்ணியன், பாலைநிலத் தலைவன், மணவாளன், முப்பது வயதிற்குட் பட்டவன், காளை
விடல் - குற்றம், சாதல், விடுதல்
விடவம், விஷமம் - அயனவரி
விஷவாதகரப்பன் - ஓர் கரப்பன்
விடவி - மரம்
விடவிடெனல் - நடுக்கக் குறிப்பு
விடவு - கமர் [கன்
விடன் - தூர்த்தன், விடம், சோர நாய
விடாச்சேரி - நீங்கா வரவு
விடாணம், விஷாணம் - விலங்கின் கொம்பு
விடாணி - எருது, கொம்புள்ளது, யானை
விடாதம் - இக்கட்டு, மனத்தளர்ச்சி, விஷாதம்
விடாதவாகுபெயர் - கருவியின் பெயரே கருத்தாவைக் காட்டி நிற்பது [உ-ம்] குதிரையா லவ்வூர் கொள்ளை யிடப் பட்டது
விடாதவாக்கச்சொல் - தன் செம்பொருளை விடாது நின்றும் பிறபொருளையுந் தழுவி நிற்கு மாக்கச் சொல்
விடாந்தகன் - சிவன்
விடாப்பிடி - ஒருகண்டசீர், பிடித்த பிடி
விடாப்பூட்டு - ஓய்வில்லாமை
விடாமழை, விடாமாரி - ஓயா மழை, தின மழை
விடாயுதம் - பாம்பு
விடாய் - ஆசை, சோர்வு, தாகம்
விடாய்த்தல் - தாக மடைதல்
விடாய்ப்பு - தாகம்
விடாரகம், விடாரகன் - பூனை
விடாரம் - பாம்பு
விடாலகம் - பூனை, பொன்னரிதாரம்
விடாலம் - கண்மணி, பூனை
விடானனம் - பாம்பு
விஷானி - சதுரக்கள்ளி
விடி - திரைச்சீலை, விடி யென்னேவல்
விடிதல் - அனுகூலமாதல், உதயமாதல்
விடியல்-வைகறை, விடியற்காலம், வெளி
விடியற்றரம் - விடியற் காலம்
விடிவ - அனுகூலப்பட்டது
விடிவெள்ளி - வைகறை வெள்ளி
வீடு - நீர் யானை, யானை, மத்தகத்தி னடு
விடுகந்தை - கொடி
விடுகாசு - பொடிக் காசு
விடுகாலி - கட்டா மாடு, தூர்த்தன்
விடுகை - விடுதல்
விடுசரம் - ஊர்ப்பன்றி
விடுசி - அம்பு
விடுதலை - இட்டம், தன்னிட்டம், நீக்குதல், முடிவு, விடுந்தலைப்பு
விடுதல் - அனுப்புதல், எரிதல், ஒழிதல், நீக்கல், விள்ளுதல், பிரிதல், தாங்குதல்
விடுதி - ஆறி யிருத்தல், உத்தரவு, தங்குமிடம்
விடுது - விழுது
விடுதுறை - வாசித்து நிறுத்து மிடம்
விடுத்தம் - தடவை
விடுத்தல் - அனுப்பல், தங்கல், தள்ளுதல், நடத்தல், பிரிதல், விடைகூறல்
விடுந்தலைப்பு - கொய்யகம், முன்றானை
விடுபடை - அஸ்த்ர முதலியன
விடுபதி - மருமகன்
விடுப்பு - ஆராயுங்குணம், பூராயம், வேடிக்கை
விஷுவம், விடுவம் - விடவம்
விடுவாய்ச்செய்தல் - அறுத்தல்
விடுவித்தல் - விடுதலை செய்யல், விரித்துரைத்தல்
விடூசி - அம்பு
விஷேபம் - திரிபு
விடேலெனல் - அனுகரண வோசை
விடை - இடபம், இடபவிராசி, உத்தரம் இஃது உரையிலக்கண மைந்தி னொன்று, எதிர்மொழி, எருது, குதிரை, கோழிப்பேடு, வருத்தம், வலிமை, விடுதல், மிகுதி, கடா
விடைகாலெறிதல் - இளங்கன்று துள்ளிக்காலை யெறிதல், கால்வீசி யுதறுதல்
விடைகொடுத்தல் - உத்தரவு கொடுத்தல்
விடைகொள்ளல் - உத்தரவு பெறுதல்
விடைக்கொடி - இடபக் கொடி
விடைக்கோழி - விடை துரத்தப் பட்ட கோழிக் குஞ்சு
விடைக்கந்தம் - செம்மணத் தக்காளி
விடைதல்-அபராதம் சொல்லுதல், கோபம், சினம், பிரிதல், பிளத்தல்
விடைதுரத்தல் - குஞ்சுகளை விடுதல்

விடைத்தல் - சினக்குறிப்பு, பெருங்கோபம், வேறு படுத்தல், சீறுதல், தாக்கல்
விடைபெறல் - போக வுத்திரவு பெறல்
விடைப்பு - அபராதம், வேறுபடுத்துகை
விடையூர்தி } சிவ பெருமான்
விடையேறி }
விடையோன் - சிவன்
விஷ்கம்பம் - நித்திய யோகத் தொன்று
விட்கம்பம்-கதவின்றாழ், செயல், தடை, தூண், நித்திய யோகத் தொன்று, விசாலித்தல், விட்டம், வித்தாரம்
விட்சவம் - இருமல்
விட்சி - ஓர் மரம்
விட்சேபசத்தி - ஓர் சத்தி அது சுருங்கி விரியத்தக்கது [றல்
விட்சேபணம் - அனுப்பல், எறிதல், சித
விட்சேபம் - அனுப்பல், உமிழ்தல், எறிதல், ஒன்றைச் சொல்லத் தொடங்கி வேறு ஞாபகத்தாற் சொல்லாமல் விட்டுவிடுதல், கலக்கம், கூத்திஞேர் விகற்பம், பதனம், பயம், பொய்யென்று ரூபித்தல், வானுட்சரேகை
விட்டம் - உத்திரம், குறுக்களவுவரி
விட்டரம் - ஆசனம், ஓர் பிடி, தருப்பை, ஓர் மரம், கொள்கலம், தவத்தோர் பீடம், படுக்கை
விட்டரி - அகத்தை
விட்டல் - விடுதல்
விட்டவர் - துறவோர், பகைவர்
விட்டவாகுபெயர் - மொழிக் கியன்ற பொருளைவிட்டு குறிக்கப்படு பொருட்கிடனுய்ப் பிறிதொன்றை விளக்குவது [உ-ம்] கங்கைக்கண் இடைச்சேரி
விட்டவாக்கச்சொல் - சொற்பொருளை விட்டு வேறென்றிற்கு வழங்குஞ் சொல் [உ-ம்] அவ்வூர் வந்தது
விட்டாடி - தனியன்
விட்டார்த்தம் - பாதிவிட்டம்
விட்டாற்றி - ஆறுதல்
விட்டி - கோழி, கோழிக்கரணம்
விட்டிசை - பிரிந்திசை
விட்டிசைத்தல் - பிரிந்திசைத்தல்
விட்டித்தல் } மலங்கழித்தல்
விஷ்டித்தல் }
விட்டில் - ஓர் பறவை, ஓர் வண்டு, நாட்டுக்குற்ற மேழினென்று, பிராய்மரம், வெட்டுக்கிளி

விட்டுணு } திருமால், வியாபகன்
விஷ்ணு }
விட்டுணுகரந்தை - ஓர் பூடு
விட்டுணுகாந்தி - ஓர் தருமநூல், ஓர் பூடு
விட்டுணுகிராந்தி - மூங்கில்
விட்டுணுபதம் - பரமபதம், பாற்கடல், வைகுந்தம்
விட்டுணுபுராணம் - ஓர் வைணவ புராண [ம்
விட்டுணுப்ரியம் - துளசி
விட்டுணுரதம் - கருடன்
விட்டுணுலோகம் - வைகுண்டம்
விட்டுணுவல்லபை - இலக்குமி
விட்டேறரணம் } வேல்
விட்டேறு }
விட்டை } இலத்தி, கட்டி, திரளை
விஷ்டை }
விட்டோசை - விட்டிசை
விட்பாரம் - விற்ருெனி
விஷ்வம் - விடவம்
விண் - ஆகாயம், இளமை, கடுதாசிப் படத்திலோர் கருவி, தேவலோகம், மேகம்
விணிகை - மூலைக்கச்சு
விண்டபூரகம் - மாதளை
வீண்டலம் - ஆகாயம்
விண்டல் - அலர்தல், மூங்கில், வெடித்தல், வெளி வருதல்
விண்டாண்டு - ஊஞ்சல்
விண்டு-அட்டாதச தருமநூலி னென்று, காற்று, தகரை, திருமால், மலை, மூங்கில், மேகம், விஷ்ணுகரந்தி
விண்டுதம் - தகரை
விண்டுநதி - ஆகாயகங்கை
விண்டுபதம் - ஆகாயம்
விண்ணகம் - தேவுலகம்
விண்ணபத்திரம்-விண்ணப்பப் பத்திரம்
விண்ணப்பபத்திரம் - மன்ருட்டுப் பத்திரம்
விண்ணப்பம் - மன்ருட்டம், அறிவித்தல்
விண்ணல் - காவட்டம்புல்
விண்ணவன் - அருகன், தேவன்
விண்ணுங்கு - ஓர் மரம்
விண்ணு - கடுகுரோகிணி
விண்ணுணம் - நாகரிகம், மாசாலர், விஞ்ஞானம், வெட்கம்
விண்ணுகம் - கறிமுள்ளி
விண்ணுலகம் - தேவலோகம்
விண்ணுளார் - விண்ணோர், ஆகாயவாசி
விண்ணேறு - இடியேறு [கள்

விண்ணோர் - தேவர்
விண்பல் - மூங்கில்
விண்மணி - சூரியன்
விண்மீன் - நக்ஷத்திரம்
விண்முழுதாளி - இந்திரன்
விண்விண்ணெனல் - இசைக்குறிப்பீ ரடுக்கு மொழி
விண்வீழுங்கொள்ளி - உற்கை
விதண்டம் - ஓர் பூட்டு, யானை
விதண்டாவாதம்-வாதவகையி ெனன்று, விதண்டை
விதண்டை - அகப்பை, தன்மதநிறுத்திப் பேசல், திருத்தம்
விததம் - விசாலம், வீணைமுதலான வாத்தியம், பொய்
விததன் - தவத்தி, பண்டிதன்
விததி - சமுஹம், விஸ்தாரம்
விதத்தல் - மிகுந்துரைத்தல்
விதத்தியம் - அசத்தியம்
விதந்து - அமங்கலை, மாங்கல்ய நூலிழந்தவள்
விதப்பு - அதிசயம், சீக்கிரம், நடுக்கம், மதிலுறுப்பு, மிகுதி, விவரம்
விதப்புக்கிளவி - விதப்புமொழி, மிகைமொழி
விதப்புமொழி - சிறப்பித்துச் சொல்லுமொழி
விதம் - அறியப்படுதல், இனம், சம்பளம், சாயல், சூத்திரம், செயல், துளை, மாதிரி, விலங்குணவு, பிரகாரம்
விதம்பம் - கற்பரி பாஷாணம்
விதரணம் - அழகு, ஈகை, சுறுக்கு, போதல், விடுதல், விவேகம், கொடை
விதரணை - விவேகம்
விதரம் - பிளப்பு
விதரி - அறியப்படுதல்
விதரிதம் - உருக்கப்பட்டவை
விதர்க்கணம்-ஆலோசனை, சம்பாஷணை
விதர்க்கம் - எண்ணம், ஐயம், நியாயம், பஞ்சமயூகோசத்தொன்று, பெருக்கம், ஆராய்வு
விதர்த்தி - சாலை, பந்தர், பீடப்பலகை
விதர்ப்பஜை - அகத்தியன் மனைவி, தமயந்தி, ருக்மிணி
விதர்ப்பம் - ஓர் தேயம்
விதர்ப்பு - அச்சம், நெருக்கம், போர், வெற்றி
விதலம் - கீழேழுலகி ெனான்று அது இருள்மயமானது, பயற்றம் பருப்பு, பெட்டி
விதலை - நடுக்கம்
விதவளம் - அசைவு
விதவாகாமி - கைம்பெண்ணை விரும்புவோன்
விதவாவேதனம் - கைம்பெண்ணை விவாகம் பண்ணல்
விதவை-கைம்பெண், பாற்சோறு, குழம்பு
விதறம் - விதர்ப்பம்
விதனம் - மனத்துயர், வேதனை, துயர்
விதனித்தல் - துயருறல்
விதன் - பண்டிதன்
விதாகம் - உறைப்பு, வெப்பம்
விதாதா - அருகன், பிரமன்
விதாதிரி - திப்பிலி
விதாதிரு - காமன், பிரமன், விதி
விதாயம் - போடல்
விதாரகம் - கிணறு
விதாரணம் - கிழித்தல், கொல்லல், பிளத்தல், யுத்தம்
விதாரம் - கிழித்தல், பிளத்தல், யுத்தம், வெள்ள மெடுத்தல்
விதாரி - புன்முருக்கு
விதாரு - பல்லி
விதாவிதம் - பலவிதம்
விதானகம் - குவியல், மேற்கட்டி, வருத்தம்
விதானகன் - பண்டிதன்
விதானம் - இளைப்பாற்றி, உபாயம், ஒழுங்கு, ஓர் பண், கற்பனை, குவியல், கூட்டம், சாரமின்மை, செயல், செல்வம், பாக்கியம், மந்தம், மாதிரி, முறைமை, மேற்கட்டி, யாகம், யானை யுணவு, வணக்கம், வன்மம், விகுதி, விடுதி, விதம், விரிவு, விதி
விதானிகரணம் - மூடுதல்
விதி - அறிவு, உண்மை, ஊழ், கட்டளை, காலம், குணம், குதிரை முதலியவற்றி னுணவு, சூத்திரம், செய்தொழில், செல்வம், நியமிப்பு, பிரமன், மெய், விட்டுணு, விதம், விதியென்னேவல், வேதாகமமுறை, தன்மை, கிரமம்
விதிக்கு - கோணத்திசை
விதிசாரதி - சிவன்
விதிச்சூத்திரம் - முன்னில்லதனை விதித்தல்
விதிதம் - சம்மதித்தல், தெரியப்பட்டது, வெளிப்படை

விதிதன் - கவிஞன், புத்தன், யோகி
விதிதரிசனி - விதிதேசகன்
விதிதேசகன் - யாகபாதுகன்
விதித்தல் - உண்டாக்கல், செய்தல், சொல்லல், நியமித்தல்
விதித்தோன் - கடவுள், பிரமன்
விதிபாதம் - வியதிபாதம்
விதிபாளி - ஓமம்
விதிப்பாள் - மகள்
விதிப்பிரசங்கம் } சூத்திர முறையைச்
விதிப்பிரயோகம் } சாதித்தல்
விதிப்பு - இலபிப்பு, நியமிப்பு
விதிமுறை - நெறிப்பிரகாரம்
விதியர்-கணக்கர், தந்திரிகள், மந்திரிகள்
விதியுளி - ஓமம், தூதர், விவாகம், யாகம், முறை
விதியை - இரண்டாந்திதி
விதியோகம் - விதிப்பிரகாரஞ் சம்பவித்தல்
விதிர்க்குவிதிர்க்கெனல் - படபடத்தல்
விதிர்த்தல்-அசைத்தல், அஞ்சுதல், நடுங்கல், சிதறுதல்
விதிர்ப்பு - அச்சம், நடுக்கம்
விதிர்விதிர்த்தல்-சுழலல், நடுநடுங்குதல்
விதிவத்து - முறைப்படியானது
விதிவினை - உடன்பாட்டான் முடியும் வினை
விது - கருப்பூரம், சந்திரன், நிவிர்த்திக் காயபலி, பிரமா, விட்டுணு குபேரன், வாயு
விதுகம் - விலகல்
விதுடன் - கற்றவன்
விதுடி } அறிவாளி, கற்றவள்
விதுஷி }
விதுட்சயம் - தேய்பிறை
விதுதமுகம் - வேண்டாமைக்குத் தலையசைத்தல்
விதுதம் - தள்ளப்பட்டது
விதுநம் - சலநம்
விதுந்துதம் - இராகு
விதுப்ஞ்சரம் - வாள்
விதுப்பிரியை - உரோகணி
விதுப்பு - ஆசை, காமித்தல், சீக்கிரம், நடுக்கம், விரைவு
விதும்பல் - ஆசைப்படல், மனமசைதல், நடுங்குதல்
விதுரஜம் - வைடூரியம்
விதுரம் - கலக்கம், பிரிவு
விதுரன் - அறிஞன், கள்வன், குருகுலவரசரு ளொருவன், திண்ணியன், தூர்த்தன், வாழ்க்கைத் துணையிழந்தோன்
விதுலன் - ஒப்பிலி
விதுவனம் - அச்சம், உதறுதல்
விதுவிதுப்பு - நடுக்கம்
விதுன்னகம் - துத்தம்
விதூடகன் } கோமாளி
விதூஷகன் }
விதூடணம் - பெருந்தூஷணம்
விதூதம் - நடுக்கம், விடுதல்
விதூநிதம் - நடுக்கம்
விதூரஜம் - வைடூர்யம்
விதூரதன் - ஓரரசன்
விதூரம் - வெகுதூரம்
விதூனம் - கலக்கம்
விதூனனம் - உதறுதல்
விதேகமுத்தி - ஓர் முத்தி
விதேகம் - தேக விமோசனம், மிதிலை
விதேகை - மிதிலை நகரம்
விதேசம் - தூரதேசம், பிறதேசம்
விதேயன் - சொற்படி கேட்போன்
விதை - அறிவு, புத்தி, பெருமை, விதையென்னேவல், வித்து
விதைத்தல் - வித்திடுதல், பரப்புதல்
விதைப்புனம் - புதுக்கொல்லை
விதைமணி - விதைக்குந்தானியம்
விதைமுதல் - வித்துமுதல்
வித்தகம் - அதிசயம், ஞானம், நன்மை, சாதுரியம்
வித்தகர் - அறிஞர், கம்மாளர், தூதர், பெரியோர், சாதுரியர்
வித்தகன் - அறிஞன், சதுரப்பாளேளோன், தூதன், வயிரவன்
வித்தகன் - பொருள் கொடுப்போன்
வித்தம்-அறிவு, இகழ்வு, ஞானம், பாக்கியம், பொருள், பொன்
வித்தரித்தல் } பெருக்கல், விரித்துச்
விஸ்தரித்தல் } சொல்லல்
வித்தன் - உபகாரி, தவத்தி, பண்டிதன்
வித்தாரகவி - நாற்கவியி னொன்று அது மும்மணிக்கோவை, பன்மணிமாலை, மறம், கலிவெண்பா, தசாங்கம், மடலூர்தல், கிரீடை, இயல், இசை, நாடகம், பாசண்டத் துறையிவை முதலிய விரித்துப்பாடுங் கவி

வித்தாரம் } அகலம், சிற்பநூன் முப்பத்
விஸ்தாரம் } திரண்டி னொன்று, மரக்
கொம்பு, மிகுதி, விட்டம், வித்தார
கவி, விரித்தல், விற்பன்னம்
வித்தாரி } விற்பன்னன்
விஸ்தாரி }
வித்தி - அறிவு, ஆராய்தல், சம்பாதிப்பு
வித்தியதம் - வேதிகை
வித்தியம் - அறிவு, தான்றி
வித்தியர் - கம்மாளர்
வித்தியாகரன் - அறிஞன்
வித்தியாகலை - பஞ்சகலையி னொன்று
வித்தியாசம் - வேறுபாடு
வித்தியாதத்துவம் - தத்துவத் திரயத்
தொன்று, தொண்ணூற்றாறு தத்து
வங்களுள் இருபத்துநாலு தத்துவங்
கொண்டது
வித்தியாதரர் - கந்தருவர்
வித்தியாதானம் - படிப்பித்தல்
வித்தியாதுரம் - கல்வியாசை
வித்தியாநாராயணன் - மாதவா சாரியன்
வித்தியாபாரகன் - கற்றோன்
வித்தியாப்பியாசம் - கற்றல்
வித்தியாப்பிராத்தி - கல்விச் செல்வம்
வித்தியாரண்யசுவாமி - வேதாந்தாசிரி
யர்களி லொருவர்
வித்தியாரணியர் - மாதவாசாரியருடைய
பெயர்
வித்தியாரம் - பூராயம்
வித்தியாரம்பம்-கற்கத்தொடங்கல் இது
பிள்ளைச்சடங்குகளி னொன்று
வித்தியார்த்தி - கற்போன்
வித்தியாலயம் - கல்லூரி
வித்தியானுசேபனம்-கல்வி தேறச்செய்
தல் [தல்
வித்தியானுபாலனம்-படித்தல், படிப்பித்
வித்தியை - அறிவு, கமனகுளிகை, தார்க்
கை, வித்தை
வித்தியோதமானம் - பிரகாசம்
வித்தியோபார்சனம் - கல்வித் தேற்றம்
வித்திரகம் - வெள்ளெருக்கு
வித்திரணம் - விரிவு
வித்திரம் - துளைத்தல், பிளப்பு
வித்திரவம் - பின்னிடல்
வித்திராவணம் - உலோக முதலிய வுரு
க்குதல், துரத்தல்
வித்திருதி } அகலம், விசாலம், விட்ட
விஸ்திருதி } ரேகை

வித்து-சம்பிரதாயம், வமிசவழி, விதை,
வித்தென்னேவல், விந்து, காரணம்,
அறிஞன், அறிதல்
வித்துசம் - தாளி
வித்துதல் - விதைத்தல், பரப்புதல்
வித்துத்து - மின்னல்
வித்துரு - மின்னல்
வித்துருமம் - இளந்தளிர், பவளம்
வித்துவகற்பன் - சொற்பகவிக்காரன்
வித்துவஞ்சம் - அவமரியாதை, பகை,
வெறுப்பு
வித்துவாமிசன் } புலவன், அறிஞன்
வித்துவான் }
வித்துவேடணம் } விரோதித்தல் அஃ
வித்துவேடணை } து அட்ட கருமத்
தொன்று, கலைஞான மறுபத்துநான்
கினு மொன்று
வித்துவேடம் - விரோதம்
வித்துவேடி } பகைவன்
வித்துவேஷி }
வித்தேசன் - குபேரன்
வித்தை - கல்வி, ஞானம், தந்திரத்தொ
ழில், மாசாலம்,வித்தியாதத்துவமேழி
னொன்று, உண்மை யுணர்வு
வித்தைகாரகன் - புதன்
வித்தைஸ்தானம் - நாலாமிடம் ஒன்பதா
மிடம்
வித்யமாநம் - வர்த்தமாநம்
வித்யாதநம் - கல்விப்பொருள்
வித்யாதேவி - சரச்சுவதி
வித்யாபாரங்கதன் - கல்வி கரை கண்
டோன்
விநதம் - தொனி, வளைவு
விநதாசூனு - அருணன், கலுழன்
விநதி - மரியாதை, வணக்கம், வளைவு
விநதை - கருடன்றாய், சத்தபுரியி னொ
ன்று
விநயம் - கட்டளை, தருமம், நன்னடை,
மரியாதை, வணக்கம்
விநயனம் - கட்டளை, நன்னடை, மரியா
தை, வணக்கம்
விநாசகம் - அழிப்பு
விநாசகர் - அழிப்போர்
விநாசகன் - மூக்கறை
விநாசம் } அழிப்பு, கொலை, நாசம்,
விநாசனம் } காணப்படாமை
விநாசன் - கொலை செய்வோன்
விநாசி - அழிப்போன்

விநாடி } கால நுட்பம்
விநாடிகை }
விநாயகசட்டி - கார்த்திகையிற் கார்த்திகை கழித்த இருபத்தோரா நாள் வருஞ்சட்டி
விநாயகம் - தடை, பெருநாயகம்
விநாயகன் - அருகன், குரு, புத்தன், விக்கினேசுவரன், கருடன்
விநாழிகை - நாழிகை யறுபதிலோர் பங்கு, விநாடி
விநிகதம் - உற்பாதம்
விநிகமம் - நியாயத்தால்வந்த தீர்ப்பு
விநிச்சுவாசம் - பெருமூச்சு
விநிபாதம் - இகழ்ச்சி, இக்கட்டு,மரணம், விழுதல்
விநிமயம் - பண்டமாற்று
விநிவயம் - அடகு, மாற்றுதல்
விநியோகம் - தடை, நியமிப்பு, பிரிதல், விடுதல், செலவு செய்தல்
விநிர்ப்பயம் - அச்சமின்மை
விநீதம் - அழகு, அனுப்புதல், கற்பு, சாந்தம், தண்டிப்பு, நடத்துதல், நன்னடை, படியப்பண்ணுதல், மரியாதை
விநீதன் - தண்டிக்கப்பட்டவன், விநயமுள்ளவன்
விநீதை - கற்புடையாள்
விநீயம் - பாவம்
விநோதம் - அவா, அழகு, சந்தோஷம், தள்ளுதல், தொழில், பகை, மகத்துவம், விளையாட்டிற் பொழுதுகழித்தல்
விநோதர் - பொழுது கழிப்போர்
விந்தஸன் - சந்திரன்
விந்தம் - ஓரெண், குதிரைப்பற்பாஷாம், விந்தியமலை, மாணிக்க வகையுளான்று
விந்தரம் - கற்கடக பாஷாணம்
விந்தர் - இடையர்
விந்தாக்கினி - காமாக்கினி
விந்தாரற்கல் - ஈரற்கல்
விந்தியகூடன் - அகத்தியன்
விந்தியம் - அட்டகுல மலையிலொன்று
விந்தியவாசி } கோட்டம், துர்க்கை,
விந்தியவாசினி } வீரலக்ஷிமி
விந்தியாவலி - புத்திரன், வாணசுரன்
விந்து - குறி, தாது, நீர்த்துளி, நெற்றித்திலகம், புருவமத்தி, புள்ளி, வட்டம், சுத்தமாயை
விந்துசாலம் - யானைமுகப்பொறி
விந்துசித்திரகம் - மான்
விந்துதந்திரம் - சூதாடுகவறு, சூதாடுபடம்
விந்தை - ஆச்சரியம் ஓரகத்தி, துர்க்கை, விற்பன்னம், வீரலட்சுமி
விந்தையம் - செங்கத்தாரி
விந்நியாசம் - தாபித்தல், தொடுத்தல்
விபகதம் - காஞ்சிரை
விபகரித்தல் - வழக்குச் சொல்லல்
விபகலனம் } கழித்தல்
விபகலிதம் }
விபகாரம் - வியவகாரம்
விபக்கம் - பகை, பிரதிகூலமான பக்கம்
விபக்கன் - பகைவன்
விபங்கம் - உடைத்தல், பிரித்தல், வளைத்தல்
விபசாயம் - கிருஷி, வியவசாயம், பயிர்த்தொழில்
விபசாரம் - வியபிசாரம், வேசித்தனம்
விபசாரி - வியபிசாரி, வேசி
விபசியம் - அறிவு
விபச்சித்து - பண்டிதன்
விபஞ்சி } வீணை
விபஞ்சிகம் }
விபஞ்சிகை - பொழுது போக்கு, விளையாட்டு, வீணை
விபட்சதை - எதிரிடை யுத்தம்
விபட்சம் - பிறபட்சம், விலக்கு
விபட்சன் - எதிரி, சத்துரு
விபணம் - விலை
விபணி - கடை, கடைவீதி, வியாபாரி, வியாபாரப்பண்டம், விலைச்சரக்கு
விபண்ணகம் - பலாசு
விபதம் - கெடுவழி, கைக்காணிக்கை
விபதி - குருவி
விபதை - தரித்திரம்
விபத்தம் - காஞ்சிரை, பஞ்சம்
விபத்தன் - அபாக்கியன், கிலேச முடையோன், விகாரி, வேறுபட்டோன்
விபத்தி - அபாக்கியம், கலக்கம், குற்றம், தரித்திரம், துன்பம், பங்கு, மரணம், வேதனை, வேற்றுமை, ஆபத்து, அழிவு
விபத்து-அபாக்கியம், ஆபத்து, கலக்கம், துன்பம், அழிவு
விபந்நம் - நஷ்டம், பாம்பு
விபம்-செல்வம், மேலான தத்துவம், மேன்மை
விபரம் - விரிவு, விவரம்

விபரிணமம் - மாறுதல்
விபரித்தல் - விரித்துச் சொல்லல், விவரித்தல்
விபரியயம் - அழிவு, எதிரிடை, கோபக்குணமாறுதல்
விபரியாசம் - எதிரிடை, மாறு, விபரீதம்
விபரீததை - எதிரிடை
விபரீதம் - அதிசயம், மாறுபாடு, வேறுபாடு,பிரதிகூலம்
விபரீதவிலக்கு - ஓரலங்காரம் அதுகாரணத்திற் கியையாது விபரீதமாய்க் காரியங்கூறி விலக்கிக் காட்டல்
விபரீதவுவமை - தொன்று தொட்டு வழங்கு முவமையைப் பொருளாக்கியும் பொருளை யுவமையாக்கியு முரைப்பது [உ-ம்] கண்போற் பிறழுங்கயல்
விபலம் - காலநுட்பம், பயனினிமை
விபலாயனம் - பறத்தல்
விபலீகரணம் - தடுத்தல், பயனில் செய்கை
விபவ - இரண்டாவதாண்டு
விபவம் - சாதல், செல்வம், பொருள், மகத்துவம், வரம், வாழ்வு, மோக்ஷம்
விபனவம் - கீழ்ப்படிவு
விபன்னம் - குற்றம், மெலிவு
விபன்னன் - மெலிந்தோன்
விபாகம் - உருசி, சமைத்தல், சீரணித்தல், செய்பலம், செல்வம், தரித்திரம், தற்செயலாய் வருவது, பக்குவம், பங்கு, பழுத்தல், போகம், மாறுதல், வேறுபாடு, பிரிவு
விபாகரன் - சூரியன், தீக்கடவுள்
விபாசம் - பந்தமோசனம்
விபாசன் - ஓர்முனி, பற்றற்றவன்
விபாச்சியத்துவம் - பகுக்கத்தக்கது
விபாச்சியம் - பகுதி, பகுப்பு
விபாசை - பிரகாசம்
விபாடம் - அம்பு
விபாடிகை - ஓர் குட்டநோய்
விபாதம் - உதயகாலம்
விபாதனம் - அழித்தல்
விபாதிகை - கொடி, பித்தவெடிப்பு
விபாவசன் - விபாகரன்
விபாவசு-சந்திரன், சூரியன், தீக்கடவுள்
விபாவரி-இராத்திரி, சங்கம்வாங்கி, வேசி
விபாவனம் - ஆராய்வு, தீர்த்தல், பகுத்தறிவு, தரிசனம், பாவிக்கப்பட்டது
விபாவனை-ஆராய்வு, ஓரலங்காரம்அஃது உலகறிகாரண மில்லாதிருப்பக் காரியம் பிறத்தலைச் சொல்வது, மட்டுக்கட்டுதல்
விபாவன் - சினேகிதன்
விபாவியம் - சிந்தித்தல்
விபிண்ணகம் - பலாசு
விபினம் - காடு
விபீடணன் - இராவணற்கிளையோன்
விபீதகம் - தான்றிமரம்
விபு-ஆகாயம், ஆன்மா, எசமான், இடம், கடவுள், கருத்தா, சிவன், தலைவன், நித்தியம், நேரம், பரிபூரணம்,பிரமன், விட்டுணு, வேலைக்காரன்
விபுசத்துரு - தண்ணீர் விட்டான்
விபுணன் - சிறந்தோன், வெற்றி யுடையோன்
விபுதர்-அறிஞர், மிகக்கற்றோர், வானோர்
விபுதர்கந்தம் - நெய்ச்சட்டி
விபுதன் - சந்திரன், தேவன், பண்டிதன்
விபுதாநன் - ஆசார்யன், தேவன், பண்டிதன்
விபுதுவம் - பரிபூரணமா யிருத்தல்
விபுதை - தத்துவம்
விபுத்தன் - நன்மாணுக்கன்
விபுலம் - அகலம், இமயகிரி, பூமி, பெருமை, மேருகிரி, விரிவு
விபுலரசன் - கரும்பு
விபுலை - பூமி
விபூஷணம், விபூடணம் - அலங்காரம், ஆபரணம்
விபூடை - அலங்காரம், அழகு, பிரபை
விபூதி-அட்டைசுவரியம், உத்தமகுணம், குற்றம், கொடுமை, செல்வம், தசை, திருநீறு, பெருமை
விபூயம் - முஞ்சிப்புல்
விபேகம் - புத்தி, வல்லபம்
விபேகி - சூரியன்
விபேகம் - எதிர், கலக்குதல், பிரித்தல், வன்மம்
விபேதனம் - பிரித்தல்
விபை - அழகு, கிரணம், பிரபை
விபோதம் - புத்தி
விப்பிரகாசியம் - ஆகாயவுருவங் காண
விப்பிரகாரம்-எதிரிடை, தீங்கு,நிந்தை, பொல்லாங்கு, அபகாரம்
விப்பிரகிருதி - நிந்தை, பதில்
விப்பிரதகம் - வற்றல்
விப்பிரயம் - ஒளியின்மை
விப்பிரதிகாரம் - எதிரிடை, பதில், மாறு

விப்பிரதிசாரம் - கோபம், சீர்ப்படுதல், பகை, பொல்லாங்கு, விசனம்
விப்பிரதித்துவம் - தடை, விலக்கியது
விப்பிரமம் - அழகு, இலீலா மோசன வெப்பு, குற்றம், பிரமை, மோகப்பி ணக்கு, மோகலீலை, மயக்கம்
விப்பிரம்-அழகு, ஐயம், சந்தேகம், சீக்கி ரம், சுழலுதல், தவறு, பிழை
விப்பிரயோகம்-ஒவ்வாமை, பஞ்ச பாணு வத்தையி னொன்று அதுவெய் துயிர்த் திரங்கல், பிரிதல்
விப்பிரர் - பார்ப்பார்
விப்பிரலம்பம்-அணுப்பு, சண்டை,பிரிவு, தலைவன்றலைவி பிரிதல்
விப்பிரலாபம் - பயனற்றபேச்சு, வாக்கு வாதம்
விப்பிரவாசம் - பரதேசவாசம்
விப்பிரவாசனம் - ஊருக்குப் புறப்படுத் [தல்
விப்பிரன் - பிராமணன்
விப்பிராந்தசீலம் - குரங்கு, சூரியசந்திர வட்டம்
விப்பிராந்தி - கலக்கம், சுழலுதல், தவறு
விப்பிரியம் - மீறுதல், பிரியமின்மை
விப்பிலம் - தேசோபத்திரவம்
விப்பிலவம் - அநியாயப்போர், அநீதக் கொள்ளை, கலக்கம், சீக்கிரம், பொல் லாங்கு, வல்லமை
விப்பிலீகரணம்-தடுத்தல், பயனில் செய் [கை
விப்புருதி - ஓர் சிலந்தி
விப்புருதிநாயகம் - அழுக்கிரு
விப்ரகாரம் - பற்கடித்தல்
விப்ரப்ரியம் - முருக்கமரம்
விப்ரதியோகம் - பிரிவு
விமதன் - பகைவன்
விமதி - எண்ணப்பேதம், வெறுப்பு
விமயம் - பொருண்மாற்றல்
விமரிசம், விமரிசனம், விமரிசை, விமர்ச்சம், விமர்ச்சனம் - ஆராய்வு, கேள்வி, பாவனை, யூகம்
விமர்த்தம் - அழித்தல், தேய்த்தல்
விமர்த்தனம் - அடக்குதல், அமர்த்துதல், அரைத்தல், அழித்தல், கிரகணம், தூளாக்குதல், தேய்த்தல், வாசனை
விமர்த்தார்த்தம் - கிரகண பரிசனகாலந் தொடங்கி விமோசனம்வரைக்கும்
விமலதானம் - ஈசுவரப்ரீதியாய்ச் செய்யுந் தானம்
விமலமணி - பளிங்கு
விமலம் - அழகு, அழுக்கின்மை, சிவாகம மிருபத்தெட்டி னொன்று, பொன் மலாம், வெண்மை
விமலன் - கடவுள், சிவன்
விமலாகாசம் - ஞானகாசம்
விமலாத்மகன் - நிர்மலன்
விமலார்த்தம் - நிர்மலம்
விமலி, விமலை - இலக்குமி, சரச்சுவதி, தூர்க்கை, பரிசுத்தவாட்டி, பார்ப்பதி, விந்தை
விமாதிரு - சிறிய தாய்
விமாமிசம் - அசுத்தபோசனம்
விமார்க்கம் - துன்னடை, விளக்குமாறு
விமானம் - அவசங்கை, அளவு, உரோகணி, இராச மாளிகை, ஏழ்நிலை மேடை, ஓர்வகைத் தேர், குதிரை, தேவர் கோயில், தேவலோகம், வாகனம்
விமுகம் - பஹிர்முகம், வெறுப்பு
விமுகிதை - எதிரிடை
விமுக்தம் - விமோசநம்
விமுத்தி - பிரிவு, முத்தி
விமுத்திரம் - தளிர், பூந்தளிர்
விமூட்சஞ்ஞம் - அறிவின்மை
விமோகனம் - அணுப்புதல்
விமோசனம் - ஒழிதல், நிவிர்த்தி, விட்டு நீங்கல்
விமோட்சணம் - விடுதல்
விமோட்சம் - விமுத்தி
விம்ஸகம் - இருபதுகூடியது
விம்ஸதி - இருபது
விற்பகம் - விம்பம்
விம்படம் - கடுகுச்செடி
விம்பபூசை - திருவுருவாராதனை
விம்பப்பிரதிவிம்பபாவம் - விம்பத்திற் கும் பிரதிவிம்பத்திற்கு முடையது
விம்பம் - உருவம், ஒளி, கொவ்வை, சந் திர சூரியர்களின் மண்டலம், சாயை, சாலங்க பாஷாணம், சிவாகம மிருபத் தெட்டி னொன்று, நிழல், பலண்டுறுக பாஷாணம், வட்டம், பிம்பம்
விம்பிகை - கோவைக்கொடி
விம்பித்தல் - சாயை வீசுதல்
விம்பு - கமுகு
விம்மல் - அழுதல், இறுகிப் பொலிதல், ஏங்கல்,ஒலித்தல், கலக்கம், சந்தோஷம், பருத்தல்,இரங்குதல், பொருமுதல்

விம்மிதம் - அச்சம், அதிசயம், உடல்
விம்முதல் - விம்மல்
விய - இருபதாவதாண்டு
வியக்கம் - பெருமை
வியக்கனை - குடிக்கூலி
வியக்தம் - வியத்தம்
வியங்கம் - தவளை, பிறவிமறு
வியங்கியம் - குறிப்பு, குற்றுவார்த்தை, குறிப்புப்பொருள்
வியங்கோள், வியங்கோள் வினைமுற்று - ஐம்பான் மூவிடங்களினு மியலும் வினை அது க-ய-ர்-அல்-அட்டு என்னும் விகுதிகளைப் பெற்றுவரும், ஏவல், ஏவல் கொள்ளல்
வியசனீயன் - வெறிகாரன்
வியசனம் - அரிட்டம், உபத்திரவம், காற்று, குற்றம், விசிறி
வியஞ்சகம் - அபிநயம், எத்து, வெளிப்படுத்துவது
வியஞ்சனம் - அடையாளம், ஒற்றெழுத்து, தாடி, பருப்புத்திரளை, யோனி, கறி
வியடம்பகம் - ஆமணக்கு
வியட்டி, வியஷ்டி - வேறு வேறு பிரித்துக் கூறுவது
வியட்டிரூபம் - தூலரூபம்
வியதம் - வேதனை
வியதிதன் - துக்கிதன்
வியதிபாதம் - கலகம், துன்னிமித்தம், நித்தியயோகத் தொன்று
வியதிரேகம்-எதிர்மறை, விகற்பம், விழுதல், வெதிரேகம்
வியதீகரம் - அபாக்கியம், கலகம்
வியதீகாரம் - மாறு
வியதீபாதம் - நித்யயோகத் தொன்று
வியதை - கஷ்டம், வேதனை
வியத்தகங்கை - கங்காநதி
வியத்தபதம் - தனிச்சொல்
வியத்தம் - அத்தாட்சி, அறிவு, எதிர், கலக்கம், தரிசிக்கத்தக்கது, தெளிவு, பிரதானம், மூலம், விளக்கம், வெளிப்பட்டது
வியத்தல் - அதிசயப்படல், துதித்தல், நன்குமதித்தல், பாராட்டல், புகழ்தல்
வியத்தி - காரியம், வெளிப்படுதல்
வியத்திகை - பெருமை
வியத்தியாசம் - ஓரிடத்துப்பிரிந் தோரிடத்துறல், வித்தியாசம்
வியத்பூதி - அந்தகாரம்
வியநெறி - பெரும்பாதை
வியந்தரம் - பிசாசம்
வியமதேசம் - அவநாணயம், சாட்டு, கபடம்
வியபரோபணம் - நிருமூலம்
வியபிசாரம் - தவறு, தூர்த்தம், தீயொழுக்கம்
வியபிசாரி - வேசி
வியபேட்சை-சாதனை, சேர்மானம், வரவு காத்திருத்தல்
வியப்பித்தல் - அதிசயப்படுத்தல்
வியப்பு - அதிசயம், மெய்ப்பு, வியப்பைக் கூறு மலங்காரம்
வியமம் - துக்கம், வியாமம், பெருமை
வியம் - அகலம், உடல், ஏவல், செலவு, பறவை, பெருமை, வழி
வியயம் - செலவு, பனிரெண்டாமிடம்
வியர்த்தம் - பயனின்மை
வியர்த்தல் - சினக்குறிப்பு, வேர்த்தல், மனம்புழுங்கல்
வியர்ப்பு - சினம், வேர்வை
வியர்வு, வியர்வை - வேர்வை
வியலிகை - பெருமை
வியலிடம் - அகலம்
வியலீகம் - உபாதி, துற்செய்கை, மீறுதல்
வியல் - அகலம், காடு, பெருமை, விரிவு
வியல்கனு - திப்பிலி
வியல்பூதி - வில்வம்
வியவகாரம் - பிணக்கு, முறைமை, வழக்கு, வியாபாரம், விநோதம்
வியவகாரவிதி - நியாயப்பிரமாணம்
வியவசாயம் - முயற்சி, பயிர்த்தொழில்
வியவன் - ஏவுவான், திண்ணியன், வழிச்செல்வோன்
வியனிலையுருவகம் - ஓலங்காரம், அஃது ஒன்றனங்கம் பலவற்றையு முருவகித்து முருவகியாது முரைப்பது
வியனிலைமருட்பா - கைக்கிளை வெண்பா முத லாசிரியமீறாக வருமிடத்தாசிரிய வடியிரண்டேயா யவற்று ளீற்றயலடி யொவ்வாது வருவது
வியனுநாதம் - எதிரொலி
வியனுலகு - தேவலோகம்
வியன் - அதிகம், ஒற்றை, பெருமை, வேறுபாடு
வியன்சமன்சங்கலிதம் - ஓர் சங்கலிதம்

வியன்சமன்பார்த்தல் - பெருமையு மொப் புங் குறித்தல்
வியன்மணி - சூரியன்
வியாகதம் - கலங்கினது
வியாகம் - ஓர் நட்சத்திரம், காற்று, விவா [கம்
வியாகரணம் - கிரந்தவிலக்கணம், அது வேதாங்கத் தொன்று, கலைஞான மறு பத்துநான்கினு மொன்று, விபரம்
வியாகன் - குமரன்
வியாகாதம் - அழிவு, இடையூறு, தடை, நித்தியயோகத் தொன்று, தீங்கு
வியாகாரம் - அவலட்சணம், சத்தம், சரு வுதல், பேச்சு, மாறுதல்
வியாகிருதி - வியாகாரம்
வியாகிருதம் - மாறு, விபரம், பிரிக்கப் பட்டது
வியாகுலம் - கலக்கம், துக்கம்
வியாகுலித்தல் - துக்கப்படல்
வியாகூதி - எத்து, மாயம்
வியாக்கியானம் - உரை, விபரம்
வியாக்கியானன் } உரைகாரன்
வியாக்கியானி }
வியாக்கியாதர் - வியாக்கியானன்
வியாக்கியை - உரை
வியாக்கிரகதி - தாரககதியைந்தி ஞென் [று
வியாக்கிரதலம் - ஆமணக்கு
வியாக்கிரநகம் - புலிதொடக்கி
வியாக்கிரநாயகன் - நரி
வியாக்கிரபாதன் - கௌதமரிஷி
வியாக்கிரபுச்சம் - ஆமணக்கு
வியாக்கிரபுரம் - சிதம்பரம்
வியாக்கிரமம் - ஆமணக்கு, உத்தமம், சிறந்தசொல், புலி, மேன்மை
வியாக்கிரம்-சிறந்தசொல், புலி, மேன்மை
வியாக்கிராசனம் - புலித்தோ லாசனம்
வியாக்கிராசியம் - பூனை
வியாக்கிரி - கண்டங்கத்தரி
வியாசங்கம் - கலக்கம், சேர்த்திக்கை, பிரிவு
வியாசநிந்தை - ஓரலங்காரம்
வியாசம் } உவமை, தந்திரம், தருமநூல்,
வியாஸம் } பதினெட்டி ஞென்று, தா ரணம், நிபம், பகுத்தறிதல், பொல் லாங்கு, மாயம், முகாந்தரம், விரிவு, வேஷம், கட்டுரை
வியாசன் - வேத வியாசன்
வியாச்சியக்கவலை - பனிரெண்டா மிடம்
வியாச்சியம் - வழக்கு

வியாடம் - இலையுணு விலங்கு, பாம்பு
வியாதம் - உபத்திரவம், துயரம், வேறு பாடு
வியாதன் - கீழ்மகன், வியாசன், வேடன்
வியாதாகாரம் - தயாவிருத்தி பதினுன்கி ஞென்று அது துயர கற்றல்
வியாதாமம் } இடி, குலிசம்
வியாதாவம் }
வியாதானம் - வாயில்
வியாதி - கோட்டம், நோய்
வியாதிகாதம் - கொன்றை
வியாதிசாந்தி - வியாதி தீர்த்தல்
வியாதுதம் - அசைவுள்ளது
வியாத்தம் - உறுதி, கலந்திருப்பது, கீர் த்தி, சூழ்வு, நிறைவு, வியாத்தியோடு கூடியது, விரிவு
வியாத்தி - பெறுதல், வியாப்பித்தல்
வியாபகத்துவம் - நிறைந்திருத்தல்
வியாபகம் - எங்கு மிருப்பது, சாதார ணம், சுயதன்மை, வியாபித்தல், வியா பிப்பது
வியாபனம் - வியாபகம்
வியாபாதம் - கேடு நினைத்தல், வஞ்சகம்
வியாபாதனம் - கொல்லல்
வியாபாரம் - அப்பியாசம், செட்டு, தொ ழில், முயற்சி
வியாபாரி - செட்டுச் செய்வோன், தொ ழிற் படுவோன்
வியாபி - எங்கு நிறைந்தது, வியாத்தி
வியாபித்தல் - எங்கு மிருத்தல்
வியாபிருதன் - மந்திரி
வியாபினி - வியாபித்திருப்பது
வியாபுத்தி - வருந்தல்
வியாப்தம் - வியாத்தம்
வியாப்தி - வியாத்தி
வியாப்பித்தல் - சூக்குமமாய்க் கலந்திரு த்தல்
வியாப்பியம் - அருத்தாபத்திப் பொருள், காரணம், கோட்டம், வியாத்தியை யுடையது
வியாமம் - இக்கட்டு, இளைப்பு, ஒளி, சா ந்த குணம், நான்கு முழ அளவு, நிந் தை, புகை, முரஞ்சு, வருத்தம், வழி
வியாமனம் - அங்க சேட்டையின்மை, ம தியாமை
வியாயோகம் - நாடக வகை பத்தினொ ன்று

வியாவகாரிகன் - மந்திரி
வியாவத்தம் - சுழலல், சூழ்தல்
வியாவத்தனம் - வியாவத்தம்
வியாவபாஷி - வாக்குவாதம்
வியாவிருதி - புறம்பு, மறைவு
வியாவிருத்தி - தள்ளுதல், தெரிதல், புகழ்ச்சி, மறைத்தல்
வியாழகேந்திரம்-வியாழ வீதியின் மத்தி
வியாழதிசை - வியாழனுக்குச் செல்லுங் காலம்
வியாழம் - ஓர் கிரகம், ஓர் கிழமை, தேவ குரு, பாம்பு, புலி
வியாழவட்டம் - வியாழத்தின் பன்னிரு வருடச் சுற்று
வியாழன் - வியாழம்
வியாளகம் - வியாளம்
வியாளக்கிராகன் } குறவன், பிடாரன்
வியாளக்கிராகி }
வியாளம் - கெட்ட யானை, பாம்பு, புலி
வியாளாயுதம் - புலிதொடக்கி
வியானபூமி - மயான பூமி
வியானம் - நான்கு முழ அளவு, மயானம்
வியானன்-தச வாயுக்களி லொன்று அது சரீர முழுதும் வியாபித்திருப்பது
வியுட்டம் - நாள், பலன், வைகறை
வியுட்டி - கீர்த்தி, பலன், வத்திப்பு
வியுற்பத்தி-சொற்புணர்ச்சி யிலக்கணம் சொற்பொருளுணரும் வன்மை, விசேட வுற்பத்தி
வியூககாரன் - தையற்காரன்
வியூகபங்கம் - அணிகுலைத்தல்
வியூகபேதம் - அணிமுறிதல்
வியூகம் - உடல், கூட்டம், படைவகுப்பு, விலங்கின் கூட்டம், தர்க்கம், நிர்மித்தல்
வியூகனம் - ஒழுங்கு, சரீரக்கட்டு
வியூட்டி - அணி, ஒழுங்கு
வியோகம் - பிரிதல், விடுதல், சாவு
வியோகி - சக்ரவாகம், பிரிவுடையவன்
வியோடம் - திரிகடுகம்
வியோமகேசன் - சிவன்
வியோமசாரி - இருடி, தேவன், பட்சி, பார்ப்பான்
வியோமசாரிபுரம் - அரிச்சந்திரன் பட்டினம்
வியோமதூமம் - முகில்
வியோமமஞ்சரம் } கொடி
வியோமமண்டலம் }
வியோமமூதம் - முகில்
வியோமம் - ஆகாயம், கோவில், நீர்
வியோமரூபி - அரூபி
விரகாதியன் - விரேகி, வீம்பன்
விரகதம் - வெள்ளைச் சாரணை
விரகதாபம் - காம வருத்தம்
விரகநோய் - காம விகாரம்
விரகம் - காம நோய், தணித்தல், பிரிவு, புலவி, விடுதல்
விரகவேதனை - காம நோய்
விரகறிதல் - பிராய மாதல்
விரகன் - வல்லவன், அறிஞன்
விரகிணி-சம்பளம், தலைமகற் பிரிந்தாள்
விரகிதம் } அழிவு, உச்சாகம், உணர்வு,
விரகு } உபாயம், கதி, சமர்த்து, புத்தி, கபடம்
விரக்தம் - விரத்தம்
விரக்தன் - பற்றற்றவன்
விரக்தி - வைராக்கியம்
விரசனன் - அக்கி, ஓரரக்கன், சந்திரன், சூரியன்
விரசம் - நிந்தை, சுவைக்கேடு
விரசனம் - இணைத்தல், உண்டாக்கல், போதல்
விரசாகீரம் - தொழுவம்
விரசுதல் - நெருங்குதல்
விரஜை - பரமபதத் திப்புறத்தி யாறு
விரச்சனம் - கரவாளம், வெட்டுதல்
விரஞ்சன் - பிரமன்
விரடம் - புயம்
விரட்டுதல் - மிரட்டுதல், ஓட்டுதல்
விரணகம் - ஆமணக்கு
விரணகிருது - சேங்கொட்டை மரம்
விரணம் - புண், விழல்
விரணம்போக்கி - ஆடுதின்னாப்பாளை
விரதங்காத்தல் - நியமம் பேணல்
விரதசங்கிரகம் - விரதத்திற்குச் சங்கற்பித்தல்
விரதநிண்ணயம் - விரத விதி
விரதநியமம் - தீட்சித்தல்
விரதநிறுத்தல் - விரத நிறை வேற்றுதல்
விரதபங்கம் - விரத பின்னம்
விரதம் - ஆணை, காம நோய், தவம் இது புண்ணிய மேழி லொன்று, தின்றல், பொய், வேறுபாடு, நியமம்
விரதயம் - ஒளி
விரதர் - தவத்தோர், துறவோர்

விரதலோபனம் - சங்கற்ப மீறுதல்
விரதவுத்தியாப்னம் - விரத முடித்தல்
விரதன் - யோகி
விரதாசரணம் - விரதா னுட்டிப்பு
விரதாதேசம் - உபவீதம் பூணல்
விரதானுஷ்டானம் - விரத மேற்கொள்ளல்
விரதி - ஒழிவு, துறவி, துறவு, முறை, தவமுடையோன், யாகஞ் செய்பவன்
விரதோபவாசம் - விரதானுட்டிப்பு
விரத்தம் - துறவு, வெறுப்பு
விரத்தன் - விரதி
விரத்தி - துறவு, விருத்தி
விரயம் - பேதி, மிகு செலவு
விரலணி - மோதிரம்
விரலம் - தூரம், நெகிழ்வு, நெற்றி, புளித்த தயிர்
விரலேறு - ஒருவகைத் தோற் கருவி
விரல் - அங்குலி
விரல்நொடி - நாயுருவி
விரவலர் - பகைஞர்
விரவல் - கலத்தல், பொருதல்
விரவார் - பகைவர்
விரவி - வெள்ளரி
விரவு - கலப்பு, விரவென்னேவல்
விரவுதல் - அணுகல், கலத்தல்
விரவுத்திணை - பொதுத் திணை
விரவுப்பெயர் - பொதுப் பெயர்
விரளம் - தயிர், நீக்கம், நெகிழ்வு,மிருது, விசாலம், அவகாசம், இடைவெளி
விரற்சுற்று - நகச் சுற்று
விரற்புட்டில் - விரலுறை
விராகம் - வெறுப்பு, விரும்பின்மை
விராகன் - அருகன், ஓர் பொற்காசு,இச்சை யற்றவன், கடவுள்
விராடம் - ஓர் தேயம்
விராடன் - ஓரரசன்
விராட்டு - அழகு, சுவாயம்புவ மனுவின் பிதா மாதா அது பிரமன் தான் தானே ஸ்திரீ புருட ரூபமாய்த் தோற்றியது பரப்பிரமம், பிரமன், புள்ளரசு
விராணி - யானை, வைரவன்
விராதநம் - பீடை
விராதம் - எதிரிடை, கலக்கடி, கூட்டம், கைவேலை, தடை, நாள்வேலை
விராதன் - ஓர் தைத்தியன், ஓரரசன்
விராதானம் - வருத்தம்
விராதீனன் - கூலிக்காரன், வேலையில்லோன்
விராத்தம் - இறைப்பணம், தண்டல்
விராத்தியன் - சாதிதருமம் விட்டவன், பிரதிலோமத் தந்தைக்கு மனுலோமத் தாய்க்கும் பிறந்தவன்
விராமம் - இளைப்பாற்றி, ஒற்றெழுத்து, தரிப்பு, முடிவு, ஓய்வு
விராயம் - தளபாடம்
விராய் - தலவாடம், விறகு
விராலம் - பூனை
விராலி - ஓர் செடி
விரால் - வரால்
விராவம் - ஒலி
விராவி - சந்திரனுலகு
விராவுதல் - விரவுதல்
விராளி - விரகம்
விரானு - காக்கணம்
விரி-பொதியெருதிலிடுஞ் சேணம், விரியென்னேவல்
விரிகண் - ஓர் கண்ணோய்
விரிகி - நெல்
விரிகுளம்பு - கவைக்குளம்பு
விரிக்கட்டு - சேணம்
விரிசநன் - பிரமன்
விரிசற்குளம்பு - கவைக்குளம்பு
விரிசா - கையாந்தகரை
விரிசிகை-முப்பத்திரண்டு கோவையுள்ள மாதரிடையணி
விரிச்சி - நன்னிமித்தம்
விரிச்சிகம் - விருச்சிகம்
விரிச்சிகன் - சூரியன்
விரிச்சியூர்நன்னாகனர்-புறநானூறுபாடிய புலவரி லொருவர்
விரிஞ்சநம் - காற்று, பரமாத்மா
விரிஞ்சனன் } பிரமன்
விரிஞ்சன் }
விரிஞ்சி - சிவன், பிரமன், விஷ்ணு, புலி வயிற்றிற் பிறந்த ஒரு முனிவன்
விரிதல் - அகலுதல், அலர்தல், ஒளிசெய்தல், பரவல், விசாலித்தல்
விரிதூறு - புதர், பெருந்தூறு, பெரும் பற்றை
விரித்தல் - அலர்த்தல், சொல்லல், பரப்பல், பூசுதல், விரிவாக்குதல், விளக்குதல்
விரித்துரை - விரியுறை, விருத்தியுரை

விரிபுலப்பொருட்டற்குறிப்பணி - ஓரலங் காரம் அஃது உபமானத்திற்கும் உப மேயத்திற்கு முரிய காரணத்தானுப மேயத்தை யுபமானமாகச் சொல்லு தல் [உ-ம்] காமத்தீப்புகை போலு மிருள்
விரிபூடு - பற்படாம், பற்பாடகம்
விரிப்பு - விரித்தல், விரிக்கப்படுவது
விரிமுரண் - இசைப்பாவகையி னொன்று
விரியலர் - மலர்ந்த பூ
விரியல்-ஒளி, பரவல்,மலர்தல், விரிந்தது
விரியன் - ஓர் பாம்பு
விரியுரை - அகலவுரை
விரியுருவகம்-மாட்டேற்றுச் சொல் விரி ந்து நிற்பவுருவகிப்பது [உ-ம்] கொங் கை முகையாக மென்மருங்குல் கொம் பாக,அங்கை மலரா வடிதளிராத், திங் கள், அளிநின்ற மூர லணங்கா மென க்கு, வெளிநின்ற வேனிற் றிரு
விரியுவமை - உவமானமும் உவமேயமும் பொதுத் தன்மையும் உவமை யுருபும் விரிந்து வருவது
விரியூர்அங்கன் } விரியூர்நக்கனார் } இவ்விரு பெயரும் ஒருவர்க்கே யுரியது, இவர் புறநானூறு பாடிய புலவரிலொருவர்
விரிவு - அகலம்
விரீகி - அரிசி, காரேலம், நெல்
விரீகியாகாரம் - களஞ்சியம்
விரீடம் - வெட்கம்
விரீடனம் - மரியாதை, வெட்கம்
விருகத்திரணம் - மூங்கில்
விருகந்தண்டு - ஓர் பயிர்
விருகம் - ஓணாய், காகம், செந்நாய், நரி, மிருகம், இஞ்சி
விருகற்பதி - வியாழம்
விருகற்பாடலி - விளா
விருகற்பாதம் - ஆல்
விருகற்பானு - தீ
விருகாராதி } விருகாரி } சிங்கம், நரி, நாய், புலி, வெருகு
விருகு - ஓர் மரம், வெருகு
விருகோதரன் - பிரமன், வீமன்
விருக்ககண்டம் - ஆரர்மம்
விருக்ககாதனம் - கோடாலி, வாய்ச்சி
விருக்ககுக்குடம் - காட்டுக்கோழி
விருக்கசம் - பல்லி
விருக்கசரம் - குரங்கு, கோட்டில் வாழ் விலங்கு
விருக்கசாயிகை - அணில்
விருக்கசாயை - மர நிழல்
விருக்கதலம் - மரவடி
விருக்கதேனி - புல்லூரி
விருக்கநாதன் - அரசு
விருக்கநிவாசம் - மரவாசம்
விருக்கபவனம் - மரப்பொந்து
விருக்கபாகம் - விருக்க நாதன்
விருக்கபேதி - உளி
விருக்கம் - விருட்சம்
விருக்கலாபம் - நெருஞ்சில்
விருக்கவாடிகை - நந்தன வனம்
விருக்காக்கிரம் - மரநுனி
விருக்காங்கிரி - மரவடி
விருக்காலயம் - பட்சி
விருக்காவாசன் - தவத்தி
விருங்கிதம் - யானைபிளிறுலி
விருசகத்தி - விரியறுகு
விருசம் - இஞ்சி, எலி
விருசனம் - ஆகாயம், உரோமம், பாவம்
விருசினம் - இக்கட்டு, உரோமம், பாவம்
விருசு - ஓர் மரம்
விருச்சலாபம் - நெருஞ்சில்
விருச்சி - சொன் னிமித்தம்
விருச்சிககரணி - தேள் கொடுக்கி
விருச்சிகம்-ஓரிராசி, ஓர் மாதம், சாரணை, நண்டு, மயிர்க்குட்டி, வண்டு, தேள்
விருச்சிகன் - சூரியன்
விருடசத்துரு - விட்டுணு
விருஷணம் - பீசம்
விருடதுவசன் - சன்மார்க்கன், சிவன், விநாயகன்
விருடபகதி - தூரகதி யைந்தினொன்று
விருடபதி - கட்டாக்காலி, சிவன்
விருடபத்துவசன் - சிவன்
விருடபம் } விருஷபம் } எருது, காது, யானைக்காது, வாசகத்திறம்
விருடபாரூடன் - சிவன்
விருடம் - இடபம், எலி, ஓரிராசி, சன் மார்க்கன், தருமம், மயிற்றோகை, மேன்மை
விருடலம் - உள்ளி, குதிரை
விருடலி - கீழ்மக்கள், பன்னிரண்டாண் டிற் பெண், பூப்பதாரி, மலடி
விருடலோசனம் } விருடலோசனன் } எலி
விருடவாகனன் - சிவன்

விருடன் - கன்னன், காமன், சத்துரு, சிவன், விட்டுணு
விருடாகபாயி - இலக்குமி, கவுரி, சசி, சுவாகை
விருடாகாரன் - பூனை
விருடாங்கன் - சிவன், தேவபத்தன்
விருட்சசரம் - குரங்கு
விருட்சநாதன் } அரசு
விருட்சபாகன் }
விருட்சம் - விருக்கம்
விருட்சராஜம் - அரசமரம்
விருட்சவாடிகை - கொல்லை, சோலை
விருஷ்டி - மழை
விருதம்-அழுதல், வெள்ளெருக்கு, நிலக் கடம்பு
விருதர் - படைவீரர்
விருதா - பயனின்மை, பிழை, வீண்
விருதாதானம் - அதமதானம்
விருதி - கேட்குதல், சூழ்தல், தெரிந்தெடுத்தல், மறைத்தல்
விருது - அடையாளம், கொடி, வமிசம், விரதம், வெற்றி
விருதுக்கொடி - வெற்றித்துவசம்
விருதுமோதிரம் - அரசன் வீரம் கல்வி முதலிய கண்டு கொடுக்கு மோதிரம்
விருத்தகங்கை - கோதாவரி
விருத்தகிரி - விருத்தாசலம்
விருத்தசங்கம் - முதியோர் கூட்டம்
விருத்தசேவை-விருத்தாதிகார வந்தனம்
விருத்ததை - எதிரிடை, ஒவ்வாமை, வன்மம்
விருத்தத்தானம் - செய்யுட்டானப் பொருத்தத்தி னொன்று
விருத்தத்துவம் - முதிர்வயசு, முதுமை
விருத்தபலம் - மிளகு
விருத்தபன்னி - பங்கம்பாழை
விருத்தபாவம் - முதிர்வயசு
விருத்தபுட்பம் - கடம்பு
விருத்தபேதம் - ஓரளவைப் பிரமாணம்
விருத்தபோசனம் - விருத்தான்னம்
விருத்தப்பண் - விருத்தராகம்
விருத்தப்பிரபிதாமகன் - முப்பாட்டன்
விருத்தம்-அறிவு, ஆமை, ஒவ்வாநியாயம், ஒவ்வாமை, ஓரளவைப் பிரமாணம், கடினமானது, கிழத்தன்மை, குவியல், சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று, சூதுதாயத் தொன்று, சூழ்ந்தது, செய்தி, தடை, தெரிந்து கொள்ளப்பட்டது, தொழில், நடக்கை, நடந்தேறினது, நிலக்கடம்பு, நூதனம், படித்தது, பழமை, பாவினத் தொன்று,பிரபலியமுள்ளது, பெலன், முதுமை, மூடினது, மூப்பு, வட்டம், விரோதம், வெறுப்பு,வேறுபாடு,பழையது, சரித்திரம், மாறுபாடு
விருத்தரணம் - மூங்கில்
விருத்தர் - கிழவர், மேலோர்
விருத்தவிலக்கணம் - ஓர் பிரபந்தம்
விருத்தன்-அதிகாரி, கிழவன், படித்துத் தேறினவன், முதிர்ந்தவன், விரோதி
விருத்தாங்குலி - பெருவிரல்
விருத்தாசலம் - ஓர் சிவஸ்தலம்
விருத்தாசிரமம் - திரிதல்
விருத்தாதீபகம் - ஓரலங்காரம் அது "வரிவண்டு நாண மதுமலரம் பாகப், பொருவெஞ் சிலைக்குப் பொலிவும், பிரிவின், மிளர்க்கு நிறமுடையார்தம் மேன் மெலிவும், வளர்க்கு மலையாநிலம்'' எனவரும்
விருத்தாந்தம்-இளைப்பாற்றி, கதை, காரியம், சுபாவம், செய்தி, முழுமை, வர்த்தமானம், விதம்
விருத்தாப்பியம் - கிழத்தன்மை
விருத்தாரணியம் - காவியம் வாசிக்குமிடம்
விருத்தான்னம் - பழஞ்சோறு
விருத்தி-அடிமை, அபராதம், இலாபம், ஏறுதல், ஒழுக்கம், ஓரலங்காரம், ஒருரை, குவியல், கூட்டம், சந்தோஷம், சித்தி, செல்வம், தரித்தல், தொழிலிலாபம், நல்லொழுக்கம், நித்திய யோகத்தொன்று, பலன், பாக்கியம்,பிழைப்பு, போங்கு, மருது, வட்டம், வளர்தல், விபரம், வியாபாரம், செயல்
விருத்திசந்தி - நிலைமொழியிறுதி அகர ஆகாரங்கண்முன் ஏகார ஐகாரம்வரில் ஐகாரமும் அவ்விரண்டி லொன்றன் முன் ஓகார ஔகாரம்வந்தால் ஔகாரமும் நிலைமொழியீறும் வருமொழி முதலுங் கெடத்தோன்றல்
விருத்திதானம் - சீவனங் கொடுத்தல்
விருத்தியர் - அடிமைகள்
விருத்திரகன் }
விருத்திரத்துவிஷன் } இந்திரன்
விருத்திரதாரி }

விருத்திரம் - இருள், ஓர் மலை, சத்தம், முகில்
விருத்திரன் - இந்திரன், ஓரசுரன், ஓரிராக்கதன், சத்துரு
விருத்திராரி - இந்திரன்
விருத்திரூபம் - தூலரூபம், வட்டவடிவு
விருத்தை - கிழவி, இது பெண்பருவநான்கினொன்று
விருத்தோக்கம் } எருது
விருத்தோட்சம் }
விருந்தம்-காம்பு, குவியல், கூட்டம், மண்பாண்டமுதலியவற்றின்பாதம், முலைக்காம்பு, விலங்கின் கூட்டம், வேம்பு,
விருந்தர் - அதிதியர், புதியவர் [சுற்றம்
விருந்தனை - மனைவி
விருந்தாகம் - சேம்பு
விருந்தாரகன் - தேவன், பிரதானி
விருந்தாரம் - அழகு, மேன்மை
விருந்தாட்டு - நித்தல்விழாவன்றியாண்டுதோறுஞ் செய்யும் விழைவு
விருந்திடல் - விருந்து கொடுத்தல், விருந்து செய்தல்
விருந்தினர் - அதிதியர், புதியோர்
விருந்து - புதிதாய் வந்தோர்க் குணவு கொடுத்தல், புதுமை, சுற்றம், விருந்தினன்
விருந்துபுறந்தருதல் - விருந்தினர்க் கீய வஞ்சல்
விருந்துவனப்பு - இப்பொழுதுள்ளாரைப்பாடுவது
விருந்தெதிர்கோடல் - விருந்தினரையெதிர் கொள்ளல்
விருந்தை - சலந்தரன் மனைவி, துளசி
விருந்தோம்பல் - வேளாண்மை மாந்தரியல்பினொன்று
விருபன் - வெள்ளெலி
விருப்பம் - ஆசை, பிரியம்
விருப்பின்மை-அவாவின்மை இஃது அறத்துறுப்பினொன்று
விருப்பு - ஆசை, பிரியம், விருப்பம்
விருமன்னியம் - சேங்கொட்டை
விரும்பல் } ஆசைப்படுதல், கருத்து
விரும்புதல் }
விருவிருத்தல் - சீக்கிரக்குறிப்பு
விருவிருப்பு - நஞ்சுமுதலியவேறுங் குறிப்பு
விருவிரெனல் - சீக்கிரக்குறிப்பு [ப்பு
விருளை - கடிவாளப்பூண்
விரூட்சணம் - ஆணை, குற்றச்சாற்று
விரூபகரணம் - சந்தக்கேடு செய்தல்
விரூபகரூபகம் - ஓரலங்காரம் அஃது ஒருபொருட்குக் கூடாத தன்மை பலவுங்காட்டி யுருவகஞ் செய்வது [உ-ம்] தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்துவை கா துமலரும் அரிவை வதனம்புயம்
விரூபம் - அந்தக் கேடு, குணபேதம், விகாரரூபம், வேற்றுமை
விரூபாக்கன் } சிவன், பன்னோ ருருத்திரர்களி லொருவன்
விரூபாட்சன் }
விரூபி - யமன்றேவி, வடிவற்றஆள்
விரூபை - இயமன் மனைவி
விரேகம் - கழித்தல்
விரேசனம் - கழித்தல், பேதி, பேதிமருந்து, விடுவித்தல்
விரேசித்தல் - கழிதல்
விரேபம் - ஆற்றுப்பொது, ஓராறு
விரை - கலவைச்சாந்து, தூபம், நறும்புகை, பூந்தேன், வாசனை, வித்து,விரையென்னேவல்
விரைசீரம் - வாசனையான சீரகம்
விரைதல் - விரைவு, விரைவு செய்தல், வெயில், வேண்டல்
விரைத்தல் - விதைத்தல், பரிமளித்தல்
விரையன் - பனிரெண்டாமிடம்
விரைவு - வேகம்
விரோகம் - பொந்து
விரோசநசுதன் - மஹாபலி
விரோசநி - ஓர் நதி
விரோசனசுதன் - வாலி
விரோசனன் - அக்கினி, சந்திரன், சூரியன், பலிச்சக்கிரவர்த்தி தந்தை
விரோதச்சிலேடை - முன்னர்ச் சிலேடித்துவந்தவற்றைப் பின்னரும் விரோதிப்பச் சிலேடிப்பது
விரோதம் - அதிட்டவீனம், எதிர், ஒவ்வாமை, ஓரலங்காரம், சூழ்தல், பகை, போர், வன்மம், வேற்றுமை
விரோதஸ்தானம் - எட்டாமிடம்
விரோதவுவமை - ஓரலங்காரம் அஃது உபமானோப மேயங்கடம்மு ளொன்றற் கொன்று பகையனவெனக் கூறுவது [உ-ம்] செம்மை மரைமலருந் திங்களு நும்முகமுந், தம்முட் பகைவிளைக்குந் தன்மையவே
விரோதனம்-எதிரிடை, ஒவ்வாமை, கோபமூட்டல், தடை, பகை
விரோதாபாசம் - ஓரலங்காரம்

விரோதாலங்காரம் - மாறுபட்ட சொல்லானும் பொருளானு மாறுபடுந் தன்மை விளைவு தோன்றவுரைப்பது
விரோதி - இருபத்து மூன்றாவதாண்டு, எதிரி, சத்துரு, விரோதி என்னேவல்
விரோதிகிருது - நாற்பத் தைந்தாவதாண்டு
விரோதித்தல்-பகைத்தல், வேற்றுமைப் படுதல்
விரோதோத்தி - எதிர்பேச்சு
விலகல் } எறிதல், நீங்கல்
விலகுதல் }
விலக்கணம் - திருட்டாந்தமற்றது, வித்தியாசம்
விலக்கம் - மாற்றல், விலங்குந்தன்மை
விலக்கு - தவிர்ப்பு, மறிப்பு, வழு, விலக்கென்னேவல், விலக்கல், விலக்குவது
விலக்குதல் - தவிர்த்தல், மறித்தல்
விலக்குருவகம் - ஓரலங்காரம் அஃது உருவகிக்கிற பொருளினியல்பை விலக்கி உருவகிப்பது [உ-ம்] மலையிற் பயிலா மடமஞ்ஞை
விலக்குவமை - ஓரலங்காரம் அது முன்னியமித்த வுவமையின் குறைகளை எடுத்துக்காட்டி யுவமைப் பொருட்கு ஒப்பல்ல வென்பதுபடப் புணர்ப்பது
விலங்கரசு - சிங்கம்
விலங்கல் - கலங்கனீர், மலை, விலகுதல், வளைதல்
விலங்கு - தடை, தளை, மிருகம், விலங்கென்னேவல், குறுக்கு, குறுக்கிட்டுக் கிடத்தல்
விலங்குதல் - எறிதல், துலங்கல், விலகல்
விலசனம் - விநோதவிளையாட்டு
விலசிதம் - இலீலாவிநோதம்
விலட்சணம் - மேன்மை, பிங்கம்
விலட்சத்துவம் - அடையாள மின்மை, அதிசயம்,பகுத்தறிவின்மை, வெட்கம்
விலட்சயம் - அபாவவியல்பு
விலத்தல் } நீக்குதல், நீங்குதல்
விலத்துதல் }
விலபனம் - மழலை
விலம் - அகில், குகை, பொந்து, பள்ளம், துளை, பிலம்
விலம்பனம் - தாமதம்
விலம்பம் - தாமதம், தூங்குதல், நன்கொடை, கொடுத்தல்
விலம்பிதம் - தாமதம் [தம்
விலயம் - அழிவு, உருக்குதல், உலகாந்
விலயனம் - அகற்றுதல், அழித்தல், உருகுதல்
விலா - பழு
விலாக்கொடி - எலும்பு
விலாங்கு-பாம்பு போன்ற ஓர்வகை மீன்
விலாசகானனம் - விநோத தானம்
விலாசமந்திரம் - விநோதாலயம்
விலாசம் - அழகு, ஆடவர் மகளிர் விளையாட்டு, இலீலாபிநயம், நாணக் குறிப்பு, பத்திரிகையின் புறவெழுத்து, பொழுது போக்கு, விளையாட்டு, விநோதம், வேடிக்கை, பிரகாசம்
விலாசனை - மகளிர் விளையாட்டு
விலாசி - காமன், சந்திரன், சிவன், திருமால், தீ, பாம்பு
விலாசினி - பெண், வேசி
விலாடித்தல்-இரட்டை வரி கொடுத்தல்
விலாத்தோரணம் - என்பு
விலாபம் - கனவு கண்டிரங்கல், புலம்பல், அழுதல்
விலாமிச்சை } ஓர் வாசனைப் புல்
விலாம்மிச்சை }
விலாய் - கட்டம்
விலாலம் - இயந்திரம், பூனை
விலாவனை - அழுகை
விலாவம் - அழுகை
விலாவித்தல் - அழுதல்
விலாழி - குதிரை வாய் நுரை, யானைக் கை யுமிழ் நீர்
விலாளம் - ஆண் பூனை, பூனை
விலீனம் - அழிந்தது, உருக்கப்பட்ட கலக்கப்பட்டது
விலூபன்னி - பெருங் குரும்பை
விலேசயம் - எலி, குகை, பாம்பு, முயல்
விலேபம் - சாந்து, பூச்சு
விலேப்பனம்-பூசுதல், வாசனை, வாசனைச் சாந்து பூசுதல்
விலேபி - கஞ்சி
விலை - கிரயம், விற்றல்
விலைகட்டுதல் - விலை மதித்தல்
விலைகாரர் - கொள்வோர்
விலைகுறித்தல் - விலை மதித்தல்
விலைகூறுதல் - விலையைப் பல முறையுஞ் சொல்லல்
விலைக்கிரயம் - விலை

விலைச்சரக்கு } விலைப் படுத்த வைத்தி
விலைச்சாமான் } ருக்கும் பொருள்
விலைஞர் - செட்டிகள், விற்பவர்
விலைதீருதல் } விலைநிதானித்தல், விலை
விலைதீர்தல் } உறுதியாதல்
விலைதீர்த்தல் }
விலைபேசுதல் - விலைசொல்லல், விலை நிதானித்தல்
விலைபோடல் - விலைகுறித்தல்
விலைபோதல் - விலைப்படல்
விலைப்படல் } விற்கப்படல்
விலைப்படுதல் }
விலைப்படுத்தல் - விற்குதல்
விலைப்பண்டம் - விலைப்பொருள்
விலைப்பருவம் - விலையின்முறைமை
விலைமகள் - வேசி
விலைமானம் - விலைபடுதற்கான மதிப்பு
விலையாளர் - விலையிடுவோர்
விலையுணி - அலட்சியமான ஆள்
விலையுயர்தல் - விலையதிகப்படல்
விலைவைத்தல் - விலைகுறித்தல், விலை யேற்றுதல்
விலோகணியதை - அழகு
விலோகநம் - பார்வை
விலோசனபாதம் - பார்வை
விலோசனம் - கண், பார்வை
விலோசனம்பு - கண்ணீர்
விலோடனம் - உருளுதல், கலக்குதல்
விலோடிதம் - மோர்
விலோதம் - துகிற்கொடி, பெண்மயிர், மயிற்குழற்சி
விலோதனம் - துகிற்கொடி, பெருங்கொ[டி
விலோபம் } அழிவு, இழுத்தல், கலக்
விரோலபனம் } குதல், புகழ்ச்சி, மயக்கம்
விலோமாத்திரைராசிகம் - குறுகு முத் தொகை வினை
விலோமம்-நீரியந்திரம், நீர், பாம்பு, பின் முறைபிழத்தல், விபரீதம்
விலோமவிதி - ஒழுங்குதப்பின முறை
விலோமன் - வருணன்
விலோலதை - உறுதியின்மை
விலோலம் - சஞ்சலம்
வில் - ஒளி, சேரன்கொடி, தனு, மூல நாள், வில்லென்னேவல்
வில்கண்டம் - பலபந்தம், முட்டு
வில்ஞாண் - விற்கயிறு
வில்லங்கம் - தடை, பலபந்தம், முட்டு, வியாச்சியம்
வில்லடை - இடையூறு, எதிரித்தனம்
வில்லண்டம் - வில்கண்டம்
வில்லம் - குகை, பெருங்காயம், வில்வம், பாத்தி
வில்லவன் - சேரன்
வில்லாச்சிரமம் - விற்பரிட்சை
வில்லாண்மை - வில்வல்லமை
வில்லார் - வில்லுடையார், வேடர்
வில்லி - மன்மதன், விசையன், விற்போ ராளன், வீரபத்திரன்
வில்லிபுத்தூரன் - ஓர் கவிஞன் பாரதம் பாடியவரி லொருவர்
வில்லியர் - வில்வல்லோர்
வில்லுகன் - சிற்றுமுட்டி
வில்லுவம் - வில்வமரம்
வில்லூதி - ஓர் சகலாத்து
வில்லேருழவர் - படைவீரர், வில்வீரர்
வில்லை - அடை, அண்டை, தகட்டுவட் டம், வட்டித்தது, வில்வம்
வில்லைமுருகு - ஓர் காதணி
வில்வஞ்சாத்துதல் - தெய்வங்கட்கு வில் வஞ் சாத்தி யருச்சித்தல்
வில்வமாலை - பொன் வெள்ளிகளாற் செ ய்யு மோர்வகை மாலை
வில்வம் - ஓர் மரம், இது தசமூலத்தொன் று, மாலூகம், கூவிளம், விட்டில், பசு, நாய்
வில்வல்லவன் - வில்லாச்சிரமி
வில்வளைவு } வில்லாகாரமான வளைவு
வில்வாங்கல் }
வில்வித்தை - வில்லாச்சிரமம்
விவகரித்தல் - நியாயஞ் சொல்லுதல்
விவகலனம் } கழிவுக்கணக்கு
விவகலிதம் }
விவகாசம் - சிரிப்பு
விவகாரதரிசனம் - நீதம் விசாரித்தல்
விவகாரஸ்தானம் - நீதாசனம்
விவகாரம் - நீதியதிபதித்துவம், பிணக் கு, முப்பொருளினொன்று, அது பொ ருளீட்டல், தொழில், வழக்கு, வள மை, வழக்கம்
விவகாரவிதி - நியாயப்பிரமாணம்
விவகாரி - வழக்காளி
விவகாரிகம் - வழக்கம், வழக்கு, விவ கார சம்பந்த முடையது
விவசம் - கீழ்ப்பட்டது, பரவசம், பற்றி லாமை, மரணவிருப்பம்
விவசாயம் - வேளாண்மை, பயிர்த் தொ ழில், முயற்சி

விவசுதன் - சூரியன்
விவச்சுவான் - சூரியன்
விவஸ்வதி - சூர்யநகரம்
விவட்சை - விருப்பம்
விவதம் - காத்தண்டு, குவித்தல், சுமை, தெரு
விவத்து - விபத்து [பாடு
விவஸ்தை - பகுத்தறிவு, நன்னிலை, ஏற்
விவத்தை - ஆபத்து
விவம் - ப்ரகாசம்
விவரணம் - விபரம், வியாக்கியானம், விவரம்
விவரம் - உட்டுளை, குகை, குறை, பிரிவு, வகை, விருத்தாந்தம்
விவரிதம் - விபரிதம்
விவரித்தல் - பகுத்துச் சொல்லல்
விவருணம் - தீழ்ப்பு, துன்னிறம்
விவர்ணன்-நீசன், விவேக மில்லாதவன்
விவர்த்தம் - ஆடல், கூட்டம், சுற்றி வருதல், தப்பிதம், திரிவு
விவர்த்தரூபம் - மாயா ரூபம்
விவர்த்தனம் - சுழலல், சுற்றிவரல், திரும்புதல், பிரித்தல், புரளல், வருத்திப்பு, விபரீத உணர்வு, வளர்தல்
விவர்நாலிகை - மூங்கில்
விவாகம் - மணம்
விவாகரணம் } ஊருக்குப் புறப்படுத்தல்
விவாசம் } ஊருக்குப் புறப்படுத்தல்
விவாசனம் } ஊருக்குப் புறப்படுத்தல்
விவாதம் - சொற்கலகம், தருக்கம், வழக்காடுதல்
விவாரம் - விரிதல்
விவிக்தம் - ரஹஸ்யம்
விவிதம் - பலவிதம்
விவிருதி - விவரம்
விவ்ருதி - சுழலல், வருத்திப்பு
விவேகசிந்தாமணி - ஓராகம நூல்
விவேகசூனியம் - அறிவின்மை
விவேகதை - புத்தி
விவேகம் - ஆராய்வு, பகுத்தறிவு, புத்தி, மனக் கூர்மை
விவேகி - சூரியன், புத்தி மிகுந்தோன்
விவேகிதை - ஆராய்வு, பகுத்தறிவு
விவேகித்தல் - மட்டுக் கட்டல்
விவேசனம் - ஆராய்வு, பகுத்தறிவு
விழப்போத்தி - வட்டத் திருப்பி
விழம்பு - சோறு
விழலர் - வீணர்
விழலாண்டி - வீணன்
விழல் - ஓர் புல், விழுதல், வீண்
விழவு - திருவிழா, மிதுனவிராசி, அகங்காரம்
விழற்கட்டு - புல்வீடு, வீடு
விழா - திருவிழா, மங்கலச் சடங்கு
விழாலரிசி - ஓர் மருந்து
விழால் - விழாலரிசி
விழி - கண், கண்மணி, விழியென்னேவல், விழுதி
விழிதுறை - பாரம், வழிவகை
விழித்தல் - அருண்டெழுதல், உருட்டிப் பார்த்தல், கண்டிறத்தல், பார்த்தல், விளங்குதல்
விழிப்பு - எச்சரிக்கை, சாக்கிரதை, துயிலொழிவு, தெளிவு
விழியன் - பெருங்கண்ணன்
விழுவிழுங்கி - கண்ணோயு ளொன்று
விழுகுதல் - வீழ்தல்
விழுகை - விழுதல்
விழுக்காடு - குறைவு, சகட்டுவிலை, தூக்கம், வசக்கேடு, விதம், விழுதல், வேறுபாடு
விழுக்கு - நிணம், கொழுப்பு
விழுங்கல் - நுங்குதல், பட்சித்தல்
விழுசுமை - வலுசுமை
விழுதல் - சாதல், வீழல்
விழுதி - ஓர் மரம்
விழுது - ஆலமர முதலியவற்றின் வீழ், ஆழம்பார்ப்பதற்கான கயிறு, நெய் வார் கருவியி லொன்று, வெண்ணெய், நெய்
விழுத்தம் - கருஞ்சீரகம்
விழுபாலை - ஓர் கொடி
விழுப்பகை - பெரும்பகை
விழுப்பம் - ஆசை, குலம், சிறப்பு, நன்மை, மேன்மை
விழுப்பழி - பெரும்பழி
விழுப்பு-அனுசாரம், தீட்டு, நீக்கற்பாலது
விழுப்பொருள்-நுண்ணியபொருள், மேன்மையான பொருள்
விழுமம் - இடும்பை, சிறப்பு, சீர்மை, நன்மை, துக்கம், வருத்தம்
விழுவிழெனல் - பசைபிடியா திருத்தல்
விழை - கரும்பு
விழைச்சு - இளமை, புணர்ச்சி
விழைதல் - ஆசைப்படல், ஆசைப்பெருக்கம், புணர்தல்

விழைந்தோர்-கணவர், சினேகிதர், விரு ம்பினோர்

விழைவு - ஆசைப்பெருக்கம், உள்ளோசை, கலத்தல்

விளகம் - சேங்கொட்டை

விளக்கணம்-பொடிவைத்து விளக்குதல்

விளக்கணி - ஓரலங்காரம் அஃது உபமானமு முபமேயமு மொரு தருமத்தின் முடிதல்

விளக்கம் - சந்திரனுள், தெளிவு, விசாரணை, சேங்கொட்டை, விளக்கம், பிரகாசம், விளங்குதல்

விளக்கல் - அழுக்கு நீக்கல், ஒட்டவைத்தல், தெளிவித்தல், பிரகாசிப்பித்தல், மினுக்குதல்

விளக்கவொலி - பொருடருமொலி

விளக்கறை - தீபமேற்று மாடம்

விளக்கீடு-ஓர் தினம் அது சருவாலய தீபமேற்றுதல்

விளக்கு-அட்டமங்கலத்தொன்று அஃது ஆலாத்தி, ஒளி, சோதிநாள், தீபம், விளக்கென்னேவல்

விளக்குக்கூடு - விளக்குத்தகழி

விளக்குதல் - விளக்கல்

விளக்குத்தகழி - விளக்கக்கல்

விளக்குத்தண்டு - விளக்குத்தாள்

விளக்குநிலை-ஓர் பிரபந்தம் அது வேலும் வெற்றிலையும் விலங்கா தோங்கிய வாறுபோலக் கோலொடு விளக்கு மொன்றுபட் டோங்குமா றோங்குவதாகக் கூறுவது

விளக்குநிறுத்துதல் - விளக்கணைத்தல்

விளக்குப்பாதம் - விளக்குத்தண்டு

விளக்குமாறு - துடைப்பம்

விளக்கெண்ணெய் - ஆமணக்கெண்ணெய், விளக்கிடுமெண்ணெய், வேப்பெண்ணெய்

விளக்கேற்றல் - தீபம் வைத்தல்

விளக்கொளி - தீபப்ரகாசம்

விளங்கம் - வாயு விளங்கம்

விளங்கல் - ஒளிசெய்தல், தெளிதல்

விளங்கிழை - பெண்

விளங்கு - சிற்றரத்தை

விளங்குதல் - விளங்கல்

விளங்குதிங்கள் - சுக்கிரன்

விளத்தல் - விபரித்தல், விலகுதல்

விளத்தாரு - அடம்பு

விளத்துதல் - விலத்துதல்

விளம்பம் - தாமதம்

விளம்பரம்-அறிக்கைப்பத்திரம், விளக்கம்

விளம்பல் - சொல்லல், விசாரித்தல்

விளம்பனம் - தாமதம்

விளம்பி-கள், முப்பத்திரண்டாவதாண்டு

விளம்பிதம்-தாமதம்,தாமதப்பட்டு மூற்றுதல், அது தாளப்பிரமாணத்தொன்று

விளம்பிநாகனர்-பதினெண்கீழ்க்கணக்கிலொன்ருய் நான்மணிக்கடிகை யியற்றிய புலவர்

விளம்புதல் - விளம்பல்

விளரி - இளமை, ஏழிசையி னொன்று அது நெஞ்சாற் பிறப்பன, நெய்தனிலத்தியாழ், மிகுதி, யாழினோர் நரம்பு, யாழ், வேட்கை, கொழுப்பு

விளரிப்பாலை - ஓரிசை

விளர்-இளமை, கொழுமை, நிணம், வெண்மை

விளர்த்தல் - வெளுத்தல்

விளர்ப்பு - வெளுப்பு

விளவு - கமர், விளவென்னேவல், விளாமரம், வேறுபடல்

விளவுதல் - விளாவல்

விளா - விளாமரம்

விளாகம் - போர்க்களம்

விளாக்கைத்தல் - உழுதல்

விளாசம் - விலாசம்

விளாத்தி - விளா

விளாப்பு - பிறர்க்குப் பங்கில்லாதது

விளாம்பூச்சி - ஓர் சித்திரப்பூச்சி

விளாவல் - கலத்தல், உழுதல்

விளி - அழைப்பு, எட்டன் வேற்றுமை, ஏழிசையி னொன்று, விளியென்னேவல், இசைப்பாட்டு, ஓசை, கொக்கரிப்பு

விளிதல்-கெடுதல், கோபித்தல், சாதல், மறிதல், வருத்தப்படல்

விளித்தல் - அழைத்தல்

விளிம்பு - அருகு, கண்ணிமை, கரை

விளிம்புதெற்றி - கரைத்திண்ணை

விளிவித்தல்-அழைப்பித்தல், கொல்லல்

விளிவு - கோபம், சாவு, கேடு

விளை - ஓர்மீன், கொல்லை

விளைகரி - நிலக்கரி

விளைச்சல் - விளைவு

விளைஞர் - மருதநில மாக்கள்

